# நான் கண்ட மகாத்மா



தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள்
எழுதியது





ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயம் போஸ்டு
கோயமுத்தூர் ஜில்லா

# நான் கண்ட மகாத்மா

தி. சு. அவிநாசிலிங்கம் அவர்கள்
எழுதியது




ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயம் போஸ்டு
கோயமுத்தூர் ஜில்லா

# சமர்ப்பணம்

மகாத்மா காந்தி அடிகளுக்கும்,
அவர் திருத் தொண்டர்களுக்கும்.



# அட்டவணை

# முதல் பதிப்பின் முகவுரை

ஒருவனுடைய தாயும் தந்தையுமே அவனை அடிப்படையாக உண்டாக்குகிறவர்கள். அவனுடைய முதல் எண்ணங்கள், கருத்துக்கள், லட்சியங்கள், பழக்க வழக்கங்கள் முதலியவற்றை அவன் அவர்களிடமிருந்தே பெறுகிறான். அங்ஙனமே என் வாழ்க்கையிலும், என் தாயும் தந்தையும் எனக்கு ஊனும், கருத்தும் கொடுத்து வளர்த்திருக்கிறார்கள். என் தாயார் அதிகம் படித்தவர் அல்ல. ஆனால் படிப்பு வேறு, பண்பு வேறு என்பது, அறிவு வளர வளர நாம் அறியும் உண்மை. உண்மைப் பண்பு உண்டாக்குவதே உண்மைப் படிப்பின் நோக்கமும் பயனுமாகும். அங்ஙனம் உண்டாக்காவிடில் அது அகந்தை வடிவில் முள் புதர்போல் அருகில் வருபவர்களைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும். படிப்பின்றியே உயர்ந்த பண்பு பெற்ற தாய்மார்கள் பலர் இந்நாட்டில் உளர். அவர்கள்தாம் இந் நாட்டின் உன்னதமான நாகரிகத்தையும், கலாசாரங்களையும் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். அத்தகையவர்களில் ஒருவர் என் தாயார். அவர்களிடமிருந்த பரிவும், பண்பும் உயர்ந்தவை. அவர்கள் ஓயாது நோயால் வருந்தினார்கள். ஆனால் ஒரு கடுமையான வார்த்தைகூட அவர்கள் வாயிலிருந்து வந்ததில்லை. பிறர் நோவக் கண்டு அவர்கள் சகிக்கமாட்டார்கள். அவர்கள் அன்புக்கும் சகிப்புத் தன்மைக்கும் எல்லையே இல்லை எனலாம். என் தந்தையும் தற்காலப் பொருள்படி படித்தவர் அல்ல. ஆனால் அறிவு நிறைந்தவர். ஊர்முழுதும் அவரிடம் யோசனை கேட்க வருவார்கள். இவர்களுடைய அன்பும், ஆர்வமும் என் வளர்ச்சிக்கு மாறாத அடிப்படையாக என்றும் இருந்து வரும்.

என் வாழ்க்கைக்குரிய லட்சியத்தைக் காட்டும் வகையில் இரண்டு சக்திகள் இன்னும் அதிகமாக என்னை உண்டுபண்ணியிருக்கின்றன. இவைகளில் முதலாவது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவர் சீடர்களும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் மறைந்து இப்பொழுது சுமார் முக்கால் நூற்றாண்டு ஆகிறது. அவர் இன்று லட்சக்கணக்கான மக்களுக்கு ஒளி கொடுக்கும் அருட்சுடராக விளங்கு

கிருர். அவர் சீடர்களைத் தரிசித்துப் பழகியவர்கள் அவர்கள் பரிசுத்தத்தை உணருவார்கள். அவர் சீடர்கள் பலரைக் கண்டு வணங்கும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறது. அவர்களில் முக்கியமானவர்கள் ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளும், சிவானந்த சுவாமிகளும். முன்னவரிடம் அதிகம் பழகவில்லை; பின்னவரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. இவர்கள் வாழ்க்கையில் படபடப்பும் படாடோபமும் இல்லை. சரித்திரத்தில் எழுதக்கூடிய செய்கைகளும் இல்லை எனலாம். ஆழ்ந்த அன்பும், அடக்கமும், நிறைந்த கனிவும், ஆண்டவன் திருநாமமுமே இவர்கள் ஆயுதங்களாயும் அடிப்படைச் சக்தியாயும் இருந்தன. பனி எவரும் காணுமல் பாராமல் இரவில் நிசப்தமாகப் பெய்து உலகிலுள்ள செடி கொடிகளிலுள்ள புஷ்பங்கள் அனைத்தையும் மலரவைப்பதுபோல், இவர்கள் அன்பு அனைவர் மனத்யையும் மலரவைத்தது. இந்த அன்பின் தன்மையையும் அதன் பயனையும் அதை அனுபவித்தவர்கள்தான் உணர முடியும். அதை வருணிப்பது அல்லது அதைப்பற்றி எழுதுவது கடினமான காரியமாகும்.

என் வாழ்க்கையில் நான் பெற்று அடங்கி ஆழ்ந்த மற்ருெரு சக்தி மகாத்மா காந்தி. அவர், புயல் காற்று மாதிரி இவ்வுலகில் தோன்றித் தம் செய்தியை அளித்து மறைந்தார். அவர் வாழ்க்கையால் வளம்பெற்றவர்கள் கோடிக்கணக்கானபேர்; லட்சக்கணக்கான பேர் அவர் மூலம் உயர்ந்த லட்சியங்களை அறிந்து சிறந்தவர்களானுர்கள். ஆயிரக்கணக்கான பேர் அவரிடம் நெருங்கிப் பழகி உயர்வு பெற்றுர்கள். அப்பேறு பெற்றவர்களில் நானும் ஒருவன் என்ற எண்ணம் மனத்தில் பூரிப்பை உண்டாக்குகிறது. அதுவே இவ் வியாசங்களையும் எழுதும்படி தூண்டிற்று. இப் புனித எண்ணங்களை மற்றவர்களுடன் சேர்ந்து அநுபவிக்க வேண்டுமென்ற கருத்துடனே இவை எழுதப்பெற்றன.

இவ் வியாசங்கள் அனைத்தும் ஒரே சமயத்தில் எழுதப்படவில்லை. பின்ஞல் புத்தக ரூபமாய் வரக்கூடுமென்ற எண்ணம் இருந்தபோதிலும் அவ்வப்போது அவசரத்தில் சில பத்திரிகைகளுக்காக எழுதியவை. கல்வி மந்திரியாக இருந்தபோது அவசர அலுவல்களின் மத்தியிலும், வித்யாலய அலுவல்களிடையே

என் அருமைக் குழந்தைகளுக்கு மத்தியிலும் இவை எழுதப் பட்டன. சில சமயங்களில் ரெயிலிலும், விமானத்திலும் பிரயாணத்தின்போது நேரம் கிடைத்தபோது எழுதப்பெற்றன. இம் முகவுரை இப்பொழுது காசியில் ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா சிரமத்தில் இளைப்பு நோய்க்கு இடையே எழுதப்படுகிறது. இதை மறுபடியும் படித்துப் பார்த்துத் திருத்துவதற்கு அவகாச மும், பொறுமையும் எனக்கு இல்லை. அப் பணியைச் செய்யக் ‘கலைமகள்’ ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்கள் முன் வந்தார்கள். அவருக்கு எனது நன்றி உரியது. இதை மகாத்மா ஜியைப் பின்பற்றி, சுதந்திரப் போரில் ஈடுபட்டு என்னுடன் சேர்ந்து உழைத்த நண்பர்களுக்கு அர்ப்பணம் செய்யவேண்டு மென்று தோன்றிற்று. அங்ஙனம் யோசனை செய்ததில் ஸ்ரீ கே. சுப்ரி, ஸ்ரீ சி. பி. சுப்பையா, ஸ்ரீ கே. கே. சுப்பண்ண கவுண்டர், ஸ்ரீ நா. ம. ரா. சுப்பராமன் ஸ்ரீ அ. வேதரத்தினம் பிள்ளை, ஸ்ரீ சி. சுப்ரமண்யம், ஸ்ரீ ஆர். எம். குமாரசாமி, ஸ்ரீ ஜி. வேலப்ப நாயுடு முதலியவர்கள் பெயர்கள் ஞாபகத்திற்கு வந்தன. அத்துடன் எனக்கு இளம் வயதில் மகாத்மா காந்திபால் பக்தியை ஊட்டிய என் தமையனார் தி. சு. கந்தசாமிசெட்டியார் அவர்களையும் நான் மறக்கமுடியாது. இங்ஙனம் பெயர்களின் எண்ணிக்கை அதிகமாகவே, இவ்வனைவருக்கும் உயர்ந்த லட்சியத்தைக் காட்டி, ஆண்ட அப்பெருமான் காந்தியடிகளுக்கே அர்ப்பணம் செய்வது ஏற்றதென நினைத்தேன். அச்சமயம், ‘ஆண்டவன் தொண்டர்தம் உள்ளத்து அடக்கம், தொண்டர்தம் பெருமை சொல்லலும் அரிதே’ என்ற வார்த்தைகள் ஞாபகத்திற்கு வந்தன. எனவே, காந்தி அடிகளுடன் சேர்ந்து நின்ற எண்ணிறந்த உண்மைத் தொண்டர்களுக்கு, இச்சிறு நூலை அர்ப்பணம் செய்கிறேன்.

அன்பும் சேவையும் தூய்மையும் பக்தியுமே மகாத்மாஜி உலகிற்களித்த செய்தியாகும். அவர் காட்டிய பெரு நெறியைப் பின்பற்றி உய்வோமாக!

சென்னை
1—4—’50 } **தி. சு. அவினாசிலிங்கம்**

# மூன்ரும் பதிப்புக்கு முகவுரை

இந்நூல் இரண்டு பதிப்புகள் தீர்ந்து மூன்ரும் பதிப்பு வெளி வருவது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். காந்தி அடிகள் மறைந்து சுமார் பதினைந்து ஆண்டுகள் ஆகின்றன. இப் பதினைந்து ஆண்டுகளில் பல நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன. நாடு பல துறைகளில் முன்னேறியிருக்கிறது. இன்னும் நாம் செய்யவேண்டிய காரியங்களும், முன்னேற வேண்டிய துறைகளும் பல உள. பொருளாதாரத் துறையில் மாத்திரம் முன்னேறுவது நாட்டின் நிரந்தர நன்மைக்கு வழி செய்யாது என்பதற்கு அறிகுறிகள் பல இருக்கின்றன. அத்துடன் காந்தி அடிகள் வகுத்த ஆன்மீக நெறியும், ஒழுக்க முறைகளும் நாட்டின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாக இருக்கின்றன.

எனவே அவர் செய்தியைப்பற்றி அறிந்து ஆராய்ந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளுதல் முன்னைவிட இப்பொழுது அவசியமாக இருக்கிறது. காந்தி நூல்கள் பல தொகுதிகளாக காந்தி நூல் வெளியீட்டுக் கமிட்டியால் வெளியிடப்பட்டு வருவது இதற்கு உதவியாக இருக்கின்றது. அவற்ருேடு அவருடன் பழகிய அனுபவங்கள் அவர் கொள்கைகளையும், அவருடைய மகத்தான உயர்ந்த தன்மைகளையும் புரிந்துகொள்ள உதவியாக இருக்கின்றன. அவ்வகையில் இந்நூல் தொடர்ந்து பயனிடுமென எதிர்பார்க்கப்படுகிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன்
வித்யாலயம்
கோவை ஜில்லா
13—1—62

தி. சு. அவினாசிலிங்கம்




வித்யாலயத்தில் மகாத்மா




# நான் கண்ட மகாத்மா

## 1. முதல் தரிசனம்

1919 அல்லது 1920 ஆம் வருஷம் நான் ஜூனியர் இண்டர்மீடியட்டில் படித்துக்கொண்டிருந்தேன். சென்னையில் வந்து படிப்பு ஆரம்பித்த முதல் வருஷம் அது. மகாத்மா காந்தி ரௌலட் சட்டத்தை எதிர்த்து அப்பொழுது கிளர்ச்சி ஆரம்பித்தார். இந்தியா முழுவதும் அது சம்பந்தமாக ஒரு சுற்றுப் பிரயாணம் செய்தார். அச்சமயம் சென்னைக்கும் வந்தார். அவருடன் மௌலானா ஷௌகத் அலியும் வந்திருந்தார். இவர்கள் இருவரும் வருகிறார்கள் என்ற செய்தி சென்னை முழுவதும் பரவியது. இளைஞர்கள் மாண வர்கள் முதலிய அனைவரும் வெகு உற்சாகமாக இருந்தார்கள். மகாத்மாஜியினுடைய உயர்ந்த வாழ்க்கையும் தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களுக்காகச் செய்திருந்த சேவையும் அனைவருக்கும் தெரிந்திருந்தன. எனவே அவர் வருகையை மக்கள் வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். சென்னை யிலிருந்த என்னைப்போன்ற இளைஞர்களுக்கு மகாத்மாஜி யைப் பார்க்கக்கூடிய முதல் தருணம் அதுதான்.

கடற்கரையில்தான் பெரிய கூட்டம் ஒன்றை. ஏற்பாடு செய்திருந்தார்கள். மக்கள் ஏராளமாய்த் திரள் திரளாக வருவார்கள் என்று எதிர்பார்த்தனர். எனவே, ஆயிரக் கணக்கான பேர்கள் கொதிக்கும் அந்த மணல் தரையில் மத்தியான்னம் சுமார் 1-மணி 2-மணியிலிருந்தே போய் உட்கார்ந்துகொள்ள ஆரம்பித்தார்கள். வெகு நேரத்திற்கு முன்பே சென்ருல்தான் மேடைக்குச் சமீபத்திலிருந்து தலைவர்களை நன்ருகப் பார்க்கலாம் என்பது ஜனங்களின் கருத்து. மாணவர்களும் பலர் சென்ருர்கள். அக்காலத்தில் இப்பொழுது கூடுவதுபோல் ஒரு லட்சம் இரண்டு லட்சம் பேர்கள் கூடியதே இல்லை. ஒலிபெருக்கி ஏற்பாடுகளும் கிடையா. எனவே, பெரிய கூட்டங்களை நடத்துவது அசாத்தியமாய் இருந்தது. காந்தியடிகளைப் பார்க்கவும், அவர் பேச்சை நன்ருகக் கேட்கவும் வேண்டுமாளுல் கூட்டத்தின் அருகில் இருப்பதைவிட வேறு வழி இல்லை. ஆதலின், ஆயிரக்கணக்கான பேர்கள் மத்தியான்னத்திலிருந்து அந்தச் சுடு மணலில் காத்துக் கொண்டிருந்தார்கள். அங்ஙனம் இருந்த பல ஆயிரக்கணக்கான இளைஞர்களில் நானும் ஒருவன்.

நெடு நேரம் காத்துக் கொண்டிருந்தோம். மாலையில் மணி ஏறத்தாழ 5-30 அல்லது 6-மணிக்குமேல் ஆயிற்று. அதற்குமேல் தலைவர்கள் வரும்நேரம் வந்தது: மகாத்மாஜியும் வந்தார். அவரைக் கண்டதும் மக்களுக்கு ஒரே உற்சாகம். கரகோஷம் பலமாக இருந்தது. அவருடன் அவரைவிட மூன்று நான்கு மடங்கு பருமன் உள்ள மௌலானு ஷௌகத் அலியும் வந்தார். அவர்கள் இருக்க ஒரு மேடை போடப்பட்டிருந்தது. அதன்மேல் ஒரு மேஜையும் இரண்டு மூன்று நாற்காலிகளும் போட்டிருந்தார்கள். தலைவர்கள் இருவரும் அங்கு உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் இருவருக்கும் உள்ள தோற்ற வித்தியாசம் சிறுவர்கள் பலருக்கும் ஆச்சரியத்தையும் நகைச்சுவையையும் உண்டாக்கிற்று. மகாத்மா காந்தி அப்பொழுது சென்ற

பல வருஷங்களாகக் காணப்பட்டதுபோல் வெறும் மேல் துணியுடன் விளங்கவில்லை. இடையிலே வேட்டியும் மேலே ஒரு சட்டையும் அணிந்திருந்தார். தலையிலே ஒரு குல்லாயும் இருந்தது. அவர் எழுந்து நின்று பேசிய சில வாக்கியங்கள் இன்னும் என் மனத்தில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அவர் பேச ஆரம்பித்தவுடனே எங்கும் நிசப்தம் நிலவியது. ஆரவாரங்கள் ஓய்ந்தன. "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற சப்தங்கள் நின்றன. கூட்டத்தில் எப்பக்கத்திலாவது சப்தம் உண்டானல் அந்தப் பக்கத்தைச் சுற்றிப் பார்த்துத் தம் கையினல் அமைதியாக இருக்கும்படி சைகை காட்டுவார். அத்துடன் அந்தச் சப்தம் குறைந்துவிடும். மேஜையின் மேல் ஒரு நாற்காலியைப் போட்டு மக்கள் எல்லோருக்கும் நன்ருகத் தெரியும்படி உட்கார்ந்து பேசினர்.

இச் சமயத்தில்தான் தம்முடைய ஒப்புயர்வற்ற ஒத்துழையாமைப் பிரசாரத்தை அவர் முதலில் ஆரம்பித்தார். மக்களுக்கு அப்போது அது அதிகமாகப் புரியவில்லை. பல பேர்கள் அதை எதிர்க்கவும் எதிர்த்தார்கள். அறிவுள்ளவர்கள், படித்தவர்கள் என்று சொல்பவர்களுக்கு அவருடைய திட்டத்தில் அன்று நம்பிக்கையே கிடையாது. அப்பொழுதிலிருந்தே கதர்ப் பிரசாரமும் ஆரம்பித்தது. வக்கீல்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், டாக்டர்கள் ஆகியவர்களைப் போன்ற படித்தவர்கள் அனைவரும் இதனலெல்லாம் காரியங்களைச் சாதிக்க முடியாதென நினைத்தார்கள். நினைத்ததைப் பேசினர்கள். அக்காலத்தில் இருந்த தலைவர்கள் பெரும்பாலும் வக்கீல்களே. ஒரு பிரபல வக்கீல் சொன்னது எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது. அந்தக் காலத்தில் கதர் இப்பொழுது இருப்பது போலவே மெல்லியதாக இராது. முரட்டு நூலால் நெய்யப்பட்டுக் கோணி போன்று மிகவும் தடித்த துணியாக இருக்கும். அந்தப் பிரபல வக்கீல் சொன்னர்: "சாக்கைக் கட்டிக்கொண்டால் சுயராஜ்யம் வந்துவிடுமாம்! இது என்ன பேச்சு? அரசியல் தெரிந்தவர்கள் பேசுகின்ற பேச்சா இது? பைத்தியக்காரன் பேசுகிற

பேச்சு அல்லவா இது?'' என்றார். இங்ஙனம் வெளிப்படையாக ஏசியவர்கள் சிலர். இந்த வார்த்தைகளை ஆமோதித்தவர்களோ படித்தவர்களில் பலர். ஏன்? பெரும்பாலும் என்றே சொல்லலாம்.

ஆனால், ஆச்சரியத்திலும் ஆச்சரியம்! பொது மக்கள் மகாத்மாஜியின் கொள்கையை ஆதரித்தார்கள். அவருடைய வாக்கில் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. அக்கொள்கைகளை அவர்கள், தங்கள் புத்தியைக் கொண்டு அதிகமாக அலசிப் பார்க்கவில்லை. அம் மனிதரை நம்பினார்கள். அவர் உண்மை யைத்தான் பேசுவார் என்பதில் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. அவர் சுயநலத்திற்காகவோ, வேறு காரணத் திற்காகவோ தங்களையும் தங்கள் நாட்டையும் என்றும் விட்டுக்கொடுக்க மாட்டார் என்ற உறுதியான நம்பிக்கை அவர்கள் மனத்தில் நிறைந்திருந்தது. எனவே, அவர்கள் அதிகமாக யோசனை செய்யவில்லை. அவர் சொன்னதை அப்படியே நம்பினார்கன். இயன்றவரையில் அவர் சொன்னபடி நடக்கவும் முயன்றார்கள். அவர் பேச்சு, கடுமையாகவே இருந்தது. மகாத்மா காந்தி, மக்களை சந்தோஷப்படுத்து வதற்காக என்று எதையும் ஒளித்தோ மறைத்தோ பேசியது இல்லை. எங்கே தவறு இருந்தாலும் அதைச் சந்தேக மில்லாத பதங்களை உபயோகித்துக் கடுமையாகக் கண்டிப்பார். எனினும், மக்கள் மனத்தில் இது அவர்பால் துவேஷத்தை உண்டுபண்ணவில்லை. இது காரணமாக அவர்களுக்கு அவர் பாலுள்ள நம்பிக்கை அதிகரித்ததே யொழியக் குறையவில்லை. அவர் தூய மனமே அதற்குக் காரணமாகும். "அவர் தமக்காக, தம் சந்தோஷத்திற்காக அல்லது தம்முடைய எதிர் காலத்திற்காக எதையும் பேசவில்லை.; எதையும் செய்யவில்லை; இந்த நாட்டின் முன்னேற்றத்திற்காகவும், இந்த நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்காகவும், குறிப்பாக ஏழைகளை ஈடேற்றுவதற்காகவுமே தம்முடைய வாழ்க்கையை நடத்தினார்'' என்ற திடமான நம்பிக்கை மக்கள் உள்ளத்தில் இருந்தது. அதனால் அவருடைய கண்டிப்பான வார்த்தையைப் பொது மக்கள் சரியானபடி ஏற்றுக்கொண்டார்கள்.

கூட்டம் சுமார் 50 அல்லது 60 ஆயிரம் பேர்கள் இருக்கும். அவர் பேச ஆரம்பித்ததும் எங்கும் நிசப்தம் குடி கொண்டது. இப்பொழுது கூட்டங்களிலே அதுபோன்ற நிசப்தத்தைக் காணுவது அரிது. ஒலிபெருக்கிகள் இருப்பதே அவ்விதம் நிசப்தம் இல்லாமல் இருப்பதற்குக் காரணமாக இருக்கலாம். ஒலிபெருக்கி இல்லாத காலங்களில் நிசப்தமாக இருந்தால்தான் பெருங் கூட்டங்களில் தலைவர்களுடைய பேச்சைக் கேட்கமுடியும். அந்த மாபெருங் கூட்டத்திலே அவருடைய பேச்சு, கூட்டம் முழுவதற்கும் கேட்டது. அவர் ஆங்கிலத்தில் பேசினார்! நிதானமாக ஒவ்வொரு வார்த்தையையும் நன்றாக உச்சரித்துத் தெளிவாகப் பேசினார், பக்கத்தில் மௌலானா ஷௌகத் அலியும் உட்கார்ந்திருந்தார், அஹிம்சையைப் பற்றிக் காந்திஜி பேசும்போது, "எனக்கு அஹிம்சையில் பூரண நம்பிக்கை இருக்கிறது. அதன் மூலம்தான் இந்தியாவின் விடுதலையைப் பெற முடியுமென்று நம்புகிறேன். என்னுடன் இருக்கும் என் சகோதரர் மௌலானா ஷௌகத் அலி அவர்களுக்கு அஹிம்சையில் நம்பிக்கை இல்லை. ஆனால், சுதந்திரம் பெறுவதற்கு அதுவே சிறந்த மார்க்கமென்று அவரும் நம்புகிறார்" என்று மகாத்மாஜி சொன்னபோது மௌலானா ஷௌகத் அலி தம் தாடியை தடவிக் கொடுத்துத் தலையை "ஆம்" என்று சொல்வது போல் அசைத்தது எனக்கு இன்றும் ஞாபகம் இருக்கிறது. மீண்டும் மகாத்மாஜி தொடர்ந்து பேசினார். விடிவதற்கு முன்தான் மிகவும் இருட்டாக இருக்கும். (It is darkest before the dawn) அங்ஙனமே இக்காலம் மிகவும் கஷ்டமானதாகவும், துன்பங்கள் நிறைந்ததாகவும் இருக்கிறது. அதற்காக நாம் பயப்படலாகாது. எப்படி அதிக இருட்டே சூரியன் உதிப்பதற்கும், பொழுது புலர்வதற்கும் அறிகுறியாக இருக்குமோ, அதேபோல நம் கஷ்டமும் அடிமை வாழ்வும் ஒழிந்து சுயராஜ்யம் பெறுவதற்கு இவை அறிகுறியாக இருக்கும்" என்று சொன்னார். அவர் சொல்லிய கடைசி வார்த்தைகள் இன்னும் என் காதில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றன.

மகாத்மாஜியின் பேச்சில், சாதாரணமாக நல்ல பேச்சாளர்கள் என்று கருதப்படுபவர்களிடம் காணும் வார்த்தை அழகோ அல்லது வேகமோ இருக்கவில்லை. வார்த்தைகள் மெதுவாக வந்தன; ஆனால் தெளிவாகவும் உறுதியாகவும் இருந்தன. தீர ஆலோசித்துப் பின் சந்தேகம் இல்லாமல் முடிவு செய்த கருத்துக்களையே அவை தெரிவித்தன. ஆரவாரமும் படபடப்பும் இன்றி வந்த அவ்வார்த்தைகள் மக்கள் மனத்தில் ஆழமாகப் பதிந்தன. அவர்கள் மனத்தில் ஊக்கமும் உற்சாகமும், அவற்றுடன் தாங்கள் மேற்கொண்ட காரியத்தில் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கையும் தோன்றின. அதுவரையில் பிரிட்டிஷ் சர்க்காரிடம் பல சிறிய காரியங்களுக்காக விண்ணப்பம் செய்துகொண்டிருந்தார்கள். ஆனால், அன்றிலிருந்து மக்களின் மனம் மாறிற்று. சுதந்தரத்திற்காக அஹிம்சைப் போர்தொடுத்து அதன் மூலம் நம் லட்சியத்தை அடையமுடியும் என்ற நம்பிக்கை தேசமெங்கும் மக்கள் மனத்தில் உண்டாயிற்று. அதுவே இந்தியாவின் புதிய சகாப்தத்திற்கு ஆரம்பமெனச் சொல்லலாம்.

அந்த மாபெருங் கூட்டத்திடையே நிசப்தத்தில் அவர் பேசிய வார்த்தைகள் மக்கள் இதயத்திற்கு நேராகச் சென்றன. ஒரு மகரிஷியின் உபதேசம்போல் அனைவரும் பயபக்தியுடன் அவற்றைக் கேட்டார்கள். எங்ஙனம் அவ்வுயர்ந்த உபதேசங்களைப் பின்பற்ற முடியுமென்ற எண்ணமும் அக்கூட்டத்தில் ஒவ்வொருவருக்கும் தோன்றியிருக்க வேண்டும். மாணவர்களிற் பலர் அன்றிலிருந்து கதர் அணிந்து காந்தியடிகளின் புனிதக் கொள்கைகளை இயன்ற வரை பின்பற்றவேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டார்கள். அவர்களில் நானும் ஒருவன்.

# 2. திருப்பூரில்

சுமார் 7, 8 வருஷங்கள் கழிந்த பிறகு மறுபடியும் மகாத்மாஜியைச் சந்திக்கும் பாக்யம் எனக்குக் கிடைத்தது. மத்தியில் தேசத்தில் பல காரியங்கள் நடந்திருந்தன, முதல் ஒத்துழையாமை இயக்கம் நடந்து முடிந்திருந்தது. அந்த ஒத்துழையாமை இயக்கம் தன்னுடைய லட்சியத்தை அடைய முடியாவிடினும், மக்கள் மனத்தில் பெரிய கிளர்ச்சியை உண்டுபண்ணி இருந்தது. அதற்கு முன் அரசியல் இயக்கங்கள் வெறும் பேச்சளவில் இருந்தன. நல்ல வருமானம் பெற்ற வக்கீல்கள் தங்கள் தொழில் நேரம் போக மற்றப் பொழுதுக்கு இதையும் ஒரு வேலையாக வைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் தொழிலையும் வருமானத்தையும் முக்கியமாகக் கருதியபடியால், இப்பணியை உறுதியாகச் செய்வதற்கும், இதற்காகச் செய்யவேண்டிய தியாகத்திற்கும் அவர்கள் தயாராக இருக்கவில்லை. ஆனால், மகாத்மாஜியின் ஒத்துழையாமை இயக்கம் இவை அனைத்திலும் மாறுபாட்டை உண்டாக்கியது. தங்கள் சொந்தத் தொழிலை விட்டு, தேசப் பணியையே பிரதானமாக நினைத்து, நாட்டுக்குத் தங்களையே அர்ப்பணம் செய்துகொள்ளக்கூடியவர்கள்தாம் உண்மையாக விடுதலைப்போரில் ஈடுபட முடியுமென்பதை மகாத்மாஜி இந்தியாவுக்கு எடுத்துக் காட்டினார். அத்துடன் அவரும் அவரைச் சார்ந்த நூற்றுக் கணக்கான இளைஞர்களும் தங்கள் தேக சுகத்தையும் எதிர்கால வாழ்க்கையையும் இதற்காக அர்ப்பணம் செய்ய முன் வந்தார்கள்.

பலர் சிறைக்குச் சென்றார்கள். அக் காலத்தில் சிறை என்றாலே மிகப் பயங்கரமாகத் தோன்றும். தோற்றத்தில் மாத்திரமல்ல. அநுபவத்திலும் மிகக் கொடுமையான நரகம் என்ற நிலையில் இருந்தது. கல்லூரிகளில் வாசித்துக் கொண்டிருந்த இளைஞர்கள் பலரும், சுகவாழ்க்கையில் ஈடு

பட்டிருந்த பல பெரியோர்களும், மகாத்மாஜியைப் பின்பற்றிச் சிறை செல்ல முன்வந்தது, நாடு முழுவதும் கிளர்ச்சியையும் மக்கள் மனத்தில் புனித நோக்கத்தையும் உணர்ச்சியையும் உண்டு பண்ணிற்று. ஒத்துழையாமை இயக்கத்துக்குப் பிறகு மகாத்மாஜி நிர்மாண வேலைகளை ஆரம்பித்தார். நிர்மாணத் திட்டமே சுயராஜ்யப் போரின் அடிப்படை என்பது அவர் கோட்பாடு. அந்த நிர்மாணத் திட்டத்தில் நடு நாயகமாக விளங்கியது கதர். எனவே 1927-ம் ஆண்டில் கதர்ப் பிரசாரத்திற்காகவே சுற்றுப்பிரயாணம் தொடங்கினர். அது சமயம் சென்னை மாகாணத்திற்கும் வந்திருந்தார். திருப்பூர் கதருக்குப் பெயர் பெற்று விளங்கிக் கொண்டிருந்தது. அதைக் கதர்த் தலைநகாம் என்று அங்கே செய்த பிரசங்கத்திலும் குறிப்பிட்டார். அவர் திருப்பூருக்கு வந்த சமயந்தான் நான் அவரை இரண்டாம் தரம் சந்திக்கும் பாக்கியத்தைப் பெற்றேன்.

இந்தத் தடவை வந்தபோது அவர் உடையில் மாறுபாடு இருந்தது. சென்ற தடவையில் சென்னையில் சந்தித்த போது இருந்த மேல் சட்டையும் தலைக்குல்லாயும் காணப்பட வில்லை. அவற்றிற்குப் பதிலாக முழங்காலுக்குமேல் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் மாத்திரமே காணப்பட்டன. உடையில் இந்த மாறுதல் நேர்ந்த சம்பவமும் குறிப்பிடத் தக்கது. முதல் சுற்றுப் பிரயாணத்தின்போது சென்னையிலிருந்து திருச்சி முதலிய இடங்களுக்குப் போயிருக்கிறர், வழக்கம் போல் அக்கூட்டங்களில் கதர்ப் பிரசாரம் செய்திருக்கிறர். கூட்டத்தில் ஒருவர் எழுந்து, "எல்லோரும் கதர் அணிய வேண்டுமென்று நீங்கள் பிரசாரம் செய்கிறீர்களே! அனை வருக்கும் போதுமான கதர் இப்பொழுது உற்பத்தியாகிறதா?" என்று கேட்டார். மகாத்மாஜி அக்கேள்வியைச் சிந்தித்து, கீழ்கண்ட பதிலைச் சொன்னர்: "ஆம். எல்லோருக்கும் போதுமான கதர் உண்டாக்கப்படுவதில்லை என்பது உண்மையே. எனவே கூடுமானவரை அதிகமான பேர்களின் அவசியத்தைப் பூர்த்திசெய்யும் பொருட்டு, நமக்கு அவசியம்

இல்லாத தேவைகளை நாம் குறைத்துக் கொள்ள வேண்டும். நான் இப்பொழுது அரையில் வேஷ்டியும், மேல் சட்டையும் அங்கவஸ்திரமும் குல்லாயும் அணிந்து கொண்டிருக்கிறேன். இடுப்பில் வேஷ்டியும் உடம்பை மூடிக்கொள்ள அங்கவஸ்திர மும் இருந்தால் போதுமானது. வேஷ்டியும் முழங்கால் வரை இருந்தால் போதுமானதென நினைக்கிறேன். நம் நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் ஒரு நாளுக்கு ஒரு நேரத்திற்குக் கூட வயிறார உண்ண இயலாமல், கந்தையை உடுத்து வாழும்போது, நமக்கு இந்த உடையே நமது மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் போதுமானது. எனவே நான் இனி மேல் அந்த உடையையே அணிவேன்'' என்று சொல்லித் தாம் அணித்திருந்த சட்டையைக் கூட்டத்தில் கழற்றி வைத்தார். அதற்குப் பிறகு அரையில் முழங்கால்வரை வேஷ்டியையும், மேலே அங்கவஸ்திரத்தையும் தவிர, வேறு உடை அணிந்ததில்லை. தண்ணீர் பனிக்கட்டியாகக்கூடிய கடுங்குளிரிலும், அதே உடையைத்தான் அணிந்து வந்தார்.

1931-ஆம் ஆண்டில் இரண்டாவது வட்டமேஜை மகா நாட்டுக்குக் காங்கிரஸ் பிரதிநிதியாகச் சென்றபோது அவர் இவ்வுடையை மாற்றவில்லை. ஆங்கில மன்னரைப் பார்க்கச் செல்லுகிறவர்கள் அநுஷ்டிக்க வேண்டிய உடை விதிகள் சில உண்டு. ''ஆங்கில அரசரைக் காணச் செல்லும்போதுகூடத் தாங்கள் வேறு உடை தரித்துக் கொள்ள மாட்டீர்களா?'' என்று ஒரு நிருபர் கேட்டபோது, ''இந்திய நாட்டன் ஏழை களின் பிரதிநிதியாகச் செல்லும் நான், ஆங்கில மன்னரைப் பார்ப்பதற்காக உடையை மாற்றிக்கொண்டால் அது அம் மன்னர் பிரானுக்குச் செய்த அபசாரமாக இருக்கும்'' என்று மறுமொழி கொடுத்தார். அவர் மன்னரைக் காணச் சென்றபோது ஆங்கில சரித்திரத்தில் நிகழாதது ஒன்று நடந்தது. மகாத்மாஜிக்காக அரண்மனையின் உடைச்சட்டம் அந்த நேரத்திற்கு விலக்கி வைக்கப் பட்டது. எனவே திருப்பூர் வந்தபோது அவ்வுடையிலே காட்சி அளித்தார்.

முதல் தடவை அவரைச் சென்னையில் சந்தித்தபோது நான் பதினாறு வயது இளம் மாணவனாக இருந்தேன். இப்பொழுது சட்டப் படிப்பை முடித்துவிட்டு வக்கீல் தொழிலை ஆரம்பித்திருந்தேன். அன்று அவர் முன்னிலையில் எடுத்துக் கொண்ட கதர்ப் பிரதிக்ஞையைத் தொடர்ந்து பின்பற்றி வந்தேன். அக்காலத்தில் கதர் அணிந்தவர்களை மக்கள் குறிப்பாகக் கவனித்து வந்தார்கள். சாதுக்கள் காவி அணிவதுபோல் கதர் உடை அணிந்தவர்கள் உயர்ந்த கொள்கைகளையும் எளிய வாழ்க்கையையும் பின்பற்றுபவர்களாக இருப்பார்கள் என்று எதிர்பார்த்தார்கள், கதர் அணிவதே மக்கள் மனத்தை உயர்வு படுத்தியது. அன்று தூரத்திலிருந்து தான் காந்தியடிகளைப் பார்க்கக் கூடிய சந்தர்ப்பம் கிடைத்தது. திருப்பூரிலோ அவருடன் பேசவும் அவருடன் நெருங்கிப் பழகவும் சந்தர்ப்பங்கள் கிடைத்தன.

திருப்பூர் ஸ்ரீ கே. எஸ். இராமசாமிக்கவுண்டர் அவர்கள் அவ்வூரில் மிகவும் முக்கியமானவர்களில் ஒருவர். நகர சபைத் தலைவராக இருந்திருக்கிறார். பெரிய வியாபாரி. நல்ல தேசபக்தி உடையவர். அவர் வீட்டில்தான் மகாத்மாஜியை இருக்க அழைப்பது எனத் தீர்மானம் செய்திருந்தார்கள். அவரும் அவர் குடும்பமும் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பர்கள். எனவே, மகாத்மாஜிக்கு வேண்டியவற்றைக் கவனிக்கும் சேவையில் எனக்கும் பங்கு கிடைத்தது. திருப்பூரில் அந்தச் சுற்றுப் பிரயாணத்தின்போது மகாத்மாஜி மூன்று நாட்கள் தங்கினார். அங்கிருந்துகொண்டு சுற்றுப் பக்கங்களில் கதர் உற்பத்தியாகும் கிராமங்களுக்குச் சென்று வந்தார். அவர் அங்கிருந்த மூன்று நாட்களும் நகர் முழுவதும் பெரிய விழாவாக இருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் அவரைத் தரிசனம் செய்து இன்புற்றார்கள். அவருடைய நகைச் சுவையும், எப்பொழுதும் சிரித்த முகமும் எல்லோர் மனத்தையும் கொள்ளை கொண்டன. அவர் அங்கிருந்த இரண்டு மூன்று தினங்களிலும், அவரிடம் கொஞ்ச நேரம் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

ஒரு நாள் நீண்ட நேரம் சில விஷயங்களைப்பற்றி விவாதிக்கக் கூட இடம் கிடைத்தது. கதரின் முக்கியத்துவம், பள்ளி களில் ஆண்கள் பெண்கள் இருபாலாரும் சேர்ந்து படித்தல், வர்ணாசிரம தர்மம், ஹரிஜன சேவை என்ற விஷயங்களைப் பற்றியே முக்கியமாகப் பேச்சுக்கள் நிகழ்ந்தன,

கதரின் தூய்மையையும், பெண்கள், விதவைகள், வயோதிகர்கள் முதலியவர்கள் எங்ஙனம் வீட்டிலிருந்து கொண்டே இப்பணியைச் செய்து மானத்துடன் வாழலாம் என்பதையும் பற்றிக் காந்தியடிகள் விரிவாக எடுத்துரைத்தார். ராட்டையின் கருத்துத் தமக்கு முதலில் எப்படி உதயமாயிற்று என்பதைப்பற்றிச் சொன்னார்.

பல வருஷங்களுக்கு முன் பீகாரில் சம்பாரன் இயக்கம் ஆரம்பித்தது பலருக்கு ஞாபகம் இருக்கும். அங்கு மக்கள் பஞ்சத்தால் வேலையின்றிப் பீடிக்கப்பட்டார்கள். அவர்களுக் காகப் பணி செய்யும் பொருட்டு மகாத்மாஜி அங்கே சென் றிருந்தார் ஆயிரக் கணக்கான மக்கள் வேலையின்றித் தவித்துக் கொண்டிருந்தார்கள். வெளி மக்களுடைய உதவி யையே நாடி இருந்தார்கள். மகாத்மாஜி அங்கே சென்றார். அவர்கள் தாங்கள் ஒன்றும் வேலைசெய்யாமல் மற்றவர்களையே நாடி நின்றார்கள். சுய நம்பிக்கையும் சுய பலமும் இல்லாத அவர்கள் நிலைமை மகாத்மாஜியின் மனத்தில் இரக்கத்தை உண்டாக்கியது. இம் மக்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளக் கூடிய நிலைமையை உண்டாக்கிக்கொள்ளுகிற வரையில் இவர்கள் மற்றவர்கள் உதவியால்மட்டும் மேன்மை அடையமுடியாது, என்ற எண்ணம் அவர் மனத்தில் தோன்றியது. மனிதன் மனத்தில் இருக்கும் தன்னம்பிக்கை அவனுடைய உயர்வுக்கு அடிப்படையாகும். தன்னம்பிக்கை இல்லாமல் எவரும் எக்காரியத்தையும் செய்ய முடியாது. மற்றவர்கள் உதவியால்தான் வாழமுடியுமென்று நினைப் பவர்கள் தைரியத்துடனும் சுய மரியாதையுடனும் வாழ முடியாது. எனவே இம்மக்களுக்கு என்ன வேலை கொடுக்க

முடியுமென்று மகாத்மாஜி யோசித்தார். அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய வேலை அதிக முதலீடு வேண்டியதாக இருக்கக்கூடாது. அதிகப் பயிற்சி வேண்டியதாகவும் இருக்கக் கூடாது. ஆனல் அனைவருக்கும் பயன்படக்கூடியதாக இருக்க வேண்டும். இத்தகைய பணி எது என்பதைப்பற்றி ஆலோசித்தார். உணவுக்கு அடுத்தபடி மக்களுக்கு வேண்டியது உடை. ராட்டைக்கு அதிக முதலீடு வேண்டியதில்லை. நூற்பதற்கு அதிகப் பயிற்சியும் வேண்டியதில்லை. பெண்களும் தங்கள் வீடுகளில் இருந்துகொண்டே இத்தொழிலைச் செய்து மானத்தோடு வாழலாம். எவ்வளவு நூல் உற்பத்தியானலும் அவ்வளவையும் செலவு செய்ய முடியும். ஆதலின், அதுவே ஏழை மக்களும் வேலையற்றவர்களும் ஏற்கத்தகுந்தது என்ற முடிவுக்கு வந்தார். அதனுடன் பணக்காரர்கள் யக்ஞமாக எண்ணி நூற்கவேண்டுமென்றும் போதித்தார். இதுவே கதரின் உதயமாகும்.

பலர், "மில் துணிகளுடன் கதர் போட்டி போட முடியுமா?" என்று கேட்டார்கள். "மில் துணியின் தன்மை வேறு. அது ஒழுக்கமில்லாத வாழ்க்கைக்கு இடம் கொடுத்து, சுரண்டல் கறையுடன் தோன்றுவது. கதர் மேன்மையானது. அன்பில் வளர்வது. எளியவர்களுக்கு உதவி செய்வது. ஆதலால் மக்களுடைய பக்தியால்தான் வளரவேண்டும். பக்தியும் நம்பிக்கையும் இருந்தால் கண்டிப்பாக அது வளரும்" என்று அக்கேள்விக்கு மறுமொழி கூறினர்.

"பக்தியால் மட்டும் தொடர்ந்து காரியங்கள் நடைபெறுமா?" என்று சிலர் அவநம்பிக்கைப்பட்டு அவரிடம் கேட்டார்கள். இன்றும் அந்த அவநம்பிக்கை பலர் மனத்தில் இருந்து வருகிறது. அதற்கு அவர் சொன்ன பதில் ஆச்சரியமானது: "உங்கள் தென்னிந்தியாவையே நீங்கள் பாருங்கள். எவ்வளவு பெரிய கோயில்களைக் கட்டியிருக்கிறீர்கள். அவை பல ஆயிர வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டவை; ஆனல் இன்னும் எவ்வளவு சிறப்பாக நடந்து

வருகின்றன! அவைகளால் மக்களுக்கு என்ன வருமானம் வருகிறது? யாதொரு வருமானமும் இல்லையே! பல இடங்களில் அவற்றின் நோக்கங்கள் கூடச் சரிவரப் பின்பற்றப்பட்டு வருகிறதில்லை. எனினும் அவை தொடர்ந்து பெருமையுடன் விளங்குவதற்குக் காரணம் என்ன? மக்கள் மனத்தில் இருக்கும் பக்திதானே காரணம்? அது அங்ஙனமானால், பக்தியால் நடைபெற முடியாதது என்ன இருக்கிறது?'' என்று அவர் திருப்பிக் கேட்டார். அவர் செப்பியது முற்றும் உண்மை. பக்தியால் செய்ய முடியாதது என்ன? ஆனால் ஆண்டவன் அருளால் நாம் அந்தகைய பக்தியைப் பெறவேண்டுமே!

பள்ளிகளில் ஆண்களும் பெண்களும் ஒன்றாக வாசிப்பதைப் பற்றிய பேச்சு வந்தது. "இருபாலாரும் சேர்ந்து வாசிப்பதில் பல தீங்குகள் விளையுமே!'' என்று நான் கேட்டேன். அதற்கு அவர் சொன்ன பதில் இன்னும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது; "ஆம், முதலில் தீங்குகள் வரும் என்பது உண்மை. நம் சமூகம் தற்காலம் இருக்கும் நிலைமையில் வயது வந்த பிள்ளைகளும் பெண்களும் ஒன்றாகப் படிப்பதனால் ஆரம்பத்தில் பல தீங்குகள் நேரலாம். இச்சமயத்தில் அங்ஙனம் ஆரம்பிப்பவர்கள் மிகவும் தைரியசாலிகளாக இருக்கவேண்டும். ஆரம்பத்தில் இங்ஙனம் நேர்ந்தாலும் நாளடைவில் அதுவே சிறந்த முறையாக இருக்கும். வீடுகளிலும் வீதிகளிலும் களங்களிலும் சந்தைகளிலும், இன்னும் வாழ்க்கையில் எல்லா இடக்களிலும் ஆண்களும் பெண்களும் சேர்ந்து வேலை செய்யவேண்டியிருக்கிறது. ஆகையால், ஆரம்பத்திலிருந்து பள்ளிகளிலும் இங்ஙனம் சேர்ந்து பழகுவதும் பயிலுவதும் அவர்கள் ஒருவருக்கொருவர் இயற்கையாகவும் சரியாகவும் பழக உதவியாக இருக்கும். அதுவே நாளடைவில் நல்ல பயனை அளிக்குமென்று நம்புகிறேன்'' என்றார்.

அந்த மூன்று தினங்களும் இன்பமாகக் கழிந்தன. தமிழ்நாட்டு தலைவர் ஸ்ரீ சி. ராஜகோபாலச்சாரியார் அவர்களும் மகாத்மாஜியுடன் வத்திருந்தார். மகாத்மாஜிக்குச்

சிறிய சேவைகள் பல செய்யக்கூடிய பாக்கியம் எனக்கு அப்பொழுது கிடைத்தது. அந்த வயதில் அவரிடம் இருந்த ஓயாத உழைப்பும், சலியாத நகைச்சுவையும் எல்லோரிடத்திலும் ஆழ்ந்த அன்புடன் சகஜமாகப் பழகும் தன்மையும் எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்டன.

அவர் நரம்பு உறுதியைக் காட்டிய ஒரு சம்பவத்தையும் இங்கே குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை. அவர் தங்கி இருந்த ஸ்ரீ கே. எஸ். இராமசாமிக் கவுண்டர் வீடு ஆற்றுப் பாலத்திற்கு அடுத்தபடி இருந்தது. குறிப்பிட்ட நேரத்திற்குள் பல இடங்களுக்கு அவர் போகவேண்டியிருந்ததால், கார் வெகு வேகமாகச் செல்லும். அது வேகமாகச் செல்லும்போது ஓய்வு எடுத்துக்கொள்ளும் பொருட்டுக் காரின் பின்பக்கத்தில் சாய்ந்தபடியே கண்ணை மூடிக்கொள்வார். ஒரு நாள் கார் வெகு வேகமாக வந்து கொண்டிருந்தது. சுமார் 60 அல்லது 70 மைல் வேகம் இருக்கலாம். வீட்டின் வெளி வாசற் கதவு (gate) வழக்கல்போல் திறந்திருக்குமென்று கார் ஓட்டுபவன் நினைத்திருக்கவேண்டும். அந்த எண்ணத்துடன் வெகு வேகமாகக் காரை ஓட்டிக்கொண்டு வந்தான். ஆனால் எதிர்பாராத விதமாகக் கதவு மூடி இருந்தது. ஆகையால் திடீரென்று வண்டிக்குப் 'பிரேக்' போடவேண்டியிருந்தது. உடனே கார் உறுமல் செய்து, பெரிய அதிர்ச்சியுடன் 'கேட்'டுக்கு ஒன்றிரண்டு அடிகளுக்கு முன் நின்றது. அந்த அதிர்ச்சியும் சத்தமும் காரில் இருந்தவர்கள் அனைவருக்கும், தெருவில் இருந்தவர்களுக்கும் பெரும் திகைப்பை உண்டாக்கின. மகாத்மாஜி என்ன சொல்வாரோ என்று அனைவரும் பயந்திருந்தார்கள். ஓய்வு எடுத்துக்கொண்டிருந்த மகாத்மாஜி அந்த அதிர்ச்சியால் விழித்து எழுந்தார். எழுந்தவர் சுற்றிப் பார்த்ததும், ஒரு விநாடியில் நிலைமையை உணர்ந்து கொண்டார்; உடனே, 'கொல்' லென்று சிரித்து, ''ஓ அப்படியா!'' என்றார். மீண்டும் அச்சிரிப்பு எல்லோர் காதுகளிலும் ஒலித்தது. அவ்வளவுதான். அவருக்கு இருந்த நரம்பு உரந்தான் என்னவென்று நாங்கள் வியந்தோம்.

# 3. உப்புச் சத்தியாக்கிரகம்

மகாத்மா காந்தி 1930-ஆம் வருஷத்தில் உப்புச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். 1929-ஆம் வருஷம் நடந்த காங்கிரஸ் மகாசபையில், ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் ஆங்கில அரசாங்கத்தார் சுதந்தரம் அளிக்க மறுத்தார்களானல் நேரடியான இயக்கம் ஆரம்பிக்க வேண்டியது என்ற தீர்மானம் நிறைவேறியது. அந்தத் தீர்மானம் எந்த உருவத்தில் அமலுக்கு வரும் என்று எவருக்கும் தெரியாது. அதை எவ்விதம் செய்யவேண்டும் என்ற பொறுப்பை மகாத்மாஜியிடம் ஒப்பித்திருந்தார்கள், இவ்விஷயங்களைப் பத்திரிகை படித்த அனைவரும் அறிவார்கள். அதன் பிறகு ஒரு நாள் மகாத்மாஜி தம் சபர்மதி ஆசிரமத்தில் இருந்த ஆசிரமவாசிகள் அனைவரையும் அழைத்தார். "உங்களில் யார் என்னுடன் சாகும் வரையில் இருந்து, சுதந்தரத்திற்காகப் போர்தொடுக்கத் தயார்?" என்று கேட்டார். சுமார் 80 பேர்கள்—இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த இளைஞர்கள்—கை தூக்கினார்கள். "இந்த 80 பேர்களே எனக்குப் போதும். இவர்களை வைத்துக்கொண்டு நான் போராடுவேன்" என்று அவர் சொன்னபோது பலருக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. சத்தியாக்கிரகம் எவ்வகையில் இருக்க வேண்டுமென்பது முதல் பிரச்சினையாக இருந்தது. ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு. உப்புச் சட்டத்தை மீறுவதற்காகச் சத்தியாகிரகம் ஆரம்பிக்க வேண்டுமென்று அவர் தீர்மானம் செய்தார். உப்புச் சத்தியாக்கிரகம் செய்வதற்கு உப்பு இருக்கும் இடத்துக்கு அல்லவா போக வேண்டும்? கடற்கரையில் உள்ள தாண்டி என்ற பிரதேசத்தில் உப்பளங்கள் இருந்தன. அது மகாத்மாஜி இருக்கும் இடத்திலிருந்து சுமார் 240 மைல் தூரத்தில் இருந்தது. அங்கே சத்தியாக்கிரகத்துக்குச் செல்ல வேண்டுமென்று முடிவானவுடன், அவருடன் இருந்து திட்டம் வகுத்த சர்தார் வல்லபபாய்

பட்டேல், ராஜாஜி முதலிய பலர் எப்படி அங்கே போய்ச் சேர்வது என்பதுபற்றி யோசனை செய்தார்கள். சிலர் "ரெயிலில் போகலாம்" என்று சொன்னார்கள். சிலர், 'மோட்டாரில் போவது வசதியாக இருக்கும்" என்று பேசினார்கள். ஆனால், மகாத்மாஜியைக் கேட்டபோது, "நான் நடந்து செல்லப் போகிறேன்" என்று அவர் சொன்னபோது மற்றவர்களுக்கு வியப்பாக இருந்தது. 64 வயதுள்ள கிழவர் 240 மைல்கள் நடந்து செல்வது என்று சொன்னால் அவர்களுக்கு அது புரியவில்லை "ஏன் நடந்து செல்ல வேண்டும்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர். "நான் செல்லும் ஊர்களிலே நான் மிதிக்கும் மண் முழுவதும் சுதந்தரத்திற்காக உழைக்கும் வீரர்களாய்க் கிளம்புவதை நீங்கள் பார்ப்பீர்கள்" என்றார். அந்தச் சமயத்தில் அதன் பொருளை மக்கள் உணரவில்லை. பைத்தியக்காரன் வார்த்தையைப்போல் சிலருக்கு அது பட்டது. சில பேர்கள் கேலியும் செய்தார்கள். ஆனால் உண்மையில் என்ன என்பதை மக்கள் இன்று உணர்கிறார்கள்.

மகாத்மாஜியும் அவருடன் 80 தொண்டர்களும் தாண்டிக்குப் புறப்பட்டார்கள். அந்நிய அரசாங்கம் அவரை எள்ளி நகையாடியது. மகாத்மாஜி வெயிலில் நடக்கும்போது வெயிலால் பாதிக்காமல் இருக்கும் பொருட்டு, தம் தலைக்குமேல் களிமண் பற்றுப் போட்டுக் கொண்டு. அதில் தண்ணீர் தெளித்துக் கொள்வது வழக்கம். அதைப் பற்றி அக்காலத்தில் "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை, "மகாத்மாஜிக்குக் களிமண் மண்டைக்குமேல் மாத்திரமல்ல; மண்டையின் உள்ளும் அதுதான் இருக்கிறது" என்று கேலியாக எழுதியது. அங்ஙனம் நினைத்தவர் பலர் இருந்தனர்.

மகாத்மாஜி இவற்றை யெல்லாம் பொருட்படுத்தவில்லை. தம்முடைய லட்சியத்தில் தெளிவும். அதைக் கடைப்பிடிக்கும் மார்க்கத்தில் உறுதியும் அவர் மனத்தில் இருந்தன. அந்த 240 மைல்களும் நடந்தே சென்றார். அவர் அலுத்துப் போய் உடல் நோய்வாய்ப்பட்டால் உதவும்பொருட்டு ஒரு குதிரை

உடன் அழைத்துச் செல்லப்பட்டது. ஆனல், அக்குதிரையின் மேல் ஏறும் அவசியமே நேரவில்லே. அவர் சென்ற கிராமந் தோறும் அவரை மக்கள் எல்லேயில்லாத அன்புடனும் ஆர்வத் துடனும் வரவேற்ருர்கள். தாம் ஆரம்பித்திருக்கும் சுதந்திரப் போரின் விவரங்களே அவர் ஆங்காங்கு விளக்கமாகச் சொல்லிக்கொண்டே சென்ருர். இச் செய்தி பத்திரிகைகளின் மூலம் உலகம் எங்கும் பரவியது. இந்தியாவின் மூலே முடுக்கு களிலுள்ள கிராமங்கள் அனேத்துக்கும் மகாத்மாஜியின் சுதந் தரப் பிரதிக்ஞை எட்டியது. அரசியல் விஷயத்தில் சற்றும் அக்கறை இல்லாத இளேஞர்களில் பலர் இந்த மகத்தான இயக்கத்தால் தூண்டப் பெற்ருர்கள். சந்தோஷத்திலே மூழ்கி கஷ்டம் ஏதும் அறியாத பல குடும்பங்களேச் சார்ந்த ஆண் களும் பெண்களும் மகாத்மாஜியைப் பின்பற்ற வேட்கை கொண்டார்கள். அவர் 80 பேர்களுடன் ஆரம்பித்த இயக்கம் மகத்தானதொரு வெள்ளமாகப் பெருகி, இந்தியா முழுவதும் ஒரு புயற்காற்று மாதிரி வீசியது. அவ்வியக்கத்தில் முன்பின் தெரியாமல், அவ்வேகத்தால் தள்ளப்பட்டு நுழைந்த பல ஆயிரக் கணக்கான இளேஞர்களில் நானும் ஒருவன்.

எனக்கு அதற்கு முன் அரசியல் வாசனே கிடையாது. அரசியலில் புகவேண்டுமென்ற விருப்பமும் எனக்கு இல்லே. 1927-ஆம் வருஷம் சென்னேயில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் மகாநாட்டுக்கு மாத்திரம் பார்வையாளனுகச் சென் றிருந்தேன். ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்திலும், ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் போதித்த உயர்ந்த உண்மைகளிலும் எனக்குப் பற்றுதல் உண்டு. அவர்கள் ஆரம்பித்த இயக்கத்தில் சேர்ந்து அதற்கு ஏற்றவாறு தொண்டாற்ற வேண்டும் என்பதுதான் அப்போது எனக்கு இருந்த விருப்பம். அதை அநுசரித்து 1930-ஆம் வருஷம், பிப்ரவரி மாதம், 3-ஆம் தேதி சிறிய முறையில் ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலயம் என்ற ஒரு ஸ்தாபனத்தையும் ஆரம்பித்திருந்தேன் ஆனல், பத்திரிகை மூலம் வந்த மகாத்மாஜியின் வார்த்தைகள் காதில் கணீர் கணீரென ஒலித்தன. அவை இரவும் பகலும் மனத்தை

உறுத்திக்கொண்டிருந்தன. மகாத்மாஜி நம் நாட்டின் சுதந்தரத்திற்காக, இவ்வயதில் இவ்வியக்கத்தை ஆரம்பித்திருக்கும் போது நாம் அதில் சேராமல் இருப்பது தேசத்துக்கு நாம் செய்யும் அபசாரம் என்றும், அதில் ஈடுபட்டு உழைப்பதே தேசத்திற்கு நாம் செய்யவேண்டிய சிறந்த கடமை என்றும் என் மனத்தில் தோன்றியது. அவர் தாண்டிக்கு நடந்து செல்லும் பிரயாணத்தைப் பற்றிப் பத்திரிகையில் படிக்கப் படிக்க எனக்குக் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடும். அந்தக் கோலத்தை மற்றவர்கள் பார்த்தால் கேலிக்கு இடமாகும் என்று பத்திரிகைகளைத் தனியாகப் படித்து வந்தேன்.

மே மாதம் 5-ஆம் தேதி. அன்று நான் உதகையில் இருந்தேன். அக்காலத்தில் வருஷந்தோறும் கோடைக்கால விடுமுறைக்கு உதகைக்குப் போகும் வழக்கம் இருந்தது. அன்று புத்தர் பிறந்த நாள். அகஸ்மாத்தாக அது என்னுடைய பிறந்த நாளாகவும் இருந்தது. அங்கே ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்தில்தான் இருந்தேன். அன்று பூஜைக்குப் பிறகு பெரிய விருந்து நடைபெற்றது. விருந்துண்ட பிறகு வெளியே வந்தோம். அன்றைப் பத்திரிகை அப்பொழுதுதான் வந்தது. பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தோம். 'மகாத்மாஜி கைது செய்யப் பட்டார்' என்ற செய்தி கொட்டை எழுத்துக்களில் போடப்பட்டிருந்தது. அது எதிர்பார்த்ததுதான்; எனினும் திடுக்கிடச் செய்தது. இனிச் சும்மா இருப்பது சரியல்ல என்று எனக்குத் தோன்றியது. அன்றிரவு என் மனத்தில் பெரிய போராட்டம் நிகழ்ந்தது. கடைசியாக, இயக்கத்தில் சேருவதே சரியென்ற முடிவுக்கு வந்தேன். அடுத்த நாள் காலை அங்கிருந்த சுவாமிகளிடம் விடை பெற்றுக்கொண்டு வந்தேன். கோவை வந்ததும் காங்கிரசில் அங்கத்தினனாய்ச் சேர்ந்தேன். அன்றுதான் கோவைக் காங்கிரஸ் காரியாலயத்தில் ஸ்ரீ ஸி. பி. சுப்பையா அவர்களையும் ஸ்ரீ சுப்ரி அவர்களையும் முதல் முதல் சந்தித்தேன். அன்று ஆரம்பித்த நட்பு, சென்ற சுமார் இருபது வருஷங்களாக நாங்கள் செய்துவரும் தேச சேவைக்கு அடிப்படையாக இருந்து வருகிறது.

ஜூன் மாத ஆரம்பத்தில் என்னையும் கோவை டி. ராக வாச்சாரி அவர்களையும் கைது செய்து ஆறு மாதக் கடுங் காவல் தண்டனை விதித்தார்கள். கோவையில்போல் இந்தியா முழுவதிலும் லட்சக்கணக்கான பேர்கள் கைது செய்யப்பட்டு சிறைக்குச் சென்றது சரித்திரப் புகழ் பெற்ற விஷயம். ஆங்கிலேய அரசாங்கம் முதலில் இவ்வியக்கத்தை அடக்க முயற்சி செய்தது. ஆனால் இயக்கம் பெருத்த வெள்ளம் போல் கரை புரண்டு அனைத்தையும் அடித்துக்கொண்டு போக ஆரம்பித்ததும், இந்திய மக்களுடன் சண்டை செய்வதைவிட சமாதானம் செய்துகொள்வதே மேல் என்று அவர்களுக்குத் தோன்றிற்று. அப்போது வைசிராயாக இருந்த லார்டு இர்வின் அங்ஙனம் செய்துகொள்வது மேல் என்று கருதினர்; எனவே மகாத்மாஜியையும் காரியக் கமிட்டி அங்கத்தினர் களையும் சமரசப் பேச்சுக்கு அழைத்தார். அதுதான் சரித் திரத்தில் பேர் பெற்ற காந்தி—இர்வின் ஒப்பந்தமாக முடிந்தது. அவ்வொப்பந்தப்படி சிறையில் இருந்த தொண்டர்கள் அனை வரும் விடுதலை செய்யப் பெற்றார்கள். அதற்குப்பின் நடந்த கராச்சி காங்கிரசில், மகாத்மாஜி காங்கிரசின் ஏகப் பிரதி நிதியாக இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டுக்குச் செல்ல வேண்டுமென்று தீர்மானம் செய்யப்பட்டது. மகாத்மாஜியும் அதன்படி புறப்பட்டார்.

வட்ட மேஜை மகாநாடு, எதிர்பார்த்தபடி வெற்றிகரமாக நடைபெறவில்லை. எனவே, அடுத்த ஆண்டு ஜனவரி மாதம் அதாவது 1932-ஆம் வருஷ ஆரம்பத்தில் அவர் இங்கிலாந் திலிருந்து திரும்பியதும், சில தினங்களுக்குள்ளேயே பம்பாயில் கைது செய்யப்பட்டார். இந்தியா முழுவதிலும் காங்கிரஸ் ஊழியர்கள் கைது செய்யப்படுவதற்கு அது அடையாளமாக இருந்தது. தேசத்தின் மூலை முடுக்குகளில் இருந்து தேசீய இயக்கத்தில் ஈடுபட்டிருந்த இளைஞர்கள் யாவரும் சிறை செய்யப்பட்டனர். அங்ஙனமே நானும் கைது செய்யப் பட்டேன். இவ்வருஷம் ஓர் ஆண்டுத் தண்டனை கிடைத்தது. சிறையில் இருந்த இவ்வோர் ஆண்டு, மகாத்மாஜியின்

கொள்கைகளையும் தத்துவங்களையும் ஆராய்வதிலும், அக் கொள்கைகளைச் சிறப்பாகப் பின்பற்றுபவர்களுடன் நெருங்கிப் பழகுவதிலும் கழிந்தது. சிறைவாசம் முடிந்து, அவ்வாண்டு இறுதியில் வெளிவந்தேன்.

அதுவரையில் மகாத்மாஜியுடன் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்ததில்லை. 1934-ஆம் வருஷ ஆரம்பத்தில் அவர் தென்னாட்டுக்குச் சுற்றுப் பிரயாணம் வருகிறாரென்ற செய்தி எங்கள் மனத்தில் மிகுந்த குதூகலத்தை உண்டாக்கியது. இந்தச் சுற்றுப் பிரயாணத்தின்போது அவருடன் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் கிடைக்குமென்று எதிர்பார்த்திருந்தேன்.

# 4. நெருங்கிப் பழகியது

மகாத்மாஜி ஹரிஜன இயக்கம் சம்பந்தமாகத் தென்னுட்டுக்குச் சுற்றுப் பிரயாணம் வரப்போகிருர் என்ற செய்தி 1933-ஆம் வருஷக் கடைசியிலேயே வெளியிடப்பட்டது. மக்கள் அனைவரும் அவர் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவ்வருஷம் டிசம்பர் மாதத்தில்தான் நானும் விடுதலை ஆகியிருந்தேன். இயக்கத்தில் ஈடுபட்டிருந்த இளைஞர்கள் அனைவருக்கும் ஒரே குதூகலம். ஊரெங்கும் ஹரிஜன இயக்கத்துக்காக நிதி சேர்த்து, அவருக்குச் சமர்ப்பிக்கக் கழகங்கள் நிறுவப்பட்டன. கோவை ஜில்லாவில் இந்த நிதியை வசூல் செய்யும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டது.

மாகாணம் முழுவதும் மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணத்தை வெற்றிகரமாக நடத்தும் பொறுப்பு அப்பொழுது தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கத்துக்குத் தலைவராக இருந்த டாக்டர் ராஜன் அவர்களைச் சார்ந்திருந்தது. டாக்டர் ராஜனுடைய வேலை மிகவும் கடினமானது. ஓர் ஊர் விடாமல் எல்லா ஊர்களுக்கும் மகாத்மா காந்தி வரவேண்டுமென்று அழைப்புகள் அவரிடம் குவிந்த வண்ணமாயிருந்தன. ஜில்லாத் தலைநகரங்கள், தாலூக்காத் தலைநகரங்கள், கிராமங்கள் முதலிய அனைத்தும் அவரை வரவேற்றிருந்தன. எல்லோரும் தங்கள் ஊருக்கு அவர் வரவேண்டுமென்று விரும்பினர். இதில் ஓர் ஊரை ஒப்புக்கொண்டால் மற்ற ஊரினருக்கு வருத்தம் ஏற்படலாம். அவர் குறிப்பிட்டிருந்த காலத்திற்குள் எல்லா ஊர்களுக்கும் அவர் போகமுடியாது என்பது நிச்சயம். எனவே சில ஊர்களுக்குத்தான் அவர் போக இயலும். எந்த ஊருக்கு அவரை அழைத்துச் செல்வது என்று முடிவு செய்வதில் டாக்டர் ராஜனுக்கு இருந்த சங்கடத்தை மக்கள் ஊகித்து அறிந்துகொள்ளலாம். கோவை ஜில்லாவில் சுற்றுப் பிரயாண விவரத்தைத் தயார் செய்யும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

1934 பிப்ரவரியில் மகாத்மாஜி திருப்பூர் வந்தார். திருப்பூர், கதருக்குப் பெயர் பெற்ற இடம் என்பதை நண்பர்கள் அறிவார்கள். ஸ்ரீ பி. டி. ஆஷர் என்ற பிரபல வியாபாரி வீட்டில் காந்திஜிக்கு இருக்கை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மக்களுக்கு ஒரே உற்சாகம். அதுதான் கோவை ஜில்லாவுக்கு அவர் வரும் முதல் ஊர். அன்றிலிருந்து இரண்டு தினங்கள் கோவை ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்து, அதற்குமேல் ஒருவாரம் குன்னூரில் ஓய்வு எடுத்துக்கொண்டு கிளம்புவதாப் பிரயாணத் திட்டம் அமைக்கப்பட்டிருந்தது. இந்த நாட்கள் முழுவதும் அவருடன் இருக்கும் பாக்கியத்தை நான் பெற்றேன். இப்பொழுது அச் சுற்றுப் பிரயாணம் நிகழ்ந்து சுமார் 15 வருஷங்கள் ஆகிவிட்டன. ஆயினும், அவரோடு கழித்த அந்த நாட்கள் இன்னும் என் மனத்தில் இருந்துகொண்டிருக்கின்றன. அவருடைய பேச்சும், அன்பு நிறைந்த இன்சொல்லும் காதில் ஒலிக்கின்றன. அவரைப் பற்றிய மிகப் புனிதமான அந்த எண்ணங்கள் மறக்க முடியாதவை.

மகாத்மா காலையில் திருப்பூர் வந்து சேர்ந்தார்; திருப்பூரில் பொதுக் கூட்டத்தை முடித்துக்கொண்டு, ஓய்வு எடுத்துக் கொண்டார். மத்தியான்னம் சுமார் இரண்டரை மணிக்குப் பல்லடம், சூலூர் முதலிய இடங்களின் வழியாகக் கோவை போய்ச் சேர்வதாக இருந்தார். திறந்த மோட்டாரில்தான் மகாத்மாஜி சாதாரணமாகப் போவது வழக்கம். காரின் மேலிருந்த விதானம் கழற்றப்பட்டு இருந்தது. வெயில் மிகவும் கடுமையாக இருந்தது. எங்களைப் போன்ற இளைஞர்களுக்கே அது கடுமை. மகாத்மாஜியின் வயசையும் வெயிலின் வெப்பத்தையும் உத்தேசித்துக் காரின்மேல் விதானத்தைப் போட்டுக் கொள்ளலாமென்று சொல்ல நினைந்து, "வெயில் மிக அதிகமாய் இருக்கிறது; விதானத்தைப் போட்டுக்கொள்ளலாம்" என்று சொன்னேன். அதற்கு மகாத்மாஜி வழக்கம்போல் 'கொல்' லென்று சிரித்து, "வெயில் அதிகமாக இருக்கலாம்; ஆனால், கூட்டத்தின் வெப்பம் இன்னும் கடுமையாக இருக்குமே!" என்று சொன்னார். அதன் கருத்து எனக்கு

முதலில் புரியவில்லை; பல்லடம் சென்றதும் புரிய ஆரம்பித்தது. மகாத்மாஜி செல்லும் இடங்களில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடுகிறார்கள். மேல் மூடி போட்ட காரில் அவர் செல்வாரானால் மக்கள் அவரைக் காண ஆர்வம் கொண்டு நெருங்குகிறார்கள்; காரின் மேல்பாகம் அவரைப் பார்க்கவொட்டாமல் தடுப்பதால், அதைப் பிய்த்து எறிந்துவிடுகிறார்கள். மகாத்மாஜியைச் சரியாகத் தரிசனம் செய்ய முடியாவிட்டால், கூட்டத்தில் ஒருவரை ஒருவர் அடித்து விழுந்துகொண்டு முன்வர ஆரம்பிக்கிறார்கள். அதனால் குழப்பமும் சப்தமும் மிகுதியாக உண்டாகி, பல இடங்களில் காரின் கண்ணாடி உடைந்து போயிருக்கின்றது. வெயிலின் கடுமையைவிட மக்களின் வேகத்தால் உண்டாகும் இந்த நிலைமை அதிகக் கடுமையாக இருக்கும் என்பதுதான் அவர் சொன்ன வார்த்தைகளின் கருத்து. ஆதலால்தான் மக்கள் அனைவரும் நன்ருகப் பார்க்கும் பொருட்டு, அவர் எப்பொழுதும் திறந்த காரிலேயே செல்வது வழக்கம். அவர் பிரயாணம் முழுவதும் அவ்விதமேதான் நடைபெற்றது. கடுமையான வெயிலில்கூட அவ்விதந்தான் அவர் செல்வார்.

மாலையில் கோவையில் பிரம்மாண்டமான கூட்டம். கோவை பார்க்கின் மத்தியில் பெரியதொரு மேடை போடப்பட்டுச் சுற்றிலும் மக்கள் உட்கார்ந்து இருந்தார்கள். சுமார் லட்சம் பேர் இருக்கலாம். ஜில்லாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் மக்கள் வந்து, அதிகாலையிலிருந்து உணவும் ஓய்வும் இல்லாமல், அந்தக் கடும் வெயிலில் காத்துக்கொண்டிருந்தார்கள். கூட்டம் குழப்பம் இல்லாமல் நிசப்தமாகவே நடைபெற்றது. மகாத்மாஜிக்கு அதில் ஒரு சந்தோஷம் உண்டாயிற்று. வரவேற்புப் பத்திரங்கள் பல வாசித்தளித்தவுடன் பணமுடிப்பும் அளித்த பிறகு ஹரிஜன இயக்கத்தைப்பற்றி மகாத்மா விரிவாகப் பேசினர். அன்றிரவு வித்யாலயத்தில் இருப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

வித்தியாலயம் பிப்ரவரி 3-ஆம் தேதி கோவையில் ரவுண்டு ரோடில் உள்ள ஒரு பங்களாவில் ஒரே ஹரிஜனப் பிள்ளையுடன் ஆரம்பமாயிற்று. பின் 4, 5 பிள்ளைகள் சேர்ந்தார்கள். அதற்குமேல் அதைக் குருகுல்மாகச் செய்ய வேண்டுமென்ற கருத்துத் தோன்றியது. எனவே, பிள்ளைகள் விடுதியுடன் சேர்த்து ஒரு பள்ளிக்கூடமும் நடத்தப்பட்டது. அப்படி நடத்த இடம் அதிகமாக வேண்டும். மகாத்மாஜியின் கருத்துக்களுக்கு இணங்க, அது கிராமத்தில் இருக்க வேண்டு மென்ற எண்ணம் எனக்கு இருந்தது. ஆதலின், போத்த னூருக்கு அருகிலுள்ள மேட்டூரில் ஒரு நண்பருக்குரிய பங்களாவில் அப்போதைக்கு அது இருந்தது. அப்பொழுது சுமார் 60 பிள்ளைகள் இருந்தார்கள். மகாத்மாஜி அன்றிரவு தங்குவதற்கு வித்தியாலயத்தில் ஏற்பாடு ஆகியிருந்தது.

கோவையிலிருந்து புறப்பட்டு போத்தனூர் நோக்கிச் சென்றுகொண்டு இருந்தோம். கோவை நகரம் தாண்டும்வரை ரஸ்தா முழுவதும் மக்கள் ஆயிரக்கணக்கான பேர்கள் குவிந்து கொண்டிருந்ததால், கார் வேகமாகச் செல்ல முடியவில்லை. கோயமுத்தூர் எல்லை முடிந்ததும், கார் வேகமாகச் செல்ல ஆரம்பித்தது. போத்தனூர் வந்ததும் இடதுகைப் பக்கம் திரும்பி, ரஸ்தா வளைந்து சென்று கொண்டிருந்தது. அந்த வளைவில் ஒரு ரயில்வே கேட் இருந்தது. கொஞ்ச தூரத்தில் இருந்தாலும் ரஸ்தாவிலிருந்து அந்த கேட் வண்டி ஓட்டுபவர் களுக்குப் புலப்படாது. கார் ஓட்டுபவனுக்கு அந்த ரஸ்தாவில் பழக்கம் இல்லாததால் அவனுக்கு அந்தக் கேட் இருப்பது தெரியாது. அவன் வழக்கம்போல் வேகமாக ஓட்டிக்கொண்டு வந்தான். நான் காரின் முன்னே உட்கார்ந்த போதிலும் மகாத்மஜியுடன் பேசிக்கொண்டு வந்ததால் கேட்டின் பக்கத் தில் வருவதைக் கவனிக்கவில்லை. அப்பொழுது கேட் மூடப் பட்டிருந்தது. கார் ஓட்டுபவன் வேகமாக வந்துகொண்டிருந் தான்; கேட் மூடியிருப்பதைப் பார்த்ததும் வண்டியைத் திடீரென்று நிறுத்தினன். மிகவும் சமீபத்தில்தான் ப்ரேக்

போடப்பட்டபடியால் உடனே நிறுத்த முடியவில்லை. கார் கீச் என்ற சத்தத்துடன் கேட்டின்மேல் மோதியது. மோதின வேகத்தில் கேட்டுக்குமேல் மாட்டியிருந்த இரும்பு விளக்கு மேலே பறந்து, காரில் எனக்கும் கார் ஓட்டுபவனுக்கும் மத்தியில் விழுந்தது. எனக்குக் கலவரமாய் விட்டது. மகாத்மாஜி என்ன சொல்வாரோ என்ற ஒரே பயம். ஆனால் மகாத்மாஜியின் கொல்லென்ற சிரிப்புக் காதில் விழுந்ததும் தைரியம் பிறந்தது. "அவினாசி, என்ன நேர்ந்துவிட்டது?" என்று அவர் அன்புடன் கேட்டார். ஒரு கணத்தில் அனைத்தையும் புரிந்துகொண்டார். இதனால் அவர் சிறிதேனும் பாதிக்கப்படவில்லை. அவரிடமிருந்து ஒரு வசை மொழிகூட வரவில்லை. ஏன் ஜாக்கிரதையாக இருக்கவில்லை என்றுகூட கேட்கவில்லை. "பரவாயில்லை, ஏன் இவ்வளவு அதைரியப் படுகிறாய்?'' என்று கேட்டமாதிரி இருந்தன அவருடைய சிரிப்பும் கேள்வியும். எனக்குப் பயம் தெளிந்தது. வந்து மோதிய வேகத்தில் கேட்டும் ஓரளவு உடைந்துவிட்டது. ரெயில் வண்டி சென்ற பிற்பாடு கேட்டைத் திறந்து மேல் சென்றோம்.

அன்று நடந்த சம்பவமும், அப்போது மகாத்மாஜி நடந்துகொண்ட வகையும், அவர் இன்மொழியும் சிரிப்பும் இன்னும் என் நினைவில் பசுமையாக இருக்கின்றன. நல்ல வேளையாக இந்த விபத்தினால் எவருக்கும் ஒரு பாதகமும் ஏற் படவில்லை. ஆனால் ஏதாவது நடந்திருந்தால், என்ன ஆயிருக்கும் என்ற எண்ணம் என் மனத்தில் பல தடவைகளில் வருவதுண்டு. மிகப் பெரியவர்களுடைய சுற்றுப் பிரயாணத் திட்டத்தை நடத்துபவர்களுக்குப் பெரிய பொறுப்பு உண்டு. மிகச் சிறிய விஷயங்களில்கூட முன்னமே திட்டம் போட்டு நன்றாகச் செய்ய வேண்டியது எவ்வளவு அவசியமென்று எனக்குப் பட்டது. இது எதிர்காலத்தில் எனக்கு ஒரு நீதியாக இருந்தது. நிறைந்த சக்தியுடையவர்கள் மன்னிக்கும் இயல்பு உடையவர்களாக இருப்பார்கள் என்று புத்தகத்தில் படித் திருக்கிறேன். ஆனால் வாழ்க்கையில் அவ்விதம் இருப்பவர்களைப்

பார்ப்பது மிக அரிது. அன்று எனக்குக் கிடைத்த அநுபவம் நாம் அத்தகைய மனிதர்களில் ஒருவரை நேரில் சந்தித்தோம் என்ற எண்ணத்தை என் மனத்தில் உண்டாக்கிற்று. கோபமும் தாபமும் பலவீனத்துக்கு அடையாளங்கள்; அன்பும் அடக்கமும் மன்னிப்புமே உயர்ந்த ஆண்மைக்கும் ஆற்றலுக்கும் அறிகுறியாகும். கோடிக்கணக்கான மக்கள் மகாத்மாஜியைப் போற்றி வரும் ரகசியத்தின் ஒரு பகுதியை அன்று நான் கண்டேன்.

# 5 வித்தியாலயத்தில் காந்திஜி

அன்றிரவு மகாத்மாஜி வித்தியாலயத்தில் தங்கினுர். வித்தியாலயத்தில் அப்பொழுது சுமார் 60 பிள்ளைகள் இருந்தார்கள். அது குருகுல முறையில் நடைபெற்று வந்தது. வித்தியாலயத்தில் ஜாதி வித்தியாசம் இல்லை. முதலில் அதை ஆரம்பித்தபோது ஜாதி வித்தியாசம் ஏதும் இல்லாமல் எல்லா ஜாதி மக்களையும் அதில் சமமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தோம். அந்த முடிவைப் பலர் எதிர்த்தனர். உயர்ந்த ஜாதி என்று சொல்லிக் கொள்ளுகிறவர்கள் தங்கள் குழந்தைகளை அனுப்ப மறுத்தார்கள். எனவே முதலில் ஒரு ஹரிஜனக் குழந்தைதான் எடுத்துக்கொள்ளப் பட்டான். அதற்குப் பிறகு, கொஞ்ச காலம் கழித்து வேறு சில பிள்ளைகளும் சேர்ந்தனர். அது ஓர் அனுதை ஆசிரமமாக ஆரம்பமாயிற்று. உயர்ந்த கொள்கைகளுடன் அது நன்ருக நடந்து வருவதை அறிந்து, பலர் தங்கள் குழந்தைகளை அனுப்பத் தலைப்பட்டனர். மகாத்மாஜியின் கொள்கைகளைப் பின்பற்றி அது நடந்துவந்தது. அங்கு வேலைக்காரர்கள் இல்லை. எல்லா வேலைகளையும் குழந்தைகளே தங்களுக்குள் பிரித்துக்கொண்டு செய்து வந்தனர். அதன் மூலம் அவர்கள் ஆற்றலும் அறிவும் வளர்ந்து வந்தன. அனைவரும் கதர் உடை தரித்திருந்தனர். மகாத்மாஜியின் வருகை அவர்களுக்குப் பெருத்த உவகை கொடுத்தது. மகாத்மாஜி வந்ததும். எல்லோரும் அவர் அடி வணங்கி நின்ருர்கள். மகாத்மாஜிக்கும் வித்தியாலயத்தைப் பார்த்தது மிகவும் மகிழ்ச்சி அளித்ததுபோல் தோன்றியது.

காந்திஜி, மாலை உணவு முடிந்து குழந்தைகளுடன் கொஞ்ச நேரம் பேசியிருந்துவிட்டுத் தம் வேலைக்குச் சென்ருர்; முதலில் கொஞ்சம் தபாலைப் பார்த்தார். இரவு சுமார் 10 மணிக்கு வெட்ட வெளியிலேயே அவருக்கு ஒரு கட்டில் போட்டு, அதன் மேல் படுக்கை போட்டிருந்தது. அன்று காலையிலிருந்து பல

ஊர்களில் வசூலான தொகைகளின் கணக்கை அவர் படுக்கைக் குப் போகுமுன் பார்ப்பது வழக்கம். இரவு எவ்வளவு நேர மாஞலும் அதைப் பார்த்து முடித்துக் கொண்டுதான் உறங்கப் போவார். அந்தக் கணக்கும் அவ்வளவு சுலபமானதல்ல என்பதை நான் தெரிவித்துக்கொள்ள வேண்டும். அவர் செல்லுமிடங்கள் எல்லாம் 'ஹரிஜன் கேலியே' (ஹரிஜனங் களுக்காக என்பது பொருள்) என்று கையை நீட்டுவார். அவர் செல்லும் கிராமங்கள் நகரங்கள் அனைத்திலும் பலவகை நாணயங்கள் வந்து குவியும். பணம் அதிகமாகக் கொடுப் பவர்கள் நோட்டாகவும் கொடுக்கலாம். ஆங்காங்கே வசூல் செய்த காங்கிரஸ் கமிட்டிகள் சேர்ப்பித்த பணம் செக்காகவும் இருக்கும்; ரொக்கமாகவும் இருக்கும். இவற்றுடன் பல இடங் களில் தங்கம், வெள்ளி, கல் நகைகளாகவும் இருப்பதுண்டு. சில சமயங்களில் வேறு பொருள்களாகவும் இருக்கும். இவ் வளவையும் கணக்கிட்டு முடிவு செய்வது சாதாரணமான விஷயம் அல்ல. சில சமயங்களில் இதை முடிக்க இரவு பன்னி ரண்டு அல்லது ஒரு மணியும் ஆவதுண்டு. வேலையில் சுணக்க மாக இருப்பவர்கள் அல்லது சோம்பேறிகள் மகாத்மாஜியுட னிருந்து வேலை செய்ய முடியாது. இரவில் எவ்வளவு நேர மாஞலும் இதையும் பார்த்து முடித்துக்கொண்டுதான் அவர் உறங்கச் செல்வார்.

அன்று வந்த பணத்தில் சில செக்குகள் இருந்தன. அவை களில் கையெழுத்து இடுவதற்குப் பவுண்டன் பேனுவைப் பக்கத்திலிருந்தவர்கள் உதறிக் கொடுத்தார்கள். அதைப் பார்த்ததும் உடனே ஒரு கணம் அவர் முகத்தில் ஒரு கடுமை தோன்றியது. ஆனுல், உடனே தமக்கு இயல்பான புன் சிரிப் புடன், "இப்படி, உதறித் தரையை அழுக்கு / ஆக்கலாமா?" என்று அவர் கேட்டார். சிறு விஷயங்களிலும் பெரியவர்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிருர்கள் என்பதற்கு இது அறிகுறியாக இருந்தது. அவருடன் இருந்த சில நாட்களில் நான் கற்றுக் கொண்டது இதுதான். பெரிய காரியங்களைச் சாதிப்பவர்களுக்கு மிகச் சிறிய விஷயங்களையும் அதிஜாக்கிரதை

யாகக் கவனிக்கும் வழக்கம் இருக்க வேண்டும். 'செய்வன திருந்தச் செய்' என்பது பெரிய விஷயங்களுக்கு மாத்திரம் அல்ல; சிறு விஷயங்களுக்கும் பொருந்தும். சிறு விஷயங் களைச் சரியாகக் கவனிக்கும் பழக்கம் இல்லாதவர்கள் பெரிய விஷயங்களை மாத்திரம் சரியாகக் கவனிக்கும் பழக்கத்தைப் பெற மாட்டார்கள்.

அடுத்த நாள் காலை வழக்கம்போல் நாலு மணிக்குப் பிரார்த்தனை நடந்தது. எத்தனை மணிக்கு உறங்கப் போன போதிலும் காலையில் நாலு மணிக்கு எழுந்து பிரார்த்தனை செய்வதை அவர் கை விட்டதே இல்லை. சில சமயங்களில் இரவு ஒரு மணி இரண்டு மணி வரையில் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருப்பார்; தாம் எழுதவேண்டிய ஹரிஜன் போன்ற பத்திரிகைகளுக்கு எழுதிக் கொண்டிருப்பார். ஆனால் காலையில் மாத்திரம் நாலு மணிக்குப் படுக்கையிலிருந்து எழுந்து பிரார்த்தனை செய்ய அவர் தவறியதே இல்லை. அவசியமானல் பிரார்தனைக்குப் பின் கூட அவர் உறங்கச் செல்வதுண்டு. ஆனல், நாலு மணிப் பிரார்த்தனை அவருடைய வாழ்க்கையில் என்றும் தடையின்றி நடந்து வந்த பழக்கமாக இருந்தது. அவ் வுன்னதமான மகானேடு ஒன்ருக உட்கார்ந்து பிரார்த்தனை செய்யும் பாக்கியத்தை வித்தியாலயக் குழந்தைகளும் ஊழி யர்களும் அன்று பெற்ருர்கள்.

அக்காலத்தில் வித்தியாலயத்தில் மின்சார வசதிகள் இல்லை. வித்தியாலய வாழ்க்கை மிகவும் எளிமையானது. அவர் வெட்ட வெளியிலே படுத்துக் கொண்டிருந்தார். பக்கத் தில் சமையலறைக்கெனப் போடப்பட்ட அறையில் சிறிய தாழ் வாரம் ஒன்று இருந்தது. பிரார்த்தனை முடிந்த பிற்பாடு நாங்கள் குளித்துப் பல காரியங்களைச் செய்வதற்குச் சென்ருேம். மகாத்மாஜி செய்த காரியம் வேடிக்கையாக இருந்தது. "நீங்கள் ஒருவரும் இங்கே கவனிக்க வேண்டிய அவசிய மில்லை" என்று சொல்லி அவர் எங்களை அனுப்பி விட்டார். அங்கே ஒரு கை விளக்கு (ஹரிகேன்) இருந்தது. அருகில் இருந்த வாளியைத் திருப்பிப்போட்டு, அதன்மேல் அவ்விளக்கை

வைத்தார். அந்த விளக்கு வெளிச்சத்தில் தம் துடையின்மேல் வைத்துக்கொண்டு கடிதங்களை எழுத ஆரம்பித்தார். அப்பக்கம் அவரைப் பார்க்க வந்த நான், மேஜை, நாற்காலி கொண்டுவர ஏற்பாடு செய்தேன். அவர் சிரித்தபடியே, "இதோ என் துடையே மேஜையாக இருக்கின்றது. இதற்குமேல் வேறொரு மேஜை எதற்கு?'' என்றார். இங்ஙனம் அவர் எளிமையாகப் பழகின விதந்தான் மக்கள் மனத்தைக் கொள்ளை கொண்டது. சாதாரணமாக அவருடன் பழகுவதே இன்ப அநுபவம். இவ்வளவு பெரிய மனிதரிடம் பழகும்போது அவர் நம்மைச் சேர்ந்தவர் என்ற உணர்ச்சியும், நமக்கு அவர் தந்தைபோன்ற அன்புடையவராக இருக்கின்றார் என்ற கருத்தும் நம் மனத்தில் உண்டாகின்றனவேயொழிய, அவர் மகாத்மா, எல்லா இந்தியருக்கும் ஒப்பற்ற தலைவர் என்று ஒருவிதமான பயமும் உண்டாகவில்லை.

அவர் மக்களிடம் பழகிய விதம் அபூர்வமாக இருந்தது. குழந்தைகளுடன் அவர் சிரித்து விளையாடுவார். அவர்களுடன் விளையாடிக்கொண்டிருக்கும்போது அவர் சிந்தனை வேறு எதையும் பெரிதெனக் கருதவில்லை யென்றே தோன்றும். இளைஞரிடத்தில் அவர் உற்சாகமாகப் பேசுவார்; பொது வேலையில் ஈடுபட்ட ஊழியர்களுக்கு ஆப்த நண்பராக இருந்து, கஷ்டம் வந்த நேரங்களில் அவர்களுக்குப் புகலிடமாக விளங்கினார். வயோதிகர்களுக்கு அவர்கள் குடும்பக் கவலைகளிலிருந்து மீள உபாயம் சொல்லித் தருபவராக இருந்தார். பெண்கள் அவரிடம் பழகிய தன்மையும் வியப்பானது; அவ்வளவு அன்புடனும் தாராளமாகவும் அவருடன் பழகினார். இறைவனைப் பார்த்து, "எல்லோருக்கும் எல்லாமாய் ஆனாய் நீயே'' என்று பக்தர்கள் பாடியிருக்கிறார்கள் அல்லவா? அதைப் படிக்கும்போது அதன் பொருளை நான் நன்றாக முன்பு உணரவில்லை. மகாத்மாஜியின் வாழ்க்கையைப் பார்த்த பிற்பாடுதான் அதன் உண்மைப் பொருளை ஒருவாறு உணர முடிந்தது. குழந்தையிலிருந்து வயோதிகர்வரை எல்லா வயசினருக்கும் எல்லாத் துறையில் இருப்பவர்களுக்கும் அவர் அன்பும் ஆறுதலும்

அளித்தது மாத்திரமல்லாமல், அவர்கள் வாழ்க்கையை இன்னும் சீராக நடத்துவதில் அவர்களுக்கு உதவியாக இருந்து, எல்லோருக்கும் உரிய நண்பராகவும் உற்ற துணையாகவும் விளங்கினர். இதுதான் கோடிக்கான மக்கள் அவர் பேரில் வைத்திருந்த ஆழ்ந்த அன்புக்குக் காரணமாயிருந்தது.

காலையில் சுமார் ஏழரை மணிக்கு நாங்கள் அன்றைப் பிரயாணத்தை ஆரம்பிக்க வேண்டியிருந்தது. புறப்படுமுன் வித்தியாலயக் குழந்தைகள், ஊழிர்கள் அனைவரும் வந்து ஒவ்வொருவராக அவர் திருவடியைத் தொட்டு வணக்கம் செய்தார்கள். வித்தியாலய ஆசிரியர்களில் ஒருவர் மகாத்மாஜியின் உருவப் படமொன்றை வெகு அழகாக வரைந்திருந்தார். அவர் வந்த நினைவாக அதன் அடியிலேயே அவர் கையெழுத்தைப் போடும்படி கேட்டோம். “I hope that the boys of the Vidyalaya will be strong in truth and faithful to God” என்ற வாக்கியத்தை எழுதி அவர் குஜராத்தியிலும் தமிழிலும் கையெழுத்திட்டார். அப்படம் இன்றும் வித்தியாலயத்தில் பத்திரமாகக் காப்பாற்றப்பட்டு அனைவராலும் போற்றப்பெற்று வருகிறது.

அன்று காலையில் முதல் வேலை வித்தியாலயத்துக்கு அஸ்திவாரக்கல் போட வேண்டியது. எனவே, அப்பணியை ஆற்ற நாங்கள் புறப்பட்டோம். அப்பொழுது வித்தியாலயம் இருந்த இடம் வாடகைக் கட்டிடம் என்று முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறேன். அது நிரந்தரமாக எங்கே ஸ்தாபிக்கப்படும் என்று எங்களுக்குத் தெரியாது. போத்தனூரிலேயே ஏற்படுத்தலாம் என்பதுதான் அப்பொழுது மனத்தில் இருந்த அபிப்பிராயம், மகாத்மாஜி அதற்கு அஸ்திவாரக்கல் நாட்டவேண்டுமென்ற விருப்பம் மாத்திரம் எங்கள் மனத்தில் நிறைந்திருந்திருந்தது. ஆனல், உடனே தகுதியான பூமி ஒன்றும் கிடைக்கவில்லை. அப்பொழுது என்னுடைய சகோதரர் ஸ்ரீ டி. எஸ். கல்யாண சுந்தரம் அவர்களுக்கு அருகில் 4 ஏக்கரா நிலம் ஒன்றிருந்தது. அதில் மகாத்மாஜியைக் கொண்டு

அஸ்திவாரம் போடுவதென்று தீர்மானம் செய்தோம். அங்கே சென்று அஸ்திவாரக்கல் நாட்டு விழாவை முடித்தோம். விழா மிகவும் அமைதியாகவும் நன்ருகவும் நடைபெற்றது. அங்கிருந்து அன்றையச் சுற்றுப் பிரயாணம் ஆரம்பமாயிற்று.

சாதாரணமாக நல்ல நாள் பார்க்கும் வழக்கம் எனக்கில்லே. மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணத்தின் சௌகரியத்தை அனுசரித்து அந்த அஸ்திவாரக்கல் நாட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அன்று நவமி. இப்படிப்பட்ட காரியங்களுக்கு நவமி உகந்தது அல்ல என்று சாதாரணமாகக் கருதுவார்கள். நண்பர்கள் பலரும், “என்ன, நவமியில் வித்தியாலயத்துக்கு அஸ்திவாரக்கல் போடுகிருர்களே'' என்று நினைத்தார்கள். அங்ஙனம் நினைத்தவர்களில் என் நண்பர் ஸ்ரீ சி. பி. சுப்பையா அவர்களும் ஒருவர். ஆனுல், அந்தச் சமயத்தில் சொன்னுல் எங்கள் மனத்துக்குச் சமாதானம் குறையுமென்று நினைத்து எவரும் அதை அப்பொழுது சொல்லவேயில்லே. பின்னுல் வித்தியாலயம் கோயமுத்தூருக்கு வடக்கே 11 மைலில் இருக்கும் பெரியநாயக்கன்பாளையத்திற்கு மாற்றப்பட்டது என்பதை அனைவரும் அறிவார்கள். மகாத்மாஜி அன்புடன் ஆசீர்வாதம் செய்து போட்ட அஸ்திவாரக் கல் அந்தப் புதிய இடத்திற்குக் கொண்டுபோய் நிலைநாட்டப் பெற்றது. மகாத்மாஜியின் புனிதத் திருக் கரங்களினுல் அஸ்திவாரம் போட்டதும் அவர் அதற்கு அளித்த ஆசியுமே வித்தியாலயம் தமிழ் நாட்டில் சிறப்பானதொரு ஸ்தாபனமாக வளர்ந்திருப்பதற்கு முக்கியமான காரணம்.

1934-ஆம் வருஷத்தின் ஆரம்பத்தில் மகாத்மாஜி வித்தியாலயத்திற்கு வந்து அஸ்திவாரக்கல் போட்டார். அதற்குப் பின் அவர் வித்தியாலயத்திற்கு வரவேயில்லே. வித்தியாலய ஊழியர்களைப் பற்றியோ, குழந்தைகளைப் பற்றியோ அவருக்கு அதிகமாகத் தெரியாது. எனினும், அவர் என்னைச் சந்திக்கும் போதெல்லாம் வித்தியால்யத்தைப் பற்றி விசாரிக்காமல் இருந்ததே இல்லே. அவருடைய அன்பு மிகவும் உயர்ந்தது.

இரவில் பனி பெய்யும்போது யாருக்கும் தெரியாமல் செடி, கொடிகள் அனைத்திற்கும் அப்பனி உதவியாக இருப்பதுடன் மலர்கள் எல்லாம் மலர்ந்து நறுமணம் வீச அடிப்படையாகவும் இருக்கிறது அதுபோன்றதே மகாத்மா காந்தி போன்ற பெரியோர்களுடைய அன்பும். அவர் அன்பில் படாடோபம் இல்லை; ஆனால், மக்கள் அதை உணர்கிறார்கள்; உணர்ந்து மலர்கிறார்கள். அவ்வன்பு மக்களை உயர்த்திப் பரிசுத்தமான காரியங்களில் ஈடுபடும்படி செய்கிறது. அதுவே சுயநலம் இல்லாத உண்மையான அன்பின் அறிகுறியாகும். மகாத்மாஜி கோடிக்கணக்கான மக்களின் இருதயத்தில் வீற்றிருந்ததன் காரணம் அவர் உள்ளத்தில் இருந்த இவ்வுயர்ந்த அன்பேயாம்.

# 6. நகைக் கள்வன்

ஸ்ரீ கண்ணபிரானை வெண்ணெய் திருடியவன் என்று சொல்வதுண்டு. கோகுலத்தில் எங்கு வெண்ணெய் வைத்திருந்தபோதிலும் அதைத் திருடிக் கண்ணன் சாப்பிட்டு விடுவானும். ஆனால், மற்றத் திருடர்களைக் கண்டால் வெறுத்து வந்ததுபோல் இந்தத் திருட்டுப் பிள்ளையைக் கண்டு, ஆயர் குல மக்கள் வெறுக்கவில்லை. அவன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்; ஒருவருக்கு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் வெண்ணெயைக் கொடுக்கவும் முன் வந்தார்கள்.

இறைவனைக் கள்வனாக வைத்துப் பக்தர்கள் பாடுவதுண்டு. இறைவன் பக்தர்களுடைய உள்ளங்களைக் கவரும் கள்வனுவான். அவர்களுக்குத் தெரியாமலே அவர்கள் மனத்தை அவன் கொள்ளை கொண்டு போவானும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய சரித்திரத்தில் ஒரு ரசமான சம்பவம் சொல்லப்பட்டிருக்கிறது. அவருக்குத் திருமணம் ஆகும்போது அவர் மணந்துகொண்ட பெண்ணுக்கு வயது ஐந்து. ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் போலவே அப்பெண்ணும் மிக எளிய குடும்பத்தில் பிறந்தவள். மணம் நடக்கும் போது பலரிடம் நகைகள் கடன் வாங்கிக் குழந்தைகளுக்குப் போட்டார்கள். அச்சிறு வயதில் குழந்தைகளுக்கு இருக்கும் சந்தோஷம் அந்த நகை போட்டுக் கொள்வதுதான். மணம் முடிந்த பிற்பாடு நகைகளைத் திருப்பிக் கொடுக்க வேண்டியிருந்தது. குழந்தை அதற்கு இடம் கொடுக்கவில்லை. மாலை வந்ததும் குழந்தை உறங்கப் போயிற்று. குழந்தையிடமிருந்து அந்த நகைகளை எப்படி எடுப்பது? ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவ்விடம் வந்தார்; அந்தக் குழந்தைக்குக் கொஞ்சமும் தெரி

யாமல் எல்லா நகைகளையும் ஒவ்வொன்ருகக் கழற்றிவிட்டார். நகைகள் சொந்தக்காரர்களிடத்தில் சேர்ப்பிக்கப்பட்டன. ஆனுல், குழந்தை மறுநாள் காலை எழுந்தபோது நகைகள் காணுமற் போனது கண்டு திகைத்து நின்றது. அவரும் ஒருவகைத் திருடர்தாமே!

மகாத்மாஜியின் வாழ்க்கையை நேரிற் கண்டு அநுபவித் தவர்கள் ஒரு விஷயத்தை நன்ருக உணர்வார்கள். அவர் ஹரிஜன முன்னேற்றம், கதர் இயக்கம் போன்ற விஷயங் களுக்கு வசூல் செய்து வந்தார். பணக்காரர்களிடத்திலிருந்து மாத்திரம் வசூல் செய்து கோடிக்கணக்கான தொகையைப் பெறவில்லை. ஏழைகள் கொடுத்த சிறு பொருளையே அவர் மிக உன்னதமாக மதித்தார். ஒருதடவை வறுமையில் மிகவும் ஈடுபட்டிருந்த ஒரு தாய் தனக்கிருந்த உடமையெல்லாம் கொடுக்கிறேன் என்று பன்னிரண்டணுவை அவரிடம் கொடுத்த போது, அவர் உள்ளம் மிகவும் உருகி, கண்ணில் நீர் துளிர்த்தது. பணக்காரர்கள் கொடுக்கும் லட்சக்கணக்கான பொருளைவிட அது மேலானதென்று அவர் அப்பொழுது உரைத்தார். அவருக்கு வந்த நன்கொடைகளின் பெரும்பகுதி கோடிக்கணக்கான பேர்கள் கொடுத்த சிறு தொகைகள் மூலம் வந்ததுவே. ஆனுல், அவ்வெளிய நன்கொடைகளை அவர் பொன்னேபோல் போற்றி அன்புடன் பெற்றுக்கொள்ளுவார்.

இவையனைத்தினும் வியப்பானது பெண்கள் அவரிடம் நடந்து கொண்ட முறைதான். பெண்கள் அவருடன் பழகின தாராளமான தன்மையும் அவரிடம் காட்டிய அன்பும் வியக்கத் தக்கவை. அவரிடம் இருந்த தூய்மை காரணமாகப் பெண்கள் அவரைத் தங்களில் ஒருவராகவே கருதி வணக்கம் செலுத்தி ஞர்கள். பலர் தங்கள் வீட்டில் கணவருடனும் மற்ற உற வினருடனும் ஏற்படும் சண்டை சச்சரவுகளைப் பற்றிக் கூட அவரிடம் சொல்லி ஆறுதல் பெற்ருர்கள். பெண்களுக்கு நகையின் பேரில் நிறைந்த மோகம் இருக்கிறது என்பது உலகு அறிந்த உண்மை. ஆனுல், போட்டி போட்டுக்கொண்டு

தங்களுடைய நகைகளை அவர்கள் மகாத்மாஜிக்குக் காணிக்கையாகக் கொடுத்ததுதான் இன்னும் அதிக வியப்பான விஷயம். அவர் பெண்களின் கூட்டங்களுக்குச் செல்லும் போதெல்லாம், "நகையழகும் மேனியழகும் உங்களுக்கு அழகல்ல. குணத்தின் அழகே அழகு'' என்று சொல்லுவார். "தரித்திர நாராயணர்களின் சேவைக்காக உங்கள் நகைகளைக் கொடுங்கள்'' என்று கேட்பார். உடனே ஆயிரக்கணக்கான பேர்கள் தங்கள் நகைகளைக் கழற்றிக் கொடுப்பார்கள். தம்மிடம் வந்து கொடுப்போர் நகைகளைத் தாமே அப்படியே கழற்றி விடுவார். இதில் தயை தாட்சண்யம் என்பது அவருக்கு இல்லை. ஒரு பெண் ஆறு வளையல்கள் போட்டுக் கொண்டிருக்கிறாளே, நான்கைக் கழற்றிக்கொண்டு, இரண்டை விட்டு வைப்போமென்று அவர் விட்டதே இல்லை. அனைத்தையும் அப்படியே கழற்றிக் கொள்வார். பெண்களும் மிகுந்த பக்தியுடன் அவைகளை அளிப்பார்கள். பல இடங்களில் இதற்குப் பயந்தே சில பெற்றோர்கள் மகாத்மாஜி வரும் கூட்டங்களுக்கு போகும்போது நகைகளைக் கழற்றி வைத்துப் போகும்படி தங்கள் பெண்களிடம் சொல்வது வழக்கம்.

வித்தியாலயத்திலிருந்து புறப்பட்ட பிற்பாடு, அன்று மத்தியான்னம் கோவையில் ஒப்பணக்கார வீதியிலுள்ள எங்கள் வீட்டில் தங்கினோம். வழக்கம்போல் அந்த வீட்டிற்கு அருகிலிருந்த வீடுகளிலுள்ள பெண்கள் அனைவரும் வந்து அவரை வணங்கினார்கள். மகாத்மாஜியும் வழக்கம்போல் அவர்கள் நகைகளைக் கேட்டார், அரை மணி நேரத்தில் அங்கே குவிந்த நகைகளைப் பார்க்க ஆச்சரியமாயிருந்தது. பலபேர்களுடைய நகைகளை மகாத்மாஜி அப்படியே பூப்போல் கழற்றி விட்டது, அவருக்கு இந்த விஷயத்தில் எவ்வளவு தேர்ச்சி இருந்தது என்பதைக் காட்டிற்று. நகைகளைக் கொடுப்பதில் அங்கு வந்திருந்த பெண்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டார்கள்.

தரித்திர நாராயணர்களின் சேவைக்காகப் பணம் கிடைக்குமென்றால். அவர் எந்தத் தொந்தரவும் மேற்கொள்ளத் தயார்.

மகாத்மாஜியிடத்தில் சிறந்த பக்தி பூண்டிருந்த நவாப் ராஜ மாணிக்கம் நாடக சபையார் அப்பொழுது கோவையில் நாடக மாடிக் கொண்டிருந்தார்கள். "ஹரிஜன இயக்கத்திற்கு இன்றைய வசூல் பணத்தைக் கொடுத்து விடுகிறோம். தாங்கள் ஐந்து நிமிஷமாவது எங்கள் நாடகத்திற்கு வந்து எங்களை ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

"எவ்வளவு பணம் கொடுப்பீர்கள்?" மகாத்மாஜி கேட்டார்

"வசூலாகும் பணம் எவ்வளவோ அவ்வளவையும் அப்படியே கொடுத்து விடுகிறோம்" என்று அவர்கள் சொன்னார்கள். மகாத்மாஜி நல்ல வியாபாரி. ஆதலால், பணத்தைப் பற்றிய பேச்சு எப்பொழுதும் தெளிவாக இருக்க வேண்டுமென்பது அவர் கொள்கை.

"அப்படி சொன்னால் போதாது. குறைந்தது எவ்வளவு கொடுப்பீர்கள் என்று இப்பொழுது தெரிவிக்க வேண்டும். அதை உடனே கொடுத்துவிடவும் வேண்டும்" என்று சொன்னார் மகாத்மாஜி.

இதைக் கேட்ட அவர்கள் என்னிடத்தில் விஷயத்தைச் சொன்னார்கள். "வசூல் எப்படியும் ரூ. 1500/-க்குக் குறையாது. நீங்கள் அந்தப் பணத்தை முன்னே கொடுத்து விடுங்கள். நாங்கள் வசூல் செய்த பிற்பாடு தங்களிடம் கொடுத்து விடுகிறோம்" என்றார்கள். நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன். மகாத்மாஜியும் நாடகத்துக்கு வர இசைந்தார். அன்று மாலை கோவையில் பொதுக் கூட்டம் முடிந்த பிற்பாடு நாடகத் திற்குச் சென்று வரச் சுமார் இரவு பத்து மணிக்குமேல் ஆயிற்று.

அன்று மாலை பீளமேட்டிலிருந்து நண்பர்கள் வந்தார்கள். பீளமேடு சமீப காலத்தில் மிகுந்த பணம் பெற்றிருப்பதைக் கோவை நகரத்தைத் தெரிந்தவர்கள் அறிவார்கள். 15 நிமிஷம் மாத்திரம் தங்கள் ஊர் வந்து செல்ல வேண்டுமென்று அவர்கள் மிகவும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்கள்.

"ஹரிஜன நிதிக்கு எத்தனை கொடுக்கிறீர்கள்?" என்று மகாத்மா கேட்டார். ஒரு தொகை நிர்ணயம் செய்யப்பட்டது. இரவு பத்து மணிக்குப் பிறபாடு அங்கே புறப்பட்டோம். பி. எஸ். ஜி. கைத்தொழில் நிலையத்தில் ஒரு பெரிய கூட்டம். காந்திஜியைத் தரிசனம் செய்யக் காத்துக் கொண்டிருந்த அக்கூட்டத்திலிருந்த பெண்களில் பலர் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். மகாத்மாஜி வந்ததுதான் தாமதம். உடனே பலர் தங்கள் நகைகளைக் கொடுக்க முன்வந்தார்கள். ஒருவருக்குப்பின் ஒருவராய் அவர்கள் முன்வந்து தம் வளையல்களையும் கல் பதித்த நகைகளையும் கழற்றிக் கொடுத்துக் கொண்டு வந்தார்கள். அவர் புன் சிரிப்பில் ஒரு மாயம் இருந்தது. அவர் கண்களில் வீசிய ஒளியும், அன்பு ததும்பிய மொழிகளும் அனைவரையும் பரவசப்படுத்தின. தங்கள் நகைகளை மகாத்மாஜியைப்போல ஒரு மகானிடத்தில் ஹரிஜனங்களின் சேவைக்காகக் கொடுப்பதைக் கிடைத்தற்கரிய பெரிய பேறென்றே அவர்கள் உணர்ந்தார்கள். இதை அவர்கள் செய்கை காட்டியது. அவர்கள் நகைகளைக் கழற்றிக் கொடுத்தபோது, அவர்கள் தாய் தந்தையர் மனம் எவ்வாறிருந்தது என்பதைப் பற்றி என்னால் சொல்ல இயலாது. ஆனால் அப்பெண்கள் மாத்திரம் மனப்பூர்வமாக மிகுந்த மகிழ்ச்சியுடனும் ஆழ்ந்த பக்தியுடனும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதுபோல் அவைகளைக் கொடுத்தார்கள் என்பதை மாத்திரம் நன்ருகச் சொல்ல முடியும். இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. 15 நிமிஷம் என்று எண்ணிச் சென்றது, சுமார் 1 மணி நேரத்திற்கு அதிகமாய் விட்டது. அன்று ஹரிஜனங்களுக்கு என்று கொடுத்த அந்த நகைகள், பணம் முதலிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு, நாங்கள் வித்தியாலயம் திரும்பியபோது சுமார் 11—30 மணி இருக்கும்.

இம்மாதிரி நிகழ்ச்சிகள் கோவையில் மாத்திரம் அல்ல; நாடெங்கும் நடைபெற்றன. ஸ்ரீ கிருஷ்ணன் வெண்ணெயைத் திருடினான். ஆனாலும், ஆயர்குலப் பெண்கள்

அவனிடம் அன்புகொண்டு, அவன் வருகைக்காகக் காத் திருந்தார்கள் என்று பாகவதத்தில் படிக்கும்போது அதன் பொருளை நாம் உணரவில்லை. கண்ணன் திருடினுன், அவர்களுடைய பொருளை அபகரித்தான். ஆனுல், அதில் அவர்களுக்கு மகிழ்ச்சி இருந்தது. அவ்வெண்ணெயை அவனுக்குக் கொடுக்க அப்பெண்கள் விழைந்தார்கள். ஒரு நாள் அவன் வராவிட்டாலும், அவன் ஏன் வரவில்லை யென்று ஏங்கினுர்கள். பலர் யசோதையின் வீடு சென்று, அவன் வராத காரணத்தை விசாரித்துக்கூட வந்தார்கள். கட்டாயம் வரவேண்டுமென்று வற்புறுத்தி அழைத்து, வெண்ணெயைக் கொடுத்தார்கள். கண்ணன் அதை உண்டு ஏற்றுக்கொள்வதே தாங்கள் பெற்ற பேறு என்று நினைத் தார்கள். இவையனைத்தும் ஒரு பெரிய கவி கற்பனை செய்த கதையென்று நம்மில் பலர் நினைத்திருந்தோம். ஆனுல், மகாத்மாஜியுடன் வாழ்ந்து, அவருடைய வாழ்க்கைச் சம்பவங்களை அறிந்தவர்கள், இவைகளை வெறும் கற்பனை யென நினைக்க முடியாது. நம்முடைய அநுபவத்திலேயே நம்முடைய கண் முன்னுலேயே மக்கள் தாங்கள் அரும்பாடு பட்டுப் பெரிதெனப் போற்றும் தங்க நகைகளையும், கல் பதித்த ஆபரணங்களையும் அவருக்கு அன்புடன் கொடுத்து, அப்படிக் கொடுப்பதையே பெறும் பேறு என்று நினைத்த லட்சக்கணக்கான பெண்களை நாம் கண்டோம் அல்லவா?

கண்ணனை 'வெண்ணெய் திருடி'யெனக் கவிஞர்கள் அழகாக இலக்கியத்தில் எழுதினுர்கள். அங்ஙனமே மகாத்மாஜியை 'நகைக் கள்வன்' என்று எதிர்காலத்தில் அவருடைய சரித்திரத்தைச் சித்திரிக்கும் கவிகள் எழுது வார்கள் போலும்!

# 7. குன்னூரில் ஒரு வாரம்

தமிழ்நாட்டில் பல பாகங்களிலும் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு மகாத்மாஜி கோவை வந்து சேர்ந்தார். அவர் சுற்றுப் பிரயாணம் எவ்வளவு கடினமானதுஎன்பது நேயர்கள் இதற்குள் அறிந்திருப்பார்கள். காலேயில் நாலு மணியிலிருந்து இரவு நடுநிசி வரை ஓயாமல் வேலே இருக்கும். லட்சக்கணக்கான பேர்கள் கூடியிருக்கும் கூட்டங்களிலே பேச வேண்டும். ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான மைல்கள் காரில் செல்ல வேண்டும். இளைஞர்கள், ஊழியர்கள், காங்கிரஸ்காரர்கள், ஹரிஜன சேவையில் ஈடுபட்டவர்கள், இன்னும் எல்லாத் துறையிலும் இருக்கும் ஆயிரக்கணக்கான பேர்கள் அவரை நேரில் கண்டு பேச விரும்பினுர்கள். அவருக்குச் சொந்த நேரமென்று கிடையாது. தனி வாழ்க்கை யென்பது இல்லே. இருபத்துநான்கு மணி நேரமும் நாட்டைப் பற்றி நினைப்பதிலும், அதன் சேவையிலும் சென்றது. எனவே இந்தச் சுற்றுப் பிரயாணத்திற்கு மத்தியில் ஓரளவு ஓய்வு எடுத்துக் கொள்வதற்குக் குன்னூரில் அவர் ஒரு வாரம் தங்குவதென ஏற்பாடு ஆகி இருந்தது.

ஆந்திர நாட்டுத் தலேவர் ஸ்ரீமான் நாகேசுவரராவுக்குக் குன்னூரில் ஒரு பங்களா இருந்தது. அங்கே மகாத்மாஜி தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனேத்தும் செய்யப் பட்டிருந்தன. பங்களா பெரிதும் அல்ல; சிறிதும் அல்ல; நடுத்தரமானது. சுற்றிலும் ஒரு தோட்டம். அதைச் சுற்றிலும் மதிற் சுவரும் இருந்தது. குன்னூரில் சீதோஷ்ண ஸ்திதி சாதாரணமாக எல்லோருக்கும் இன்பம் தரக்கூடியது. அதிக வெயிலும் இல்லே. அதிகக் குளிரும் இல்லே. உலாவுவ தற்குத் தகுதியான நல்ல ரஸ்தாக்கள் இருந்தன. சுற்றிலும் கண்ணேக்கவரும் காட்சிகள் பல. ஓய்வு எடுத்துக் கொள்வ தற்குத் தகுதியான இடம். ஆகையால் மகாத்மாஜிக்கு அங்கே சென்று ஒரு வாரம் தங்குவது சந்தோஷமாகவே இருந்தது.

அங்கே சென்றதும் அங்கும் பல ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களும், சங்கங்களைச் சேர்ந்தவர்களும், காங்கிரஸ் ஊழியர்களும் வந்து அவரைத் தங்கள் தங்கள் ஊருக்கும் இடங்களுக்கும் வரவேண்டுமென்று வற்புறுத்தினர்கள். அவர்களுக்கு அவர் பதில் சொன்ன முறை எனக்கு ஆச்சரிய மாயிருந்தது. அந்த அந்த இடங்களில் யார் சுற்றுப்பிரயாணத் திட்டத்தை நடத்துவதற்கு முக்கியமாக இருக்கிருர்களோ, அவர்களிடத்தில் அவர் அனைத்தையும் விட்டு விடுவது வழக்கம். தமிழ்நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணத்தை ஏற்பாடு செய்து நடத்தும் பொறுப்பு டாக்டர் ராஜனுடையதாக இருந்தது. அந்தப் பொறுப்பில் மகாத்மாஜி தலையிட்டதே இல்லை. டாக்டர் ராஜன் எந்தத் திட்டத்தை தயார் செய்கிருரோ அதையே மகாத்மாஜி ஏற்றுக்கொண்டிருந்தார். எங்கெங்கே போகிறேமென்று விவரங்களை விசாரிப்பார். அந்த ஊர்களைப் பற்றியும் ஊர்களின் விசேடங்களைப்பற்றியும் தெரிந்துகொள்ளுவார். ஆனுல் திட்டத்தின் பொறுப்பு முழுவதும் டாக்டர் ராஜனுடையதாகத்தான் இருந்தது. அதற்கு அடுத்தபடி ஆங்காங்கு ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணங்களை ஏற்பாடு செய்ய மற்றவர்கள் இருந்தார்கள். அங்கும் அப்படித்தான். அந்த அந்த ஜில்லாவுக்குப் பொறுப்பாக யார் இருக்கிருர்களோ, அவர்களையே முற்றும் நம்பி, அனைத்தையும் விட்டு விடுவார். எங்காவது கூட்டத்திற்குச் செல்லும்போது மற்றவர்கள் வழிமறித்து மகாத்மாஜியை இறங்க வேண்டுமென்று கேட்டால், அந்த ஜில்லாவுக்குப் பொறுப்பாக இருக்கும் நண்பரைப் பார்த்து, "இறங்க வேண்டுமா?" என்று கேட்பார். அவர் இறங்கவேண்டு மென்று சொன்னுல் மகாத்மாஜி இறங்குவார். அல்லது வேறு கூட்டத்திற்கு அவசியம் செல்லவேண்டியதை முன்னிட்டு, இறங்க இயலாதென்று அவர் சொன்னுல், இறங்கமாட்டார். இதில் தம்முடைய யோசனைக்கும் முடிவுக்கும் அவர் இடம் வைத்துக் கொள்ளவே இல்லை. குழந்தைபோல் இவ்விஷயங் களில் மற்றவர்களை நம்பி, அவர்களைப் பின்பற்றியது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அவர் அப்படி வைத்த நம்பிக்கையே மற்றவர்களுக்கு அதிகப் பொறுப்புணர்ச்சியை ஊட்டிற்று.

நன்ருகக் காரியங்களைச் செய்ய வேண்டியவர்கள் கவனிப்பதற்குரிய இரு விதிகள் திருக்குறளில் சொல்லப் பட்டிருக்கின்றன.

" இதனை இதனால் இவன்முடிக்கும் என்ருய்ந்து
அதனை அவன்கண் விடல் "

என்பது ஒன்று. அடுத்தபடி,

" வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய ஞகச் செயல் "

என்பது மற்ருென்று.

அதாவது, ஒரு காரியத்தை எடுத்து, அதைச் செய்ய வேண்டுமானால், அதைச் செய்வதற்குத் தகுதியான ஆட்களை நியமனம் செய்ய வேண்டும். அவர்களை நன்ருகத் தெரிந்து நியமனம் செய்ய வேண்டும். நியமனம் செய்துவிட்ட பிற்பாடு அக்காரியத்தைச் செய்யும்படி அவர்களை நம்பி விடவேண்டும், மத்தியில் அவர்கள் பேரில் சந்தேகம் கொள்ளக்கூடாது. அல்லது ஓயாமல் இடைப்புகுவதும் கூடாது. அக்காரியங் களுக்குப் பொறுப்பு முழுவதையும் அவர்களிடம் ஒப்படைத்து விடவேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் உண்டாகும். இந்த உண்மைகளுக்கு மகாத்மா காந்தியின் வாழ்க்கையே எடுத்துக் காட்டாக இருந்தது.

மகாத்மாஜியின் சாதாரண வாழ்க்கையில்கூட இவை தெளிவாகத் தென்பட்டன. பல துறைகளிலும் செய்ய வேண்டிய காரியங்களை ஆராய்ந்து, அவைகளைச் செய்யத் தக்க மனிதர்களைப் பொறுக்கி நியமிப்பார். அவர்களை நியமித்தபின், அவர்களை நம்பி அனைத்தையும் விட்டு விடுவார். அவருடைய நம்பிக்கையே அவர்களுக்குப் பலத் தையும் சக்தியையும் கொடுத்தது. இந்த நம்பிக்கை காரண மாகச் சாதாரண மனிதர்கூடச் சிறந்து விளங்கக் கூடிய சக்தி பெற்ருர்கள். அதுவே பெரியோர்களின் போக்கு.

கோவை ஜில்லாவிலும், குன்னூரிலும் எனக்கு இப் பொறுப்புக் கொடுக்கப்பட்டது. அவருடைய சுற்றுப் பிரயாணத்தை நிர்வகிப்பது மிகக் கடினமான காரியம். எல்லோரும் தங்கள் தங்கள் ஊருக்கு வரவேண்டுமென்று கேட்பார்கள். சில ஊர்களுக்குத்தான் போக முடியும். அதை அவர்கள் உணராதவர்கள் அல்ல. ஆனால், அந்தச் சில இடங்களில் தங்கள் ஊரும் இருக்க வேண்டுமென்று விரும்புவார்கள். இவையெல்லாம் அவர்களுக்கு மகாத்மாஜி யிடத்திலிருந்த உள்ளன்பு காரணமாகவும், பக்தி காரண மாகவும் ஏற்பட்டவையே. வர இயலாமற் போனால், அந்தப் பக்தி காரணமாகவே அவர்கள் மிகவும் கோபித் துக் கொள்வார்கள். பெரும் சண்டைகள்கூட நிகழ்ந்திருக் கின்றன. சில சமயங்களில் பல வருஷங்கள்கூட இந்த மனஸ்தாபங்கள் நீடித்து இருந்ததுண்டு. ஆதலால், குன் னூரில் எல்லோரும் அவரவர் ஊர்களுக்கு மகாத்மாஜியை அழைத்துக்கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொண் டிருந்தபோது மகாத்மாஜி, "அவிநாசியைக் கேளுங்கள்" என்பார். எனக்கு மிகவும் தர்மசங்கட மாகிவிடும்.

குன்னூரில் இருந்தபோது, அவர் உதகை, கோத்தகிரி முதலிய இடங்களுக்குச் சென்று வந்தார். அங்கு ஒலி பெருக்கிகள் வைக்க முடியவில்லை. அவரால் உரத்துப் பேச வும் முடியாது. ஆனால் ஒலி பெருக்கியின் வேலையை என் நண்பர் ஸ்ரீ சுப்ரி அவர்கள் செய்ய முன் வந்தார். ஸ்ரீ சுப்ரியி னுடைய தொண்டை, இனிமையும் கம்பீரமும் உள்ள தொண்டை; ஐம்பதாயிரம் பேர்களுக்குக் கேட்கக்கூடியது. மகாத்மாஜி சொல்வதை ஸ்ரீ சுப்ரி மொழிபெயர்த்துத் தமிழில் உரக்கச் சொல்வார், மகாத்மாஜி ஹாஸ்யமாக அவ ரைத் தம் ஒலி பெருக்கி என்று அழைப்பது வழக்கம். மகாத்மாஜியுடன் செல்வதே ஓர் இன்பம். நகைச் சுவை ததும்பிய அவர் வார்த்தைகளைக் கேட்பதே அனைவருக்கும் உயர்ந்த கருத்துக்களையும் மகிழ்ச்சியையும் அளிக்கக் கூடியதாக இருந்தது.

குன்னூருக்கு வந்த முதல் நாள் மாலை, அப்பொழுது எல்லோருக்கும் மிகுந்த அலுப்பு. அவருடன் ஸ்ரீ மால்கனி என்ற கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் அவருக்குக் காரிய தரிசியாக வந்திருந்தார். டாக்டர் ராஜன், ஸ்ரீ ஜி. ராமசந்திரன் முதலியவர்களும் வந்திருந்தார்கள். உணவு அருந்திய பின்னர், எச்சில் இலைகளை வேலைக்காரர் எடுத்துப் பங்களாக் கட்டிடத்திற்கு அருகிலேயே ஓரிடத்தில் சிதறலாகப் போட்டிருந்தார்கள். அலுப்பில் எவரும் அதைக் கவனிக்கவில்லை மகாத்மாஜி மாலையில் பங்களாவைச் சுற்றி வந்தார். அந்த எச்சில் இலைகள் கட்டிடத்தருகில் அங்கும் இங்கும் சிதறிக் கிடந்தன. அந்த அசுத்தத்தைப் பார்க்க மகாத்மாஜிக்குக் கொஞ்சம் அருவருப்பாயிருந்தது. எச்சில் இலைகளைத் தூரத்தில் எச்சில் குழியில் அல்லவா போடவேண்டும்? இங்ஙனம் கட்டிடத்தருகில் சுகாதார முறைக்கு மாறுகப் போட்டிருந்தது அவர் மனத்திற்குப் பிடிக்கவில்லை. ஆனால் அதற்காக ஒருவரையும் அவர் வையவில்லை; திட்டவும் இல்லை; தம்மிடத்திலிருந்த தடியை ஓரிடத்தில் சார்த்தினர்; தாமே குனிந்து அந்த எச்சில் இலைகளை எடுத்துச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த அனைவருக்கும் மிகுந்த பீதியும் துக்கமும் உண்டாகி விட்டன எல்லோரும் போய் அவரை அடி பணிந்து மன்னிக்கும்படி கேட்டார்கள். அனைவரும் சேர்ந்து சில நிமிடங்களில் அந்த இடத்தைச் சுத்தம் செய்தார்கள்.

மகாத்மாஜி வேலை செய்யும் தன்மைக்கு இது ஒரு மாதிரியாக இருந்தது சிறிது பெரிது என்பது அவருக்கு இல்லை. ஓய்வு நேரத்திலும் கடமையில் பிறழலாகாது என்பது அவரது வாழ்க்கையின் கருத்து. பெரிய காரியங்கள் செய்யும்போது மட்டும் பார்த்தால் மக்களை நாம் நன்ருக உணர்ந்துகொள்ள முடியாது. முக்கியமான காரியங்களில் எல்லோரும் ஜாக்கிரதையாகத்தான் இருப்பார்கள். யாரொருவர் சிறு காரியங்களையும் நன்ருகச் செய்கிருர்களோ, அவர்கள்தாம் பெரிய காரியங்களையும்

நன்ருகக் கவனித்துச் செய்வார்கள். அதன் மூலந்தான் அவர்களுடைய உண்மைத் தன்மையை நாம் அறிந்து கொள்ளமுடியும். இது அன்று எங்களுக்குப் புலனுயிற்று, ஹரிஜன நிதிக்கு வசூல் செய்யும் பொருளை மகாத்மாஜி மிகவும் போற்றிக் காப்பாற்றி வந்தார். ஒரு காசு கூட வீண் செய்ய அவர் விடமாட்டார். சுற்றுப் பிரயாணத் தின் போது ஒரு தம்படிகூட வீணுகக்கூடாது என்பது அவர் கருத்து. “பொது நிதிகள் ஆண்டவனுல் நம்மிடம் ஒப்படைக்கப்பட்டவை. இம்மியளவும் அது வீணுனுல், நம்முடைய கடமைகளில் தவறியவர்களாவோம்” என்று அவர் அடிக்கடி எடுத்துரைப்பார். குன்னூரில் இருந்த நாட்கள் மிக இன்பமாகச் சென்றன. அங்கே ஒரு வாரம் தங்கி ஓய்வு எடுத்துக்கொண்ட பிற்பாடு, மறுபடியும் எஞ்சியிருந்த ஜில்லாக்களுக்குப் பிரயாண்ம் ஆரம்ப மாயிற்று.

# 8. மறுபடியும் கோவை ஜில்லாவில்

மகாத்மாஜி குன்னூரில் ஒரு வாரம் தங்கியது அவர் உடலுக்கும் மனத்திற்கும் போதிய ஓய்வைக் கொடுத்தது. அந்தச் சில தினங்களில் அவருக்கு அதிகமான அலுவல்கள் இருக்கவில்லை உதகை, கோத்தகிரி முதலிய சில குறிப்பிட்ட இடங்களுக்குப் போய்வருவதில் இரண்டு நாட்கள் கழிந்தன அதற்கு மேல் அவருக்கு நல்ல ஓய்வு கிடைத்தது அதை அவர் மிகவும் சந்தோஷத்துடன் அநுபவித்தார் ஓய்விற்குப் பிறகு மறுபடியும் கோவை ஜில்லாவில் மற்றொரு பகுதியைக் கடந்து, அவர் வேறு ஜில்லாக்களுக்குப் போகவேண்டியிருந்தது எனவே, ஏழு தினங்களுக்குப் பின் குன்னூரிலிருந்து புறப்பட்டோம்.

வழி முழுவதும் கிராமங்கள், நகரங்கள் ஆகிய எல்லா இடங்களிலும் மக்கள் திரள் திரளாக மகாத்மாஜியின் தரிசனத்திற்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். நிறையக் கூட்டம் கூடியிருக்கும் இடங்களில் நிதானமாகக் காரை விடச் சொல்லுவார். ஆட்கள் இல்லாத இடங்களில் எவ்வளவு வேகமாகக் காரை விட்டாலும் அவருக்கு அதைப் பற்றிக் கவலையே இராது சில சமயங்களில் அலுப்பு அதிகமாக இருக்கும்போது இரண்டு ஊர்களுக்கு மத்தியில் உறங்கவும் செய்வார். சீக்கிரமாகப் போகவேண்டுமென்று தோன்றினால், வண்டியை வேகமாக விடவும் சொல்வார்

"எத்தனை மைல் வேகத்தில் போகிறீர்கள்''? என்று மகாத்மாஜி கேட்பார்.

டிரைவர் பயந்துகொண்டு, "50 மைல் வேகத்தில் போகிறேன்" என்று சொல்லுவான்.

"இவ்வளவுதானா? இதற்குமேல் வேகமாகப் போக முடியாதா?" என்று கேட்பார்.

வண்டி ஓட்டுபவனுக்கு உற்சாகம் ஏற்பட்டு, "55" என்பான்.

"இவ்வளவுதானு?'' என்பார்.

அதற்குமேல், "60, 65" என்பான்.

அப்பொழுதும், "இவ்வளவுதானு?" என்று புன்சிரிப்புடன் கேட்பார்.

அதற்குமேல் விடமுடியாதென்று அவன் தன் தோல்வியை ஒப்புக்கொள்வான்.

மகாத்மாஜி போன்ற பெரியவர்களை வைத்துக்கொண்டு வேகமாக ஓட்ட வேண்டுமானுல் வண்டி ஓட்டுபவனுக்கு மிகவும் தைரியம் இருக்கவேண்டும். ஆனுல், மகாத்மாஜிக்குத் தம் உயிரைப்பற்றிய கவலை ஒரு நாளும் இருந்ததே இல்லை' இவ்வளவு வேகமாக வண்டியை ஓட்டுவதை அநுசரித்து, ஒரு நாள், "இங்ஙனம் செல்லுகிருேமே; ஏதாவது நேர்ந்தால் என்ன செய்வது?" என்று கேட்டேன். அதற்கு அவர் சிரித்துக்கொண்டு, ''தேங்காய் வாங்கப் போன மனிதன் கதையை நீ கேட்டதில்லையா? நான் அத்தகையவன்" என்ருர்.

''அந்தக் கதை எனக்குத் தெரியாது'' என்றேன்

அவர் சொல்லலானுர்: ''ஒரு நாள் ஒரு மனிதன் தேங்காய் வாங்கக் கடைக்குச் சென்ருன். தேங்காயின் விலை நான்கணு என்று சொன்னுர்கள். 'இதைவிட மலிவாக எங்கே கிடைக்கும்?' என்று அவன் கேட்டான். 'மொத்தமாக விற்பனையாகும் கடையில் கிடைக்குமெ'ன்று சொன்னுர்கள். அங்கே சென்று தேங்காய் விலையை விசாரித்தான். 'விலை மூன்றணு' என்று சொன்னுர்கள். 'இதை விட மலிவாக எங்கே கிடைக்குமெ'ன்று கேட்டான். தோப்புக்குச் சென்ருல் இதைவிட மலிவாக இருக்குமென்று சொன்னுர்கள். உடனே தோப்புக்குச் சென்ருன். அங்கு விலை அணு ஒன்று என்று சொன்னுர்கள். அதைவிட மலிவாக

எங்கே கிடைக்கும் என்று கேட்டதற்கு, நீயே மரம் ஏறிப் பறித்துக்கொண்டால் இன்னும் மலிவாகக் கிடைக்கு மென்று தோப்புக்காரன் சொன்னான். அதைக் கேட்டு அவன் மரம் ஏறப் பிரயத்தனப்பட்டான். ஆனால், கை தவறிக் கீழே விழுந்து மடிந்தான். இந்தத் தேங்காய் வாங்கச் சென்றவன் போன்றவன் நானும். ஒன்றன்பின் ஒன்றாகக் காரியங்களை மேற்போட்டுக்கொண்டிருக்கிறேன். எப்பொழுது என் முடிவு என்பது தெரியாது'' என்று சொல்லிக் 'கொல்' என்று சிரித்தார்.

மகாத்மாஜியின் வாழ்க்கைத் தத்துவத்துக்கே இக்கதை ஓர் அறிகுறியாக இருந்தது. தம் சந்தோஷத்தைப் பற்றியோ, தம் வாழ்க்கையின் வெற்றியைப் பற்றியோ, தம் உயிருக்கு வரும் ஆபத்தைப் பற்றியோ அவர் நினைத்ததே இல்லை. அவ்வப்போது எது சரியென்று தோன்றுகிறதோ அதைச் செய்துகொண்டே போனார். அப்படிச் செய்து கொண்டு போவதில் இடையூறுகள், எதிர்ப்புகள் வரும், அல்லது ஆபத்து நேரிடும் என்று அவர் நினைத்ததே இல்லை. ஹரிஜன இயக்கம் ஆரம்பித்தபோது பலர் அவரைத் திட்டினார்கள்; வைதார்கள். அவர் உயிருக்கு ஆபத்து வருமென்று கூடச் சொன்னார்கள். அப்படியே ஆபத்தும் வந்தது. பூனாவில் அவர்மேல் 'பாம்' வீசினது மக்களுக்கு ஞாபகம் இருக்கும். ஆனால், இவைகளனைத்தையும் அவர் பொருட்படுத்தியதே இல்லை. "என்னுடைய வாழ்க்கையை என்னுடைய உள்ளங்கையில் வைத்துக் கொண்டிருக்கிறேன்.'' (I hold my life in the palm of my hand.) ஒரு கர்ம வீரனுக்குக் கொள்கையே பெரிது. அதற்காக அவசியமானால் எப்பொழுதும் தன்னுடைய உயிரையும் தத்தம் செய்ய அவன் தயாராயிருக்கவேண்டும்'' என்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு.

நிறைந்த தெய்வ பக்தி உடையவர்களே இவ்வாறு இருக்க முடியும் என்பது மகாத்மாஜியின் முடிவு.

"ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் யாரொருவர் அடங்கா தாரே''

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருத்தாண்டகம் ஒன்று உண்டு. 'இறைவன் இயக்கும்வரை எல்லோரும் இயங்கித்தான் ஆகவேண்டும்; எல்லாம் அவன் அருள்' என்பது அதன் கருத்து. இக் கருத்தே மகாத்மா காந்தியினுடைய வாழ்க்கையின் அடிப்படையாகவும் இருந்தது. ''இறைவன் காப்பாற்றும் வரையில் ஒரு தீங்கும் நேராது. எனக்கு இறைவனுடைய பாதுகாப்பு இல்லாமலிருக்கும் வரையில் மற்ற மனிதர்களுடைய காவல் எவ்வளவு இருந்தாலும் அது பயன்படாது. ஆதலால், இறைவனை நம்பி, எது சரியோ அதைத் தொடர்ந்து செய்வதே என்னுடைய கடமையாகும்'' என்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு.

அவருடைய வாழ்க்கையில் ஓர் அற்புதமான பழக்கத்தைக் கண்டேன். பெரும் கூட்டங்களில் கலந்துகொண்ட பிற்பாடு, சில சமயங்களில் அவர் உடலுக்கு அலுப்புத் தோன்றும். கூட்டத்தை முடித்துக்கொண்டு புறப்படுவோம். ''அவிநாசி, அடுத்த இடத்திற்குப் போக இன்னும் எவ்வளவு நேரம் ஆகும்?'' என்று கேட்பார். ''இருபது நிமிஷம் ஆகும்'' என்பேன். ''இருபது நிமிஷம் கழித்து என்னை எழுப்பு'' என்று படுத்துக் கொள்ளுவார். உறங்க வேண்டுமென்று எண்ணிப் படுத்தாரோ இல்லையோ, உடனே உறங்கிவிடுவார். இருபது நிமிஷம் கழித்து எழுப்புவதற்கு நான் கடியாரத்தைப் பார்த்துக்கொண்டிருப்பேன். பதினைந்து நிமிஷம் ஆகிவிடும். பதினெட்டு, பத்தொன்பது நிமிஷமும் ஆகிவிடும். இருபது நிமிஷம் ஆனவுடன், அவர் காலைப் பூப்போல் தொட்டு எழுப்புவதற்குத் தயாராயிருப்பேன். ஆனால், ஆச்சரியத்திலும் ஆச்சரியம், கணக்காக இருபது நிமிஷம் ஆனவுடன் அவர் எழுந்து, "இருபது

நிமிஷம் ஆய்விட்டதா?'' என்று கேட்பார். இது ஒருதரமல்ல; பல தடவைகளில் இங்ஙனம் நேர்ந்திருக்கிறது. படுத்தவுடன் உறங்குவதும், உறங்கியபின் தம் விருப்பம் போல் விரும்பிய நேரத்தில் அவர் எழுந்திருப்பதும் பல சமயங்களில் எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியிருக்கின்றன. கீதையில் ஸ்திதப் பிரக்ஞர்களுடைய, அதாவது பூரணமாகத் தங்களை அடக்கி ஆள்பவர்களுடைய குணதிசயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்று தூக்கத்தை அடக்குவது என்று சொல்வார்கள். அத்தகையவர்களை நான் வாழ்க்கையில் பார்த்ததில்லை. மகாத்மாஜி வாழ்க்கை, மக்கள் தங்கள் உடம்பை எவ்வளவு தூரம் தம் வயப்படுத்த முடியும்என்பதற்கு எடுத்துக்காட்டாக இருந்தது.

சென்ற இடங்களிலெல்லாம் மக்களுக்கு ஒரே உற்சாகம். 2000 ஆண்டுகள் அல்லது சரித்திரம் எட்டிப் பார்க்க முடியாத அந்தக் காலத்திலிருந்து வந்தது தீண்டாமை என்ற கொடிய பழக்கம். பல சாஸ்திரங்கள் அந்தப் பழக்கத்தைக் காப்பாற்றுவதற்காக எழுதப்பட்டிருந்தன. பல சமூகத்தினர் அதை அடிப்படையாகக் கொண்டு, தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தனர். இத்தகைய கொடிய பழக்கத்தை நீக்குவதற்கு மறுபடியும் 2000 வருஷங்களாகும் என்று அறிஞர்கள் பலர் நினைத்ததுண்டு. ஆனால், மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணத்தில் அக்கொடிய பழக்கம் தவிடு பொடியானதை நம் கண் முன்னால் கண்டோம். தமிழ் நாட்டில் அன்று அவர் செய்த பிரயாணம் பல நூறு வருஷங்கள், பல ஆயிரம் பேர்கள் சேர்ந்து செய்த பிரசாரத்துக்கு நிகராகும். நகரங்களைப்பற்றி நான் அதிகம் கூறவேண்டிய அவசியம் இல்லை. இக்கொடிய பழக்கத்தை நீக்கவே முடியாது என்று மக்கள் எண்ணியிருந்த பல கிராமங்களில்கூட மகாத்மாஜியைப் பார்ப்பதற்காகக் கூடியிருந்த கூட்டங்களில் ஹரிஜனங்கள், மற்றவர்கள் எல்லோரும் கலந்து ஒன்றாக உட்கார்ந்திருந்தது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

பல நகரங்களுக்கும் பல கிராமங்களுக்கும் சென்றோம். ஆனால், அவைகளில் சொக்கம்பாளையத்தைப்பற்றி நான் கூறாமல் இருக்கமுடியாது. சொக்கம்பாளையத்து மக்கள் மகாத்மா காந்தியிடத்தில் ஆழ்ந்த பக்தி வாய்ந்தவர்கள். அந்த ஊரார் முழுவதும் கதர் தரித்திருப்பார்கள்; மகாத்மாஜியின் நிர்மாணத் திட்டத்தை அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற ஆர்வம் உடையவர்கள். அது சிறிய ஊர். மேட்டுப்பாளையம் - அவிநாசி ரஸ்தாவிலிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருந்தது. தங்கள் ஊருக்கு மகாத்மாஜி வரவேண்டு மென்ற ஆர்வம் அவ்வூராருக்கு மிகுதியாக இருந்தது. அதை வந்து சொன்னார்கள். "எத்தனை ரூபாய்கள் கொடுப்பீர்கள்?" என்று கேட்டேன். "ரூ. 1001-க்குக் குறைவில்லாமல் கொடுப்போம்" என்று சொன்னார்கள். அவ்வூருக்கு அக்காலத்தில் அந்தத் தொகை பெரியது. அவர்கள் பக்தி காரணமாகவே அவ்விதம் அளிக்க முன் வந்தார்கள். பணத்தை முன்னால் கொடுத்து விட வேண்டுமென்று சொன்னேன். உடனே அவ்விதமே செய்கிறோமென்று சொல்லிக் கொடுத்துவிட்டார்கள். மகாத்மாஜி வருகைக்கெனவே அந்த இரண்டு மைல் ரஸ்தாவை உற்சாகத்துடன் ஊர்க்காரர்கள் போட்டார்கள். கூட்டத்திற்காக அவர்கள் செய்திருந்த ஏற்பாடு மிக அற்புதமாக இருந்தது. சுமார் 10,000 பேர்கள் அங்கே கூடியிருந்தார்கள். ஆனால், வழக்கமாக மற்ற ஊர்களில் காணப்படும் குழப்பம் அங்கே கொஞ்சங்கூட இல்லை. தொடர்ந்த பிரசாரத்தின் மூலம் அற்புதமான கட்டுப்பாட்டை உண்டாக்கியிருந்தார்கள். வழக்கமாக மகாத்மாஜி வரும்போது கூட்டத்தில் அவரைப் பார்ப்பதற்காக மக்கள் பரபரப்புடன் எழுவதால் குழப்பம் உண்டாகும்; அத்தகைய குழப்பம் ஒன்றும் அந்த ஊரில் உண்டாகவில்லை. மகாத்மாஜி வந்தார் சுமார் பதினைந்து நிமிடங்களில் தம்முடைய பேச்சை முடித்துக்கொண்டு, பண முடிப்பையும் பெற்றுக்கொண்டு புறப்பட்டார். கூட்டம் மிகுந்த கட்டுப்பாட்டுடன் அழகாக நடந்தது. அதைப் பார்த்து அவர் பாராட்டிச் சந்தோஷப்பட்டார்.

இப்படிப் பல ஊர்களுக்குச் சென்று, அன்று மாலைவரையில் கோவை ஜில்லாவில் பிரயாணம் செய்தார். அதற்குப் பிறகு அவர் வேறு ஜில்லாக்களுக்குப் புறப்பட்டார். திருச்சி ஜில்லாவில் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு, மறுபடியும் கோவை ஜில்லாவின் ஒரு பகுதியான ஈரோட்டுக்கு வருவதாக ஏற்பாடு ஆகியிருந்தது. அதற்காக அவரை மறுபடியும் நான் கரூரில் சந்திக்க வேண்டுமென்று முடிவாயிற்று. அத்துடன் அவரிடம் அப்பொழுது விடை பெற்றுக்கொண்டேன்.



# 9. மகாத்மாஜியின் கோபம்

மகாத்மாஜி கரூருக்கு வந்து சேருவதற்குச் சில மணி நேரத்துக்கு முன்னதாகவே நான் அவ்வூர் போய்ச் சேர்ந்தேன். கரூரிலிருந்து ஈரோடு முதலிய இடங்களுக்கு அவரை அழைத்துச் செல்வதற்கு வேண்டிய கார்களுடன் சென்றிருந்தேன். நான் போய்ச் சேர்ந்த கொஞ்ச நேரத்தில் மகாத்மாஜி வந்து சேர்ந்தார். அவர் வந்து சேர்ந்ததும் நேராகத் தம் அறைக்குச் சென்றூர். குளிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சாதாரணமாக அவர் தம் வேலேகளே யெல்லாம் முடித்த பிறகுதான் மற்றவர்களேப் பார்ப்பது வழக்கம். அவர் வந்தவுடனே நான் வந்து காத்துக்கொண்டிருப்பதாக அவருக்குச் செய்தி சென்றது. அதைக் கேட்டதும், "உடனே அவிநாசியைக் கூப்பிடு" என்று சொல்லி யனுப்பினூர்.

நான் சென்றேன். சாதாரணமாக மகாத்மாஜி புன் சிரிப்புடன் எல்லோரையும் வரவேற்பார். அதனுடன் நகைச் சுவையும் கலந்திருக்கும். அவரைச் சென்று காண்பதே ஓர் இன்பம். அவரிடம் பேசிக்கொண்டிருந் தாலே உற்சாகம் உண்டாகும். ஆனூல், இச்சமயத்தில் அவர் முகம் கொஞ்சம் கடுமையாக இருந்தது. சாதாரண மாக இருக்கும் புன்சிரிப்பைக் காணவில்லே; நகைச் சுவையும் காணப்படவில்லே. நான் சென்று அவர் எதிரே உட்கார்ந்ததும், "அவிநாசி, நீயும் இப்படிச் செய்யலாமா?" என்று கேட்டார். அதைக் கேட்டதும் திடுக்கிட்டேன். நான் என்ன தவறு செய்தேனென்று எனக்குப் புரியவில்லே. ஒன்றும் அறியாமல் விழித்தேன். அவருடைய கடுமை யான தோற்றம் என் மனத்தில் பயத்தை உண்டாக்கியது. பய பக்தியுடன், "நான் என்ன தவறு செய்தேன் என்று தெரியவில்லேயே!" என்று சொன்னேன்.

அதற்கு அவர், "அன்று நாடகத்திற்கு என்னிடம் ரூ. 1500-க்குச் செக் கொடுத்தாயல்லவா?'' என்று கேட்டார்.

நான், "ஆம்'' என்றேன். அதற்கு அவர், "அதைப் பாங்கில் கட்டினபோது செலாவணியாகவில்லை யென்பது உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

அதைச் சொன்னவுடனே எனக்கு விஷயங்கள் நினைவுக்கு வந்தன. நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியார் மகாத்மா காந்தியடிகள்பால் பக்தி கொண்டவர்கள். நாடகத்திற்கு மகாத்மாஜியை அழைத்துவர வேண்டுமென்று அவர்கள் விரும்பியிருந்தார்கள். அப்படி வருவதானால் ஹரிஜன நிதிக்கு ரூ. 1500/- கொடுப்பதாகச் சொல்லியிருந்தார்கள். ரூ. 1500/-க்கு அதிகமாகவே அன்று நாடகத்திற்கு வசூலாகுமென்று அவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள் ஆனால், பொதுக் கூட்டம் நடந்த அன்றிரவே நாடகம் நடந்தபடியால், லட்சக்கணக்கான பேர்கள் கூடியிருந்த அப் பொதுக் கூட்டத்திலிருந்த மக்கள் தங்கள் வீடு செல்லவே இரவு ஒன்பது அல்லது பத்து மணி ஆகியிருக்க வேண்டும். எனவே, நாடகக் கம்பெனியார் எதிர்பார்த்திருந்தபடி அதிகமான பேர் நாடகத்திற்கு வரவில்லை, அவர்கள் எதிர்பார்த்த வசூலும் ஆகவில்லை. சுமார் ரூ. 1000/-தான் வந்தது. அதைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்து, "தயை செய்து தாங்கள் மீதியையும் சேர்த்துக் கொடுத்துவிடுங்கள். பின்னால் வசதி கிடைக்கும்போது அதைத் திருப்பிக் கொடுக்க முயல்கிறோம்'' என்று உரைத்தார்கள். மகாத்மாஜியிடம் அவர்கள் சார்பில் நான் முன்னமே வாக்களித்திருந்தேன். ஆதலால், எப்படியும் மகாத்மாஜிக்கு ரூ. 1500/- கொடுக்க வேண்டியிருந்தது. வசூலாகும் பொதுப் பணத்தை என் கையில் நான் வைத்துக்கொள்ளும் பழக்கம் இல்லை. பாங்கில் அந்த அந்தக் கணக்கில் அவ்வப்போது போட்டுவிடுவதுதான் வழக்கம். மகாத்மாஜிக்கு அளிக்கவிருந்த ஹரிஜன நிதி தாற்காலிகமாக ஏற்பட்டதாகையால், பாங்கில் அதற்குக் கணக்கு

இருக்கவில்லே. வந்த செக்குகளே வசூல் செய்து அனுப்ப மகாத்மாஜி அவைகளே ஒரு நண்பரிடம் கொடுத்திருந்தார். அச்சமயம் கோவை ஜில்லா அர்பன் பாங்கில் என் பெயரில் ஒரு கணக்கு இருந்தது. ஆதலால், அந்தக் கணக்கில் காந்தி நிதிக்கு வசூலாகும் பணம் அத்தனேயும் போடப் பட்டிருந்தது. அவர்கள் கொடுத்திருந்த ஆயிரம் ரூபாயையும் உடனே பாங்குக்கு அனுப்பிவிட்டேன். அவர்களுக்காகக் கொடுக்க வேண்டிய தொகைக்காக என் சகோதரரிடம் சொல்லி ரூ. 500-ஐ உடனே பாங்கில் கட்டும்படி சொல்லி ரூ. 1500-க்கு ஒரு செக் எழுதி மகாத்மாஜியிடம் கொடுத்துவிட்டு, உடனே ஊரைவிட்டு அவருடன் சுற்றுப் பிரயாணம் செய்யக் கிளம்பிவிட்டேன். செக்கைக் காலேயில் சுமார் 11 மணிக்குப் பாங்குக்குக் கொண்டு போயிருக்கிருர்கள். கணக்கில் போதுமான பணம் இல்லாதபடியால், ஒரு மணி நேரங் கழித்து வரும்படி பாங்குக்காரர்கள் சொல்லியிருக்கிருர்கள். நான் முன்னமேயே சொல்லியிருந்தபடி என்னுடைய சகோதரர் அந்த நேரத்திற்குள் அந்தப் பணத்தைக் கணக்கில் கட்டியிருக்கிருர். ஒரு மணி கழித்துச் செக்குக்குப் பணமும் பெற்றுச் சென்ருர்கள், செக்கைக் கொண்டு போனதையும், பாங்குக்காரர்கள் ஒரு மணி நேரம் கழித்து வரச்சொன்னதையும், பிறகு சென்று பணம் பெற்று வந்ததையும் அந்த நண்பர் மகாத்மாஜிக்குத் தெரிவித்திருக்கிருர். இதுதான் விஷயம். இவ் விஷயங்களேயெல்லாம் மகாத்மாஜிக்கு எடுத்துரைத்தேன்.

மகாத்மாஜி சொன்ஞர்: "பெரிய தவறு ஒன்றும் நடக்கவில்லே. ஆனுல், பொதுப் பணம் எதையும் ஒரு தனிப்பட்ட கணக்கில் போடக் கூடாது என்று உனக்குத் தெரியாதா? உன்னேப் போன்ற ஊழியர்கள் இது மாதிரி விஷயங்களில் சர்வ ஜாக்கிரதையாக இருப்பதுடன், மற்றவர்களுக்கு உதாரணமாகவும் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். இவ் விஷயத்தில் தவறு ஒன்றும் நேரவில்லே

யென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அத்துடன் நீயே ரூ. 500 அதிகமாகக் கொடுத்திருக்கிருய் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். ஆனுல், நீ செய்திருக்கும் தவறுகள் இரண்டு. ஒன்று, பொதுப் பணத்தைச் சில தினங்களுக்கான போதிலும், தனியாக ஒரு கணக்கு ஏற்படுத்தி அதில் போட்டிருக்க வேண்டும். இரண்டாவது, உன் கணக்கில் பணம் இல்லாமலிருக்கும்போது, அதில் இருப்பதற்கு அதிகமாக நீ செக் கொடுக்கவே கூடாது. உனக்கு ரூ. 500 பெரிதல்ல என்பது எனக்குத் தெரியும். ஆனுலும், நாம் செய்கின்ற காரியம் ஒவ்வொன்றும் சரியாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இதைச் சொல்கிறேன். பொது ஊழியர்கள் எந்த விதமான குறைகளுக்கும் ஆளாகக் கூடாது என்பதுபற்றியே நான் இவ்வளவு கடுமையாக இதை எடுத்துரைத்தேன் இனிமேல் நீ ஜாக்கிரதையாக இருப்பதுடன், மற்றவர்களுக்கும் உதாரணமாக இருக்க வேண்டும்" என்று சொல்லி ஆசீர்வதித்தார்

அன்று அவர் சொன்ன மொழிகளும், அந்தச் சமயத்தில் அவர் முகத்தில் தோன்றிய கடுமையான குறியும் இப்போது எண்ணினுலும் என் அகக் கண்ணின்முன் தோன்றுகின்றன. சிறு விஷயங்களேக்கூடப் பெரியவர்கள் எவ்வளவு கவனமாகக் கவனிக்கிருர்கள் என்பதை எண்ணுகையில் எனக்கு ஆச்சரியமாயிருந்தது. மகாத்மாஜிக்குச் செல்லாக வேண்டிய பணம் முன்னமேயே வந்துவிட்டது. இதைப்பற்றி அவர் கவனியாமல் இருந்திருக்கலாம். ஆனுல், என்னுடைய நன்மையை உத்தேசித்து, அவர் இதை ஞாபகத்தில் வைத்து, என்னிடம் சொல்லியிருக்கிருர். அன்றிலிருந்து அவர் சொன்ன அந்த யோசனேயை நான் மிகவும் போற்றி வந்திருக்கிறேன். அந்த யோசனேயின் மூலம் இன்னும் மற்றப் பல விஷயங்களிலும் மிக்க ஜாக்கிரதையாகவே நடந்துகொள்ளும் நிலே எனக்கு உண்டாயிற்று. அன்று அவர் கூறிய வார்த்தை என் எதிர்கால வாழ்க்கையில் வழிகாட்டியாயிருந்திருக்கிறது. மகாத்மாஜிக்கு

என் போன்ற ஆயிரக்கணக்கான ஊழியர்கள்பேரில் எவ்வளவு அன்பு இருந்தது என்பதற்கு அந்தக் கடுமையான வார்த்தைகளே அறிகுறியாக இருந்தன.

உணவும் ஓய்வும் முடித்துக்கொண்டு கரூரிலிருந்து புறப்பட்டு ஈரோடு வந்து சேர்ந்தோம். ஈரோட்டிலும் தமிழ் நாட்டின் மற்றப் பகுதிகளைப் போல் ஆரவாரத்துடனும் பக்தியுடனும் பதினாயிரக்கணக்கான மக்கள் கூடி மகாத்மாஜியை வரவேற்றார்கள். அங்கிருந்து திருச்செங்கோட்டிலுள்ள காந்தி ஆசிரமத்திற்குச் சென்றோம். அங்கு ராஜாஜி, அவர் வருகைக்காக எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு இருந்தார். மகாத்மாஜியைத் திருச்செங்கோட்டுக் காந்தி ஆசிரமத்தில் சேர்த்ததுடன் நான் அவருடன் சென்ற அப்பொழுதைய பிரயாணம் முடிவாயிற்று. அவரிடம் விடை பெற்றுக்கொண்டு ஊர் திரும்பினேன்.



# 10. டில்லிக் குளிர்

மகாத்மாஜி தமிழ் நாட்டிற்குச் சுற்றுப் பிரயாணம் வந்தது 1934 ஆரம்பத்தில். அவருடைய சுற்றுப் பிரயாணம் மக்களிடத்திலே பெரிய உற்சாகத்தை உண்டாக்கியது. இரண்டாவது சட்ட மறுப்பு இயக்கம் வெற்றிகரமாக முடியவில்லையே என்று ஏங்கிய தொண்டர்கள் ஆயிரக்கணக்கான பேர்கள் இருந்தார்கள். மகாத்மாஜி அடிக்கடி, "உண்மையான சத்தியாக்கிரகிக்குத் தோல்வியென்பதே இல்லை" என்று சொல்வார். அவருடைய வாக்கின் உண்மையை இந்தச் சுற்றுப் பிரயாணத்தின் போது கண்டோம். லார்டு வில்லிங்டன் அப்பொழுது கவர்னர்-ஜெனரலாக இருந்தார். சட்ட மறுப்பு இயக்கத்தை அடக்கியே தீருவேனென்று சபதம் செய்துகொண்டவர் அவர். இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிலிருந்து மகாத்மாஜி டில்லி திரும்பியதும், அடக்குமுறை பலமாக ஆரம்பமாயிற்று. லார்டு வில்லிங்டனை நேரில் சந்தித்துப் பேச அநுமதி கோரி, மகாத்மாஜி அவருக்கு எழுதினர். ஆனால், லார்டு வில்லிங்டன் மகாத்மாஜியைப் பார்க்க மறுத்துவிட்டார். 'மகாத்மாஜியைக் கண்டால் அவருடைய ஒளி பொருந்திய வசீகரமான முகமும், நிறைந்த அன்பும் எவரையும் வசீகரித்து விடும்; தாமும் அதற்கு ஆளாக நேரிடுமென்று பயந்தே லார்டு வில்லிங்டன் அவரைப் பார்க்க இசையவில்லை' என்று பலர் சொன்னர்கள்: இது எவ்வாறு இருப்பினும், மகாத்மாஜியை அவர் பார்க்க மறுத்தது சரித்திர பூர்வமான உண்மை. மகாத்மாஜி கைதியானது இந்தியா முழுவதும் காங்கிரஸ் தொண்டர்களைக் கைது செய்வதற்கு ஓர் அறிகுறியாக இருந்தது. நாடெங்கும் முக்கியமான தொண்டர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர். அவர்கள் கைது செய்யப்பட்ட பிறகு

எஞ்சிய தொண்டர்களின்மேல் கடுமையான நடவடிக்கைகள் நடத்தப்பட்டன. அடிதடிப் பிரயோகம் கடுமையாக இருந்தது. பெண்களும் குழந்தைகளுங்கூட இதற்கு விலக்கு அல்ல. பல மாதங்கள் நாடு முழுவதும் இக் கோர தாண்டவம் நடைபெற்றது. கொஞ்ச நாட்களுக்குப் பிறகு மக்களும் ஓரளவு அலுத்துப் போயினர். எனவே, அன்றைய அன்னிய அரசாங்கம் தான் ஜயித்துவிட்டதாக நினைத்தது. இந்த எண்ணம் தொண்டர்கள் மனத்தில் உற்சாகத்தைக் குறைத்திருந்தது.

ஆனால், மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணம் இச் சோர்வனைத்தையும் விரட்டியடித்தது. மக்களுக்கு முன் போல் உற்சாகம் உண்டாயிற்று; "தோல்வியின்றி வெற்றி இல்லை. இந்தப் போரைப் பலர் தோல்வியென்று நினைத்தாலும், இதன் மூலம் மக்கள் மனத்தில் அச்சத்தை அகற்றி; ஆண்மையை உண்டாக்கியிருக்கிறோம். தேசத்தில் பயம் ஒழிந்து தைரியம் பிறந்திருக்கிறது. இதைத் தோல்வி யென்று எங்ஙனம் கருத முடியும்? சுதந்திரப் பாதையில் பல படிகள் முன்னேறி வெற்றி பெற்றதாகவே இதைக் கொள்ளவேண்டும்'' என்று மகாத்மாஜி சென்ற இடங்களிலெல்லாம் உபதேசம் செய்து வந்தார். இவ்வுபதேசம் எல்லோர் மனத்திலும் பதிந்தது. சோர்வு மறைந்து, நாடெங்கும், கிராமங்கள்தோறும், வீடுகள்தோறும், புதிய உணர்ச்சி தோன்றிற்று. மூலை முடுக்குகள் எங்கும் மறுபடியும் சுதந்திர கோஷங்கள் எழுந்தன. சுதந்திரத்திற்கு அடிப்படையாக இருந்த நிர்மாணத் தொண்டிற்கும் மகாத்மாஜியின் சுற்றுப்பிரயாணம் புத்துயிர் அளித்தது. மக்கள் மனத்தில் இருந்த பயம் விலகியது. அவர்கள் மனத்தில் புதிய நம்பிக்கையும் பிறந்தது. இவை அனைத்தையும் உண்டாக்கிய இயக்கத்தைத் தோல்வியென்று சொல்ல முடியுமா? கோடிக்கணக்கான மக்களுக்கு உண்மை ஆற்றலைக் கொடுத்த இவ்வியக்கத்தை வெற்றியென்றுதான் சொல்ல வேண்டும். மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணம் மக்கள்

மனத்தில் இவ்வுயர்ந்த உண்மையைப் புகட்டியது. சோர்ந் திருந்த தென்னிந்தியா, மகாத்மாஜியின் சுற்றுப் பிரயாணத் திற்குப் பிறகு புதிய ஊக்கம் பெற்று, உற்சாகத்துடன் தலை நிமிர்ந்து நின்றது.

அவ் வருஷக் கடைசியில் மத்தியச் சட்ட சபைக்குத் தேர்தல் நடந்தது. அப்பொழுது இருந்த அரசாங்கம் காங் கிரஸைத் தான் தோற்கடித்துவிட்டதாக எண்ணியிருந்தது. தங்களுக்கு உகந்த மனிதர்களே தேர்தலில் வெற்றி அடை வார்களென்று அரசாங்கத்தார் நம்பியிருந்தார்கள். பழைய சட்ட சபை கலைவதற்குமுன் நடந்த பிரசங்கங்களிலும் கூடப் பலர் காங்கிரஸ் மகாசபையை எள்ளி நகையாடிப் பேசினார்கள். "காங்கிரஸ் இத் தேர்தலில் வெற்றி பெறும் என்று சிலர் நினைக்கிறார்கள். இது பகற்கனவாகும்" என்று ஒருவர் சொன்னார். இதை மற்றவர்கள் குதூகலத்துடன் கை தட்டி வரவேற்றார்கள். இம் மாதிரியாகப் பல பேச் சுக்கள் நிகழ்ந்தன. காங்கிரஸ் முறியடிக்கப்பட்டதாகவும், காங்கிரஸ்காரர்கள் நிச்சயமாகத் தேர்தலில் வெற்றி பெற மாட்டார்களென்றும் லார்டு வில்லிங்டன் திடமாக நம்பி யிருந்தார். இந்த நம்பிக்கை காரணமாகவே மறு தேர்த லுக்கு ஏற்பாடு ஆயிற்று.

ஆனால், ஆச்சரியத்தினும் ஆச்சரியம்! இந்தியா முழுவ திலும் பொதுத் தொகுதிகள் எல்லாவற்றிலும் காங்கிரஸ் காரர்களே வெற்றி பெற்று வந்தார்கள். அங்ஙனம் நிறுத் தப்பட்ட காங்கிரஸ்காரர்கள் பல இடங்களில் பெரிய பணக்காரர்களாகவோ, நிபுணர்களாகவோ, முன்னால் எவ் விதத்திலும் புகழ் பெற்றவர்களாகவோ இருக்கவில்லை. பல இடங்களில் வெறும் சாதாரணத் தொண்டர்களையே நிறுத்தி வைத்தார்கள். தூய்மையான வாழ்க்கையும் தேச பக்தியுமே அவர்களுடைய சிறப்பியல்புகளாக இருந்தன. அவர்களை எதிர்த்து நின்றவர்களோ, பல ஆண்டுகள் சட்ட சபைகளில் அங்கம் வகித்துப் பெயர்

பெற்றவர்களாக இருந்தார்கள். எனினும், காங்கிரஸின் பெயரால் நிறுத்தப்பட்டவர்களே வெற்றி பெற்றுர்கள் என்பது சரித்திரம் கண்ட உண்மை. சென்னை மாகாணத்தில் பத்துப் பொதுத் தொகுதிகள் இருந்தன. அவற்றில் தமிழ் நாட்டில் ஐந்து. அவைகளில் சென்னைக்கு ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அவர்களையும், செங்கற்பட்டு, தென்ஞர்க் காடு ஜில்லாக்களுக்கு ஸ்ரீமான் முத்துரங்க முதலியார் அவர்களையும், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாக் களுக்கு டாக்டர் ராஜன் அவர்களையும், மதுரை, ராமநாத புரம், திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு ஸ்ரீமான் குமாரசாமி ராஜா அவர்களையும், கோயம்புத்தூர், சேலம், வட ஆர்க்காடு ஜில்லாக்களுக்கு என்னையும் நிறுத்திஞர்கள். ஸ்ரீ சத்தியமூர்த்தியும், ஸ்ரீமான் முத்துரங்க முதலியார் அவர் களும் முன்பே சட்ட சபையில் அங்கத்தினர்களாக இருந் திருக்கிருர்கள். டாக்டர் ராஜன் சட்டசபையில் இல்லாம லிருந்தாலும் புகழ் பெற்ற டாக்டராக விளங்கினுர். ஸ்ரீ குமாரசாமி ராஜா அவர்களும் நானும் சாதாரணத் தொண்டர் குழாத்தைச் சேர்ந்தவர்களென்று சொல்லலாம். எங்களை எதிர்த்து நின்றவர்கள் பலர் பெரிய பணக்காரர் களாகவும், பல விதங்களில் ஆதிக்கம் உடையவர்களாகவும் இருந்தார்கள். எனினும், அன்று அனைவருக்கும் ஏற்பட்ட அந்த மகத்தான வெற்றிக்குக் காரணம், காங்கிரஸ் மகா சபையினிடத்திலும் மகாத்மா காந்தியிடத்திலும் மக்க ளுக்கு இருந்த ஆழ்ந்த அன்புதான் என்பதில் ஐயம் இல்லை. இத்தகைய பெரிய வெற்றி கிடைத்தது பலருக்கும் ஆச் சரியமாயிருந்தது. மக்களுக்கு மகாத்மாஜியின் மேலும் காங்கிரஸின் பேரிலும் இருந்த அளவற்ற பக்திக்கு இது அறிகுறியாகத் தென்பட்டது.

புதிய சட்ட சபையின் முதல் கூட்டம் 1935-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 17-ஆந் தேதி ஆரம்பமாயிற்று என்று ஞாபகம். அச் சமயந்தான் மகாத்மாஜியை அடுத்த தடவை சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

ஜனவரி மாதம் நல்ல பனிக்காலம். டில்லியில் எப்பொழுதுமே அக்காலத்தில் குளிர் மிகவும் அதிகமாக இருக்கும். குறிப்பாக அந்த வருஷம் குளிர் மிகவும் கடுமையாகவே இருந்தது. மத்தியானத்தில்கூட வெப்பத்தின் நிலை சுமார் 65 அல்லது 70 டிகிரிக்கு அதிகமாகப் போகவில்லையென்று சொன்னால், குளிர் எவ்விதம் இருக்கும் என்பதை நண்பர்கள் ஊகித்துப் பார்த்துக் கொள்ளலாம். இரவில் சுமார் 35 டிகிரிக்குக்கூடக் குறைந்தது என்று சொல்லுகிறார்கள். அவ்வளவு குளிருக்குத் தகுந்த உடையும் எல்லோரும் அணிந்துகொள்ள வேண்டியிருந்தது.

நாங்கள் டில்லிக்குச் சென்ற சில தினங்களுக்குப் பிறகு மகாத்மாஜி டில்லிக்கு வந்தார். 'கிங்ஸ்வே' (King's Way) என்னும் இடத்தில் உள்ள ஹரிஜன ஆசிரமத்தில் அவர் அப்பொழுது தங்கியிருந்தார். டில்லியில் குளிர் காலத்தில் மாலையில் சுமார் நாலரை மணிக்கே இருட்டு ஆரம்பித்துவிடும். காலை சுமார் எட்டு மணிக்குத்தான் வெயில் வர ஆரம்பிக்கும். சாதாரணமாக, அதிகாலையில் சுமார் நாலரை மணிக்கு எழுந்திருப்பது என் வழக்கமாயிருந்தது. ஒரு நாள் காலையில் குளித்துச் சிற்றுண்டி அருந்திவிட்டு சுமார் எட்டரை மணிக்கு மகாத்மாஜியைப் பார்க்கச் சென்றேன். குளிருக்காகப் பலவிதமான கம்பளி உடைகள் அணிந்திருந்தேன். ஆனால், மகாத்மாஜியை நான் பார்க்கச் சென்றபோது அவர் அணிந்திருந்த உடை எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. எப்பொழுதும் போல் சட்டை இல்லை. கம்பளிகள் சிலவற்றைத்தான் உடலில் போர்த்துக்கொண்டிருந்தார். அவ்வளவு குளிர் இருப்பதே அவருக்குத் தோன்றவில்லை போலும்! அவரை அந்த நிலையிலே பார்த்தவுடனே எனக்குக் கீதையில் ஒரு சுலோகம் ஞாபகத்திற்கு வந்தது.

"பகைவனிடத்தும் நண்பனிடத்தும் மானத்திலும் அவமானத்திலும் சமமானவனும், குளிரிலும் வெப்பத்திலும் சுகத்திலுந் துக்கத்திலும் சமமானவனும் பற்றற்றவனும்

எவனோ, இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஒன்றாகக் கொள் பவனும் மௌனியாயும் எதைக் கொண்டும் சந்தோஷம் அடைபவனும் இருப்பிடமில்லாதவனும் திட சித்த முடையவனும் பக்திமானும் உள்ள மனிதன் எவனோ அவன் எனக்குப் பிரியமானவன்'' என்பது அதன் பொருள்.

கட்டுப்பாடான வாழ்க்கையினாலும், விடாத பயிற்சியினாலும் இயற்கையையும் மக்கள் வெல்லலாம் என்பதற்கு மகாத்மா ஜியின் வாழ்க்யையே நிதரிசனமாக இருந்தது. இந்தக் கடுங் குளிரிலும் அவர் எப்பொழுதும்போல் வாழ்ந்து வந்தார்.

வந்தவுடனே, ''வா! வா! அவிநாசி'' என்று மிகுந்த கனிவுடன் அழைத்தார். என்னைப் போன்ற எளிய ஊழியர்கள் லட்சக்கணக்கான பேர்களை அவர் பார்த்திருக் கிறார்; ஆயிரக்கணக்கான தலைவர்களுடன் பழகியிருக் கிறார்; நூற்றுக்கணக்கான அரசர்கள், சிற்றரசர்கள், ஜமீன்தார்கள் முதலியவர்கள் அவரிடத்தில் வருகிறார்கள். ஆனால், அவருக்கிருந்த பெருமையெல்லாம் எளிய தொண் டர்களையும் மறக்காமல் ஞாபகம் வைத்துக்கொண்டிருந் ததுதான். தமிழ் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்திலே அவர் ஆயிரக்கணக்கான தொண்டர்களைச் சந்தித்திருக்கிறார். எனினும், என்னைக் கண்டு அன்புடன் வரவேற்றதுமல்லா மல், என்னைப்பற்றிய குறிப்புகள் அனைத்தையும் அவர் ஞாபகத்தில் வைத்திருந்தது ஆச்சரியமாக இருந்தது. "வித்தியாலயம் எப்படி இருக்கிறது? குழந்தைகள் சௌக் கியமாய் இருக்கிறார்களா?'' என்று பல கேள்விகள் கேட்டார். மகாத்மாஜி நம்மையும் மதித்து அன்புடன் நேசிக்கிறார் என்ற எண்ணமே என் வாழ்க்கையை உயர்த்து வதாக இருந்தது. அதனோடு அவர் நிற்கவில்லை. சிறு குழந்தையைப்போல் குலுங்கச் சிரித்து, "இங்கே வா; உனக்கு ஒரு வேடிக்கை காட்டுகிறேன்'' என்று அழைத்துச் சென்றார். அருகில், திறந்த வெளியில் ஒரு தட்டில் சுமார்

அரை அங்குல ஆழம் தண்ணீர் விட்டு இரவில் வெளியே வைக்கப்பட்டிருந்தது. குளிரின் மிகுதியால் தண்ணீர் உறைந்து பனிக்கட்டியாக மாறுமாவென்று சோதிக்கவே மகாத்மாஜி இக்காரியம் செய்திருந்தார். அதிகாலையில் எழுந்தபோது அது பனிக்கட்டியாக மாறித் தோசை போன்ற வடிவில் அமைந்திருந்தது. "இதைப் பார்த்தாயா? குளிரில் இது இவ்விதமாயிருக்கிறது. நேற்றிரவு தண்ணீர் வைத்திருந்தது; இன்று காலை கட்டியாகியிருக்கிறது" என்று சொல்லி அதைக் காண்பித்தார். அதைப் பார்த்ததும் அக்குளிரிலும் மகாத்மாஜி இவ்விதம் சட்டை போடாமல் இருந்தது என் மனத்தில் பெரிய வியப்பை உண்டாக்கிக்கொண்டு இருந்தது. அன்று ஒன்றும் அவரிடம் அதிகமாகப்பேசவில்லை. சுமார் ஒரு மணி நேரம் கழித்து என் விடுதிக்குத் திரும்பினேன். மகாத்மாஜியின் உள்ளன்பின் புனிதத் தன்மை என் மனத்தில் ஒரு பெரிய உணர்ச்சியை உண்டாக்கியிருந்தது. அவருடைய அன்பும் கனிவும் என் மனக் கண்முன் இருந்துகொண்டே இருந்தன. இவ்வெண்ணங்கள் அவரை அடிக்கடி போய்ப் பார்க்கும்படி தூண்டின. அவர் டில்லியில் இருக்கும்வரையில் இயன்றபோதெல்லாம் சென்று அவர் தரிசனம் பெற்றுவந்தேன்

இதை முடிக்குமுன் இன்னும் ஒரு விஷயத்தையும் கூற விரும்புகிறேன். மத்தியச் சட்ட சபைக்குச் சென்ற காங்கிரஸ் அங்கத்தினர்கள் அக்காலத்தில் கவர்னர் - ஜெனரல் அழைத்த விருந்துகளுக்குச் செல்ல மறுத்தனர். நாங்கள் அனைவரும் அவருடைய உபசரிப்பை ஏற்க மறுத்தது லார்டு வில்லிங்டனுக்குப் பெருத்த வருத்தத்தை உண்டாக்கியது. இதைக் குறித்து. லார்டு வில்லிங்டன் கீழ்க் கண்டவாறு கூறியதாகச் சொன்னார்கள் : "ஏன் இந்தக் காங்கிரஸ்காரர்கள் என்னை இவ்விதம் நடத்துகிறார்கள்? நான் தீண்டப்படாதவனாய்விட்டேனா? என்னைப் பார்க்கவும் மாட்டேன் என்கிறார்களே!" என்று சொன்னாராம். அதைக் கேட்டபோது, 'மகாத்மாஜியைப் பார்க்க மறுத்த லார்டு வில்லிங்டனுக்கு இது ஏற்ற தண்டனை போலும்" என்று நான் நினைத்தேன்.

# 11. பதவி ஏற்றுக்கொள்வதா?

*1937*-ஆரம்பத்தில் மாகாணச் சட்ட சபைத் தேர்தல்கள் வந்தது அனைவருக்கும் ஞாபகம் இருக்கும். முதல் தடவையாகக் காங்கிரஸின் சார்பில் மாகாணச் சட்ட சபையிலும் அங்கத்தினர்கள் நிறுத்திவைக்கப்பட்டார்கள். மக்கள் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு மகத்தான ஆதர வளித்தனர். மாகாணச் சட்ட சபையில் மொத்தம் 215 பேர்கள். அதில் 159 காங்கிரஸ் அங்கத்தினர்கள் வெற்றி பெற்றிருந்தார்கள். தவிர, மற்ற மாகாணங்களில் கிடைக்காத வேறு ஒரு வெற்றியும் சென்னைக்குக் கிடைத்திருந்தது. சென்னை மாகாணத்தில் மேல் சட்டசபையிலும் காங்கிரஸ் கட்சிக்குப் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். எனவே, காங்கிரஸைத் தவிர வேறு ஒருவரும் ஆட்சியை நடத்த முடியாதென்ற நிலைமை வந்தது. இந்தியா முழுவதிலுமுள்ள 11 மாகாணங்களுள் காங்கிரஸ் கட்சிக்குப் பெரும்பான்மை ஸ்தானங்கள் 7 மாகாணங்களில் கிடைத்தன. அந்த ஏழு மாகாணங்களிலும் காங்கிரஸ் மந்திரி சபை பதவியேற்று நடத்துவதா, வேண்டாமா என்ற பிரச்னை எழுந்தது.

அந்தக் காலத்தில் இருந்த 1935-ஆம் வருஷத்திய இந்தியா சட்டப்படி கவர்னருக்குப் பலவிதமான அதிகாரங்கள் இருந்தன. இந்தியன் ஸிவில் சர்வீஸ்காரர்களுடைய சம்பள விகிதங்கள், சிறுபான்மையோருடைய உரிமைகள், ஐரோப்பியருக்குள்ள சலுகைகளைக் காப்பாற்றுதல் என்பனபோன்ற அதிகாரங்கள் பல கவர்னரிடத்தில் இருந்தன. இவற்றைத் தவிர மந்திரிகள் சாதாரணமாகச் செய்யக்கூடிய காரியங்களில்கூடத் தலையிடும் உரிமை அந்தச் சட்டப்படி கவர்னருக்கு இருந்தது. காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவியை ஏற்று ஆட்சி நடத்தும்போது,

கவர்னர் சாதாரண தினசரிக் காரியங்களில் தலையிடுவ தானல் மந்திரிகள் தங்களுடைய பொறுப்பை எவ்விதம் நிர்வகிக்க முடியும்? தக்கபடி உரிமைகள் இல்லாமல் அப் பொழுது இருந்த சட்டப்படி நடந்துகொள்ள ஒப்புக் கொண்டு, காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்பது அவசியம் இல்லை என்று மகாத்மாஜி போன்ற பெரியோர்கள் நினைத் தார்கள். தவிர, கருத்துக்களிலும் நோக்கங்களிலும் காங்கிரஸ் கட்சிக்கும் அந்நிய அரசாங்கத்தின் பிரதிநிதி யாக இருந்த கவர்னருக்கும் பல அபிப்பிராய பேதங்கள் இருந்தன. எனவே, இத்தகைய உறுதியின்றிக் காங்கிரஸ் மந்திரி பதவியை ஏற்றுக்கொள்ளுவது இடைவிடாத சச் சரவுகளுக்கு இடங் கொடுக்குமேயொழியச் சமாதான மாகக் காரியங்களைச் செய்வதற்கு வசதியாக இராது என்று காந்தியடிகள் அபிப்பிராயப்பட்டார்.

இந்த விஷயம் பத்திரிகைகளில் பலவாறாக விவாதத் துக்கு உள்ளாயிற்று. "இது என்ன மடத்தனம்? உத்தி யோகத்தை முதலில் ஏற்றுக்கொண்டு, உள்ளுக்குப் போய்ச் சண்டை செய்யலாமே? அதற்காக இப்பொழு திருந்தே சண்டையைக் கிளப்பிக்கொண்டிருப்பானேன்?" என்று சிலர் சொன்னார்கள். இன்னும் சிலர், "பதவியை ஏற்றுக் காங்கிரஸ் தன்னைப் பலப்படுத்திக்கொள்ள வேண்டும். காங்கிரஸ்காரர்களுக்கு லௌகிகம் தெரியாது. தங்கள் கட்சியைப் பலப்படுத்திக்கொள்ளக்கூடிய இந்தப் பெரிய சந்தர்ப்பத்தை விட்டுவிடுகிறார்களே!" என்று சொன்னார்கள். இன்னும் சிலர், "சட்டம் எப்படியோ பார்லிமெண்டில் நிறைவேறிவிட்டது. இனிமேல் காந்தி சொல்வதற்கும், காங்கிரஸ் சொல்வதற்கும் மறுபடியும் சட் டத்தை மாற்றுவார்களா? அது எப்பொழுதும் நடை பெறாது. ஆதலால், வழக்கம்போல் காங்கிரஸ்காரர்கள் இப்பொழுதும் தவறுதலான கொள்கைகளை ஏற்று, சந் தர்ப்பத்தை நழுவ விடவேண்டியதுதான்" என்றார்கள்.

எல்லோருக்கும் காங்கிரஸ் பதவியேற்று மக்களுக்குச் சேவை செய்யவேண்டுமென்ற ஆசை இருந்தது. ஆனால், காந்தியடிகள் இந்த வாதங்களுக்கு இடங் கொடுக்கவில்லை. இவ்விஷயங்களைத் தீர ஆலோசனை செய்து முடிவு செய்வதற்கென்றே இந்தியா முழுவதிலும் காங்கிரஸின் சார்பில் சட்ட சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களின் பெரிய கூட்டமொன்று கூட்டவேண்டியது என்று தீர்மானம் செய்யப்பட்டது.

இந்தக் கூட்டம் டில்லியில் கூடிற்று. டில்லி சட்ட சபையில் மிகுந்த புகழ் வாய்ந்த புலாபாய் தேசாய் அவர்களுடைய தலைமையில் காங்கிரஸ் கட்சி அப்பொழுது வேலை செய்துகொண்டிருந்தது. டில்லி சட்ட சபையில் நடந்துகொண்டிருந்த காங்கிரஸ் கட்சியின் வேலை தேசம் எங்கும் மிக உயர்வாகப் பாராட்டப்பட்டு வந்தது. எனவே, டில்லியில் கூடிய இந்தக் கூட்டம் மக்களுக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது. இந்தக் கூட்டத்திற்கு எல்லா மத்திய சட்ட சபைக் காங்கிரஸ் அங்கத்தினர்களும், மாகாணச் சட்ட சபைக் காங்கிரஸ் அங்கத்தினர்களும், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களும் அழைக்கப்பட்டிருந்தார்கள். சுமார் ஆயிரம் பேர்களுக்குமேல் வந்திருப்பார்களென நினைக்கிறேன். இதற்கென அழகாக அமைக்கப்பட்ட பந்தலில் கூட்டம் கூடியது. இந்தியாவின் சரித்திரத்திலேயே முதல் தடவையாக இவ்விதம் ஒரு கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. அதற்குப் பிறகும் இம்மாதிரி கூட்டம் நிகழ்ந்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. எனவே, மிகுந்த உற்சாகத்துடன் அங்கத்தினர்கள் பலரும் கூட்டத்திற் கலந்துகொண்டார்கள்.

அன்றையத் தினம் மகாத்மாஜி டில்லியில்தான் இருந்தார். அப்பொழுது மத்தியச் சட்ட சபைக்கூட்டம் நடந்துகொண்டிருந்ததால் நானும் அப்பொழுது டில்லியில்தான் இருந்தேன். கூட்டத்திற்குத் தமிழ்நாட்டிலிருந்து காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர்கள் பலரும் வந்திருந்தார்கள்

ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன், சர்தார் ஏ. வேதரத்தினம் பிள்ளை, ஸ்ரீ சி. சுப்பையா, ஸ்ரீ கிருஷ்ணசாமிபாரதி முதலிய பலர் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள்.

கூட்டம் நடந்துகொண்டிருந்தபோது மாலையில் மகாத்மாஜியைச் சந்தித்து வந்தால் என்ன என்ற எண்ணம் தோன்றிற்று. சுப்பராமன் அவர்களும், சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்களும் கூட வருவதாகச் சொன்னார்கள். எனவே, மாலையில் அவரைப் பார்ப்பதற்குப் புறப்பட்டோம். மகாத்மாஜி அக்காலத்தில் டில்லியிலிருந்து சுமார் பத்து மைல் தூரத்திலுள்ள 'கிங்ஸ்வே' என்னும் இடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த ஹரிஜன ஆசிரமத்தில் இருந்து வந்தார். அங்கே ஒரு சிறு வீட்டு மாடியில் இருந்துகொண்டிருந்தார். நாங்கள் சென்ற சமயம் இருட்டு வரக்கூடிய நேரம். பிரார்த்தனை முடிந்து மகாத்மாஜி மாடியில் உலாவிக்கொண்டிருந்தார். நாங்கள் மூவரும் வந்திருப்பதாகச் சொல்லி அனுப்பினோம். உடனே வரும்படி தகவல் வந்தது. உள்ளே சென்றதும் மகாத்மாஜி தமக்கே இயல்பான ஒப்புவமையில்லாத புன்சிரிப்புடன், "வாருங்கள், வாருங்கள்" என்று சொல்லி மூவரையும் வரவேற்றார். மூவரும் கீழே விழுந்து அவர் பாதங்களைத்தொட்டு நமஸ்காரம் செய்தோம். ஸ்ரீ சுப்பராமனை அவருக்கு முன்னதாகவே நன்றாகத் தெரியும். நான் மத்தியச் சட்ட சபையில் இருப்பதும் அவருக்கு முன்னமேயே தெரியும். ஸ்ரீ சுப்பராமன் அவர்களும், ஸ்ரீ சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்களும் மாகாணச் சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்ததாகவும், சட்ட சபை அங்கத்தினர்கள் கூட்டத்திற்கு டில்லிக்கு வந்திருப்பதாகவும் சொன்னோம், அதைக் கேட்டதும் கொல் என்று சிரித்தார். சிரித்துச் சொன்னார்: "என்ன வேடிக்கை! நீ மத்திய சட்ட சபை அங்கத்தினன். அவர்கள் மாகாணச் சட்ட சபை அங்கத்தினர்" என்றார். நாங்களும் கூடச் சேர்ந்து சிரித்தோம். அவர் சொன்னதன் பொருள்,

"காலத்தின் மாறுபாட்டைப் பார்த்தீர்களா? நேற்றுப் பிறந்த பிள்ளைகள் நீங்கள். அதில் ஒருவன் மத்தியச் சட்ட சபை அங்கத்தினன்; இருவர் மாகாணச் சட்ட சபை அங்கத்தினர்கள்" என்பதே. தம்முடைய குழந்தைகள் இந்தப் பதவிகளை அடைந்ததைப் பார்த்து வியந்து மகிழ்ந்தது மாதிரி இருந்தது. அது எங்கள் உள்ளத்திலும் மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கியது.

அதற்குமேல் நாங்கள் அங்கு வந்திருக்கும் அலுவல்கள்பற்றியும், அப்பொழுது நடந்துகொண்டிருந்த காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர்கள் கூட்டத்தைப் பற்றியும் பேச்சு வந்தது. அப்பொழுது அவரிடத்தில், "தாங்கள் சர்க்காரிடம், கவர்னர் சாதாரண விஷயங்களில் தலையிடக்கூடாது என்று உறுதிமொழி கேட்டிருக்கிறீர்கள். இம்மாதிரி உறுதி மொழிகள் கேட்டுத்தான் 1920-ஆம் வருஷத்திலிருந்து இதுவரையில் நல்ல சந்தர்ப்பங்களை நீங்கள் நழுவ விட்டிருக்கிறீர்கள் என்று பலர் நினைக்கிறார்கள். தவிர, அதிகாரம் ஏற்றுக்கொண்ட பிற்பாடு, உள்ளிருந்து சண்டை செய்வது காங்கிரசுக்கு இன்னும் அதிக பலத்தைக் கொடுக்குமென்று சிலர் நினைக்கிறார்கள்" என்று சொன்னேன்.

நான் சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் அவர் முகத்தில் இருந்த புன்சிரிப்புப் போய் ஓர் ஆழ்ந்த தோற்றம் தோன்றிற்று. அவர் பதில் சொன்னார்: "அப்படிப் பலர் நினைப்பது எனக்குத் தெரியும். ஆயினும், இந்தச் சமயத்தில் இத்தகைய வாக்குறுதியின்றி உத்தியோகத்தை ஏற்றுக்கொள்வது தேசத்திற்கு நல்லதல்ல என்றே நான் நினைக்கிறேன். ஒருவிதச் செடி இருக்கிறது; அது மலர்ந்து அனைத்தையும் வரவேற்பதுபோல் இருக்கும். ஆனால், ஏதாவது பூச்சி அதன்மேல் போய் உட்கார்ந்ததும், தன்னைத் தானே அப்படியே மூடிக்கொண்டு, அந்தப் பூச்சியைக் கொன்று சாப்பிட்டுவிடும். இதுபோல் சில

பெரிய மரங்களும் இருக்கின்றன. தென்னுப்பிரிக்காவில் இருந்தபோது அவைகளேப்பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறேன். அவைகளே மனிதனே வேறு பிராணிகளோ தொட் டால் அவனேயும் சரி அவற்றையும் சரி, உள் இழுத்துக் கொண்டு, முறித்து உடைத்து உறிஞ்சிவிடுமாம். அது போல்தான் இப்போதைய ராஜீய நிலே இருக்கிறது நாம் கேட்ட உறுதிமொழியின்றிக் காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்றுக்கொண்டால், அந்தப் பூச்சிகள் அல்லது பிராணி களுக்கான கதிதான் கிடைக்கும். இத்தகைய உறுதி மொழி கிடைத்தாலொழியச் சர்க்காரின் அமைப்பும், கவர் னருக்கு இருக்கும் அதிகாரமும் அவர்களேக் கபளீகரம் செய்துவிடும் என்பதில் ஐயம் இல்லே'' என்ருர்.

அவர் சொல்லிய வார்த்தைகள் எங்கள் மனத்திற்கு ஒரு புதிய வெளிச்சத்தைக் கொடுத்தன. நீண்ட தீர்க்க தரிசனத்துடன், பின்னுல் வரக்கூடிய காரியங்கள் அனேத்தும் தெரிந்து, அதற்கு ஏற்ற திட்டங்களே வகுப் பதுதான் உன்னதமான தலேவர்களின் குணுதிசயமாகும் மகாத்மாஜி அத்தகைய தூரப் பார்வையுடன் காரியங் களேப் பார்க்கிருர் என்பதை எதிர்காலத்தில் இது சம்பந்த மாக நடந்த விஷயங்களே நிரூபித்தன.

உலகத்தில் அறிவாளிகள், படித்தவர்கள் என்று நினேத்த பலரும், அவர் கேட்ட நிபந்தனேகளேப் பிரிட்டி ஷார் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று உரைத்தார் கள். ஆனல் மூன்று மாதங்களில் இந்த நிபந்தனேயை ஒப்புக்கொண்டு, சர்க்கார் வெளியிட்ட அறிக்கை உலகம் அறிந்த விஷயம் எந்த மனிதன் தான் கோரியவற்றை நன்ருக உணர்ந்து, அதற்காகத் தீர்மானமாக ஏகமனத் துடன் பாடுபடுவானே, அவனுக்கு வெற்றி நிச்சயம் "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார், திண்ணிய ராகப் பெறின்" என்பது பொய்யாமொழி. மகாத்மாஜி இதற்குச் சிறந்த உதாரணமாக நம் கண்முன் விளங்கி வந்தார்.

# 12. கல்விப் பிரச்னை

மந்திரி சபை பதவி ஏற்றபின், காங்கிரஸ் மகத்தான பிரச்னைகளைத் தீர்க்க வேண்டியிருந்தது. பெரிய சீர்திருத்தங்களையும் முன்னேற்றங்களையும் மக்கள் மந்திரிகளிடமிருந்து எதிர்பார்த்தார்கள். காங்கிரஸ் பல காலமாகப் பிரசாரம் செய்து வந்த நிர்மாணத் திட்டக் கொள்கைகள் அமலுக்கு வரும் என்பதையும் மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். நிர்மாணத் திட்டங்கள் பலதிறப்பட்டவையாக இருந்தன. அவற்றில் மிக முக்கியமானவை கதர், மது விலக்கு, கட்டாய ஆரம்பக்கல்வி முதலியன. காங்கிரஸ் பதவிக்கு வந்ததிலிருந்து இந்த நிர்மாணத் திட்டங்களை எவ்விதம் அமலுக்குக் கொண்டுவர முடியும் என்பதைப்பற்றித் தலைவர்கள் ஆலோசிக்கத் தொடங்கினர். காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கும், அவற்றின் மூலம் எல்லா மந்திரி சபைகளுக்கும் ஆலோசனை சொல்லும் பொறுப்பு, காந்தியடிகளுக்கு இருந்தது. எல்லாப் பிரச்னைகளும் அவர் முன் வைக்கப்பட்டு, அவர் யோசனையைக் கேட்டு, அதன்படி நடக்கப் பிரயத்தனம் நடைபெற்றது.

கோடிக்கணக்கான மக்களைக் கெடுக்க உதவியாக இருந்தது மது. காங்கிரஸ் பதவிக்கு வந்ததும், மதுவை விலக்குவது அதன் முதற் கொள்கையாக இருந்தது. பல தீர்மானங்கள் இதைப்பற்றிக் காங்கிரஸ் மகாசபைக் கூட்டங்களில் நிறைவேற்றப்பட்டன. எனவே, முதல் முதல் காங்கிரஸ் சர்க்கார் யோசிக்க வேண்டிய காரியம் அதுவாக இருந்தது. தாங்கள் பதவிக்கு வந்தவுடனே இந்த விஷயத்தை முதலில் மந்திரி சபையினர் ஆராய்ந்தார்கள்; அது சம்பந்தமான கணக்குகளைப் பார்த்தார்கள்.

மது விலக்கு நல்லது என்பதைப்பற்றி யாதொரு சந்தேக மும் இருக்கவில்லை. ஆனால், அதிலிருந்து வந்த வருமானம் மிக அதிகமானதாக இருந்தது. சென்னை மாகாணததில் அக்காலத்தில் சுமார் நாலரைக் கோடி ரூபாய் இந்தத் துறையிலிருந்து வந்தது. சென்னை மாகாணததின் முழு வருமானமே அக்காலத்தில் சுமார் 16½ கோடிதான். முழு வருமானத்தில் இத்தொகை எத்தகைய அளவு என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். சுமார் நான்கில் ஒரு பங்கு வருமானம் முழுவதையும் ஒருங்கே எங்ஙனம் இழப்பது என்பதே பெரிய கேள்வியாக இருந்தது.

இதனுடன் சேர்த்துக் கல்விப் பிரச்னையும் பிணைக்கப் பட்டிருத்தது. சுமார் 3 கோடி ரூபாய் கல்விக்காகச் செல வாயிற்று. ஆனால், மதுவின் மூலம் வந்த வருமானத்தை இழந்துவிட்டு, இன்னும் கல்வியைப் பரப்புவது எப்படி என்பது ஒரு பெரிய பிரச்னை.

காங்கிரஸின் திட்டம், கூடிய சீக்கிரத்தில் தேசம் முழுவதும் கட்டாய ஆரம்பப்படிப்புக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது. அப்படிக் கட்டாய ஆரம்பக் கல்விக்கு ஏற்பாடு செய்தால், இன்னும் 5 பங்குக்குமேல் பணம் செலவாகுமே! அந்தப் பணத்தை எங்கிருந்து சம்பாதிப்பது என்பது மற்றொரு கேள்வி. இவ்வளவு பணம் வேண்டி யிருக்கும்போது இப்பொழுது வந்துகொண்டிருக்கும் சுமார் 4½ கோடி ரூபாய் வருமானத்தையும் இழந்துவிடுவது உசிதமாகுமா என்று பலர் கேட்டார்கள்

குடிப்பவர்கள் யாருடைய வற்புறுத்தலின் பேரிலும் குடிப்பதில்லை. தாங்களே சுயேச்சையாகத்தான் குடிக் கிறார்கள். தவிர, மக்களுக்குக் குடிக்க உரிமையும் உண்டு; அந்த உரிமையைப் பாதிக்கச் சர்க்காருக்கு அதிகாரம் இல்லை. அந்த உரிமையையும் பாதித்து, இத்தகைய பெரிய வருமானத்தையும் இழப்பது தேசத்திற்கும் கல்வியின்

அபிவிருத்திக்கும் நல்லதல்ல என்றும் சிலர் வாதித்தார்கள். எனவே, இந்தப் பிரச்னேயைத் தீர்க்க ஒரு மார்க்கம் கண்டு பிடிக்க வேண்டியிருந்தது.

மக்களுக்கு எல்லா விதத்திலும் வழிகாட்டியாக இருந்த மகாத்மா காந்தி இதைப்பற்றித் தீவிரமாக ஆலோசித்தார். மதுவிலக்கு மிகவும் அவசியமானது. மதுவை எவ்வளவு சீக்கிரத்தில் ஒழிக்கிருேமோ அவ்வளவுக்குத் தேசத்திற்கு நல்லது என்ற அபிப்பிராயத்தை மகாத்மா காந்தி உறுதியாகக் கொண்டிருந்தார். அதனுடன் சேர்ந்து கல்விப் பிரச்னேயையும் ஆலோசிக்க ஆரம்பித்தார். அப்பொழுது இருந்த நிலேமையில் சென்னே மாகாணத்தில் மாத்திரம் கட்டாய ஆரம்பக் கல்வி கொண்டுவர இன்னும் பல கோடி ரூபாய்கள் அவசியம் என்ருல், நம் எளிய மக்கள் அத்தனே கோடி பணத்தை வரியாகக் கொடுக்க முடியுமா என்பதையும் அவர் ஆலோசித்தார். அந்த வரியை மக்கள் கொடுக்க முடியாதென்ருல், நம்முடைய நிலேமை என்ன? இந்த நிலேமையில் கட்டாயக் கல்வியை அமலுக்குக் கொண்டுவராமலே இருப்பது நியாயமாகுமா என்பதையும் ஆலோசித்தார்.

அக்காலக் கல்வி முறையும், அது நம் மக்களுக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டிருக்கிறதா என்ற கருத்தும் அவர் மனத்தில் வந்தன, "கல்வித் திட்டத்தை மாற்றி அமைக்கவேண்டும்; இந்நாட்டின் மக்களுக்கும் அவர்கள் சூழ் நிலேக்கும் ஏற்றவாறு நம் பள்ளிக்கூடங்களேத் திருத்தி அமைக்க வேண்டும்" என்று வெகு காலமாகப் பல அறிஞர்கள் சொல்லிவந்திருக்கிருர்கள். எனவே, எவ்விதத்தில் நாம் கல்வி முறையை மாற்றி அமைக்கவேண்டும் என்பதைப்பற்றியும் அவர் யோசித்தார். பல மாதங்கள் அவர் இதைப்பற்றிச் சிந்தித்திருக்க வேண்டும். பலருடனும் அவர் பேசியிருக்கவேண்டும். கடைசியில், அவர் ஒரு திட்டத்தைத் தமது பத்திரிகையில் வெளியிட்டார். அவர் சொன்னதாவது :

"புதிய (1935-ஆம் வருஷச் சட்டப்படி வந்த அரசியல்) சீர்திருத்தத்தில் ஒரு கஷ்டமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அது என்னவென்றால், மதுபானத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டுதான் நம் குழந்தைகளின் கல்வியை நாம் கவனிக்க வேண்டியிருக்கிறது. இது நமக்கு மிகவும் கடுமையான பிரச்னை. ஆனால், இதைக் கண்டு நாம் அஞ்சலாகாது. இந்தப் பிரச்னையிலிருந்து நாம் விடுவித்துக் கொள்வது, மதுபான விலக்கைப்பற்றி நாம் கொண்டுள்ள தீர்மானத்தைப் பாதிக்கும்படியாக இருக்கக்கூடாது. நம் குழந்தைகளின் கல்விக்காக மதுபானத்தை ஒழிக்க முடியாதென்று சொன்னால், அது மிகவும் அவமானமான விஷயமாகும். ஆதலால், மதுபானத்தையும் ஒழித்து, கல்வியையும் பரப்பக்கூடிய வேறு வழிகளை நாம் கண்டுபிடிக்க வேண்டும்.

"நாம் கல்விக்காக வேறு வரிகள் போடலாமென்பது உண்மை. ஆனால், கல்வி இத்தகைய முறையில் இருக்கும் வரையில் எத்தனை வரி போட்டாலும் போதுமானதாக இராது. இப்பொழுது ஒரு சிறு பகுதியாருக்கே கல்வி வழங்கப்பட்டு வருகிறது என்பதை நாம் மறந்துவிடலாகாது. இப்போதைய முறையிலேயே நடத்துவதென்றால் கல்விக்கு இன்னும் 5, 6 பங்குப் பணம் செலவு செய்ய வேண்டியிருக்கும். வரி வசூல் செய்வதன் மூலம் மாத்திரம் இந்தப் பிரச்னையை நாம் தீர்த்துவிட முடியாது. ஆதலால், தைரியமாக நான் ஒரு யோசனை சொல்ல முன் வந்திருக்கிறேன். இந்த யோசனை பயனற்றது என்று சிலர் நினைக்கலாம். ஆனாலும், அதை நான் சொல்லியே தீரவேண்டும். தொழில் மூலம் கல்வியைக் கற்பித்து, அதன் மூலம் கல்விக்காகச் செலவாகும் பொருளையும் ஓரளவு நாம் சம்பாதிக்க வேண்டும் என்பது அது. கல்வி என்பது மக்களிடமுள்ள உயர்ந்த சக்தியை வெளிப்படுத்த ஒரு கருவியாகும். அவர்கள் உடல், மனம், ஆத்மா இவைகளின் பண்பை வளர்க்க வேண்டும். எழுத்தறிவு, கல்வியின் ஆரம்பமே

யொழிய அதன் முடிவல்ல. மக்களிடத்தில் மனப்பண்பை யும் கல்வி அறிவையும் ஊட்டுவதற்கு அது ஒரு சாதனமாக இருக்கின்றது. எழுத்தறிவு மாத்திரம் கல்வி அறிவு ஆகாது. என்னைக் கேட்டால், குழந்தைகளின் கல்வி ஓர் உபயோகமான தொழிலைக் கற்பதன் மூலமாக ஆரம்பிக்கப் பட்டு, ஆரம்பத்திலிருந்து சரியாக அந்தத் தொழிலைச் செய்யக்கூடிய சக்தியை அதற்கு அளிக்க வேண்டும். அதன்மூலம் பிள்ளைகள் ஓரளவுக்குத் தங்கள் செலவைத் தாங்களே சரி செய்துகொள்ளும்படி செய்யலாம்.

"இத்தகைய கல்வியின் மூலந்தான் மனிதர்களுடைய மனத்தையும் ஆத்மாவையும் சரியாகப் பண்படுத்தி வளர்க்க முடியுமென்று நான் நம்புகிறேன். வெறும் கைத் தொழிலை மட்டும் சொல்லித் தரலாகாது. அதில் பொதிந் திருக்கக் கூடிய அறிவுக்கேற்ற சாதனங்களைக் குழந்தைகள் நன்ருக அறியும்படி சொல்லித் தரவேண்டும். நானே குழந் தைகளுக்குச் செருப்புத் தைத்தல், நூற்றல் முதலியவை களைச் சொல்லித் தந்து மிக்க பயனைக் கண்டிருக்கிறேன். குழந்தைகளுக்கு எழுதச் சொல்லிக் கொடுப்பதைக்கூடக் கொஞ்சம் பின்னுல் ஆரம்பிக்கலாம். இந்தக் கருத்துக்கள் மிகவும் புரட்சிகரமாக இருக்கலாம். ஆனுல் இத்தகைய முறைகளின் மூலந்தான் இந்தக் கல்விப் பிரச்னையை நாம் தீர்க்க முடியுமென்று நான் நம்புகிறேன்."

காந்தியடிகளின் இந்தக் கருத்துக்கள் நாடு முழுதும் பலவாருன விவாதத்தைக் கிளப்பின என்று சொல்லத் தேவையில்லை. பலர் இதை எதிர்த்தார்கள். கொஞ்ச நாள் பத்திரிகைகள் பலவும் இந்தக் கருத்துக்களை விவாதித் துக்கொண்டே இருந்தன. கல்வித் துறையில் ஈடுபட்ட அறிஞர்கள் அபிப்பிராயத்தைக் கலந்துகொண்டு இது விஷயத்தில் ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்று காந்தியடி களுக்குத் தோன்றியது. எனவே, இவ்விஷயங்களை ஆலோசித்து ஒரு முடிவுக்கு வருவதற்காக வார்தாவில் ஒரு

கல்வி மகாநாடு கூட்டப்பட்டது. இந்தியாவில் தேசீயக் கல்வியில் அக்கரை வாய்ந்து, அதற்காக உழைத்துக் கொண்டிருந்த பலர் இதற்கு அழைக்கப்பட்டார்கள். டில்லியில் தேசீய முஸ்லீம் சர்வகலாசாலையை (Jamia Milia) நடத்திவந்த ஸ்ரீ ஜாகிர் ஹுசேன், ஸ்ரீ அரிய நாயகம் ஸ்ரீமதி ஆஷா தேவி, மாகாணக் கல்வி மந்திரிகள் முதலிய கல்வியில் சம்பந்தப்பட்ட பலரும் அழைக்கப் பட்டிருந்தார்கள். அம்மகாநாட்டிற்கு அழைக்கப்பட்ட வர்களில் நானும் ஒருவன். இதிலிருந்து மகாத்மாவிடம் கல்வி சம்பந்தமாக நெருங்கிப் பழக எனக்கு மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.

# 13. வார்தாக் கல்வி மகாநாடு

கல்வியைப்பற்றிய மகாத்மாஜியின் பிரேரணைகள் இந்தியா முழுவதும் ஒரு பெரிய விவாதத்தைக் கிளப்பி யிருந்தன. பள்ளிக்கூடங்களில் வெறும் படிப்பு மாத்திரந் தான் இருக்கவேண்டுமென்ற கருத்து இன்னும் உலகில் இருந்து வருகிறது. கற்றவர்களென்று பெயர் பெற்ற வர்கள் அழகாக உடுத்திக்கொண்டு காரியாலயங்களில் மேஜைக்கு முன் குரிச்சியில் அமர்ந்து, எழுத்து வேலை செய்வதுதான் தங்களுக்குப் பெருமையென்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். அதற்குப் பதிலாக, 'எல்லாக் காரியங்களையும் தாங்களே செய்யவேண்டும். வேலையில் உயர்வு தாழ்வு என்பது இல்லை. தொழில் மூலமே கல்வி போதிக்கப்பட வேண்டும்' என்றெல்லாம் மகாத்மா காந்தி சொன்னது அவர்களுக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. எனவே, அதற்கு எதிர்ப்பாகவும் விரோதமாகவும் பல இடங்களிலிருந்து கூக்குரல்கள் எழுந்தன.

சிலர், "பள்ளிக்கூடங்களுக்குப் படிப்பதற்காக அல்லவா எங்கள் பிள்ளைகளை அனுப்புகிறோம்? இந்தக் காரியங்களைச் செய்வதற்கல்லவே!" என்று சொன்னார்கள்.

இன்னும் சிலர், "பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளிடம் வேலை வாங்கி, அதன் மூலம் வருமானம் சம்பாதிக்க வேண்டுமென்று நினைப்பது அவர்களை அந்த வேலைக்கு அடிமையாக்கிவிடும். இனிமேல் பள்ளிக்கூடங்கள் கல்விச் சாலைகளாக இராமல், குழந்தைகளைக் கொண்டு வேலை வாங்கும் வெறும் தொழிற்சாலைகளாக மாறிவிடும். அது குழந்தைகளின் வளர்ச்சியைப் பாதிப்பதாக இருக்கும்" என்றார்கள்.

வேறு சிலரோ, ''மகாத்மாஜியின் கதர்த் திட்டம், தீண்டாமை, மதுவிலக்குப்போல் இதுவும் முடியாத காரியங்களில் ஒன்று'' என்று நினைத்தார்கள்.

எனவே, எல்லோரும் வார்தாவில் கூடவிருக்கும் கல்வி நிபுணர்கள் மகாநாட்டை எதிர்பார்த்திருந்தார்கள்.

கல்வி மகாநாடு 1937-ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் 22‘ 23-ஆம் தேதிகளில் வார்தாவில் கூட்டுவதற்காக ஏற்பாடு ஆகியிருந்தது. இந்தியா முழுவதிலிருந்தும் கல்வி மந்திரிகள் பலருக்கும் அழைப்புச் சென்றது. அத்துடன் கல்வியில் நிபுணர்களென்று பெயர் பெற்ற பலருக்கும் அழைப்பு விடுத்திருந்தார்கள். ஆங்காங்கே தேசீயக் கல்வி முறையை நடத்த முயன்றுகொண்டிருக்கும் வித்தியா சாலைகள் நாட்டில் பல இருப்பதை நேயர்கள் அறிவார்கள். அவைகளில் முக்கியமானவற்றை நடத்திவருபவர் சிலரும் மகாநாட்டிற்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். இங்ஙனம் அழைக்கப் பெற்றவர்களில் பலர் மேல்நாடு சென்று கல்வித் துறையில் மிகவும் பயின்று வந்தவர்கள். சிலர் கல்லூரியில் வேலை செய்து கொண்டிருந்த பேராசிரியர்கள். இன்னும் சிலர் பல விதங்களில் நன்ருகப் படித்துக் குழந்தைகளை வளர்ப்பதற்குரிய தத்துவங்களை அறிந்தவர்கள். ஆதலால், இம் மகாநாட்டை இந்தியா முழுவதிலும் உள்ளவர்கள் மிகவும் அக்கரையுடன் கவனித்தார்கள். கல்வி மந்திரிகள் அனைவருக்கும் அழைப்புப் போயிற்றென்று குறிப்பிட்டிருந்தேன் சென்னையிலிருந்து அப்பொழுது கல்வி மந்திரியாயிருந்த டாக்டர் சுப்பராயன் அவர்களும் மகாநாட்டிற்கு வந்திருந்தார். பம்பாயில் பிரதம மந்திரியாகவும் கல்வி மந்திரியாகவும் இருந்த பி. ஜி. கேர் அவர்களும், பீகாரில் கல்வி மந்திரியாயிருந்த டாக்டர் சையத் மகமது, மத்திய மாகாணப் பிரதம மந்திரியான ஸ்ரீ சுக்லா, ஒரிசா. மாகாணப் பிரதமர் ஸ்ரீ விசுவநாத தாஸ் ஆகியவர்களும், வேறு

மாகாணக் கல்வி மந்திரிகள் பலரும் வந்திருந்தார்கள். கல்வி நிபுணர்களில் ஸ்ரீ ஜாகிர் ஹுசேன், ஸ்ரீ அரியநாயகம், பேராசிரியர் கே. டி. ஷா முதலிய பலரும் வந்திருந்தார்கள். தேசீய முறையில் வித்தியாலயங்கள் நடத்திவரும் பிரதி நிதிகள், மகாராஷ்டிரத்திலிருந்து திலகர் வித்தியாலயத்தை நடத்தி வந்த ஸ்ரீ அடிட்கர், குஜராத்திலிருந்து ஸ்ரீ நாஞ பாய் பட் முதலியவர்களும் வந்திருந்தார்கள். இப்பொழுது பம்பாய் மாகாணக் கல்வி ஆலோசகராக இருந்துவரும் ஸ்ரீசயதீன், பேராசிரியர் பி. ஸி. ராய்., ஸ்ரீ விநோபா பாவே, ஸ்ரீ காகா காலேல்கர், ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பா, ஸ்ரீ கிஷோர் லால் மஷ்ருவாலா முதலியவர்களும் மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். கல்வி ஸ்தாபனங்கள் நடத்திவரும் ஊழியர்களில் ஒருவனாக என்னையும் அழைத்திருந்தார்கள். மகாத்மாஜியால் அமைக்கப்படும் இச்சிறந்த கல்வி மகா நாட்டில் கலந்துகொள்ளக்கூடிய சந்தர்ப்பம் கிடைத்ததை நான் ஒரு பெரும் பாக்கியமாக நினைத்தேன்.

மகாநாட்டை மகாத்மாஜி தம் முன்னுரையுடன் ஆரம் பித்து வைத்தார். அச்சமயத்தில் மகாத்மாஜி உடல்நலம் சரி யில்லாமலிருந்ததால், கொஞ்ச காலமாகவே அவர் மிகவும் பலவீனமாகவே இருந்தார். இம்மகாநாட்டில் பேசுவதற்கு வேண்டிய சக்தியைச் சேகரித்துக் கொள்வதற்காகவே அதற்கு முன் பல தினங்கள் அவர் மௌன விரதம் மேற்கொண் டிருந்தார். அவர் பேசும்போதுகூட கம்மிய குரலில் மிகவும் நிதானமாகத்தான் பேசமுடிந்தது. அவர் தம்முடைய பிரேரணைகளைச் சொல்லுமுன் வழக்கம்போல் ஒரு விஷயத்தைக் கண்டிப்பாக உரைத்து வந்தார். அது மகாநாட்டிற்கு ஓர் எச்சரிக்கையாக இருந்தது. மிகவும் மனப்பூர்வமாக அவர் முதலில் கேட்டுக்கொண்டது இதுதான்: “நான் சொல்லு கிறேனென்று எதையும் நீங்கள் ஒப்புக்கொள்ளவேண்டாம். என்னிடத்திலிருந்து இவ்விஷயம் வருகிறதென்பது உங்கள் அபிப்பிராயத்தைப் பாதிக்கக்கூடாது; தயை செய்து உங்கள் மனத்தில் எதெது சரியென்று தோன்றுகிறதோ அதைச்

சொல்லுங்கள். நான் சொல்லுவது தவறு என்று தோன்றினல். அதைத் தைரியமாகவும், நன்ருகவும் எனக்கு எடுத்துரைப்பதே நீங்கள் எனக்குச் செய்யக்கூடிய உதவியாகும்; என்பால் காட்டக்கூடிய அன்பு அதுதான். ஆதலால், என்னிடம் இருக்கும் மரியாதையைக் கொண்டு நான் சொல்வதை நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டாம். உங்களுடைய உண்மையான அபிப்பிராயத்தையே நான் அறிய விரும்புகிறேன். அதைத் தயை தாட்சண்யமின்றி எடுத்துச் சொல்லும்படி மிகவும் மன்ருடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

அதற்குமேல் அவர் தம்முடைய பிரேரணைகளைப் பற்றி சொன்னதாவது: "குழந்தைகளுக்குக் கல்வி போதிப்பதில் எனக்குக் கொஞ்சம் அனுபவம் உண்டு. நான் தென்னுப்பிரிக்காவில் டால்ஸ்டாய் தோட்டத்தில் வசித்து வந்தபோது பலவகை ஜாதியினராகிய குழந்தைகள் பலருக்குக் கல்வி போதித்து வந்திருக்கிறேன். தச்சு வேலை, செருப்புத் தைத்தல் போன்ற தொழில் மூலமாகவே அத்தகைய கல்வியைப் போதித்தேன். அதன் மூலம் குழந்தைகளும் மற்றவர்களும் நல்ல பயனை அடைந்திருக்கிருர்களென்றே நான் நம்புகிறேன். இக்கல்வி முறையில் அத்தொழிலைச் சொல்லிக் கொடுப்பது முக்கியம் அன்று. அத்தொழில் மூலம், கணக்கு, சரித்திரம் முதலிய எல்லாவிதமான அறிவையும் புகட்டுவதுதான் முக்கியமான கருத்தாகும். தற்கால கல்வியிலிருக்கும் பல குறைகளைப் போக்கவே இத்தகைய கல்வி முறையை ஏற்கவேண்டுமென்று நான் சொல்லுகிறேன். தக்ளி மூலம் கல்வி கற்க வேண்டுமென்று நான் உரைப்பதற்குக் காரணம், அதன் மூலம் பலதரப்பட்ட கல்வியைப் புகட்ட முடியுமென்பதுதான். தவிர, உணவுக்கு அடுத்தபடி உடை அவசியமாயிருப்பதால் அதன் மூலம் உண்டாகும் பண்டமும் பிரயோஜனமுடையதாக இருக்கும்.

"நமது தற்காலப் பொருளாதார நிலையில் பள்ளிக் குழந்தைகளின் உழைப்பின் மூலம் ஆசிரியர்களின் சம்பளத்தின் ஒரு பகுதியையாவது சம்பாதிக்க வேண்டுமென்று நான்

நினைக்கிறேன். புதிதாக வரி போட்டுக் கட்டாயக் கல்விக்குப் பணம் கண்டுபிடிக்கும் வரையில் நாம் காத்திருக்க முடியாது. தற்காலப் பள்ளிக் கூடங்களிலிருக்கும் பிள்ளைகளுக்குத் தங்களையும், சுற்றுப் புறத்தையும் சுத்தமாய் வைத்திருக்கத் தெரியாது. தாங்களே தங்கள் காரியங்களைக் கவனித்துக் கொள்ளவும் தெரியாது. நான் சொல்லும் கல்வி மூலம் அவர்களுக்கு இப் பழக்கம் உண்டாகுமென்று நம்புகிறேன். இக் கல்வி முறையை நான் ஏற்க வேண்டுமென்று உரைப்பது, அதனால் வரக்கூடிய வருமானத்திற்காக அல்ல. நம் குழந்தைகள் வளர்ச்சிக்கு இது மிகவும் ஏற்றதென்ற நம்பிக்கையின்பேரில்தான் நமது கல்வி முறை அங்ஙனம் சீர்திருந்த வேண்டுமென்று அபிப்பிராயப் படுகிறேன்.''

இதற்குமேல் விவாதம் ஆரம்பமாயிற்று. மகாநாடு அன்றும் மறுதினமும் நடந்தது. ஸ்ரீ ஜாகிர் ஹுசேன் முதலில் பேசினர். "மகாத்மா காந்திஜியினுடைய கருத்து முற்றும் புதிதானதல்ல காரியங்களைச் செய்வதன் மூலம் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பது என்பது பல ஆண்டுகளாகக் கல்வி நிபுணர்கள் ஒப்புக்கொண்ட கொள்கையாகும். அந்தக் கொள்கையைப் பல நாடுகள் ஏற்றுக்கொண்டு, அமல் நடத்தி வருகின்றன, ப்ராஜெக்ட் முறை (Project Method) போன்ற முறைகள் இத்தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. ஆனல், தொழில்களை அடிப்படையாகக் கொண்டு கல்வி போதிப்பதென்பது அதற்குமேல் ஒரு படியாகும். இதுவும் முற்றும் புதிது எனச் சொல்லமுடியாது, ரஷ்யா போன்ற நாடுகளில் இன்னும் இதுமாதிரிக் கல்வி பயில்விக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. ஆனல் தொழிலை அடிப்படையாகக் கொண்டு கல்வி கற்பித்து, அதன் மூலம் வரும் வருமானத்தைக் கொண்டு பள்ளிக்கூடத்தை நடத்துவதென்பது ஒரு புதிதான அம்சமே. அது விஷயத்தைப்பற்றித் தீர ஆலோசித்து அநுபவத்தில் பார்த்துத்தான் முடிவு சொல்ல வேண்டும். ஆனல், தொழில் மூலம் கல்வியென்ற மகாத்மாஜியின் அடிப்படையான தத்துவம் முற்றும் ஒப்புக்கொள்ளக் கூடிய தத்துவமே."

இன்னும் ஸ்ரீமதி சௌதாமினி மேத்தா, பேராசிரியர் கே. டீ. ஷா, நாகபுரி திலகர் வித்தியாலயத்தின் தலைவராக இருந்த ஸ்ரீ திஜாரே, டாக்டர் சையத் முகமது, ஆசாரிய விநோபா, பேராசிரியர் டாக்டர் பி. ஸி. ராய் ஹரித்துவாரத்துக்கருகில் ஆசிரிய சமாஜத்தைச் சேர்ந்த கங்கிக் குருகுலத் தலைவர் ஸ்ரீ தேவி சர்மா முதலிய பலர் விவாதத்தில் கலந்து கொண்டார்கள். நானும் பேசினேன்.

இந்த மகாநாட்டில் தொழில் மூலம் கல்வியென்ற முக்கியமான தத்துவத்தைத் தவிரக் கல்விப் போதனையின் வேறு சில அம்சங்களைப்பற்றியும் விவாதம் நடைபெற்றது. நிரந்தரமாகக் குழந்தைகளுக்குக் கல்வி பயிற்றுவதற்குஎத்தனை வருஷம் கட்டாயக் கல்வி இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும், பள்ளிக்கூடங்களில் எந்த மொழி மூலம் கல்வி போதிக்கப்பட வேண்டும் என்பதைப்பற்றியும் அன்று விவாதம் நடைபெற்றது. அக்காலத்தில் எல்லா உயர்தரப் பள்ளிகளிலும் ஆங்கிலத்தின் மூலமே கல்வி கற்பித்தார்கள். பலர் தங்கள் குழந்தைகள் ஆரம்ப பாடசாலையில்கூட ஆங்கிலத்தின் மூலம் கல்வி பயில வேண்டுமென்று நினைத்து வந்தார்கள். எனவே, அப் பிரச்சனையும் ஒரு முக்கியமான அம்சமாக மகாநாட்டில் விளங்கியது, இரண்டு நாட்கள் விவாதங்களுக்குப்பின் கீழ்க்கண்ட தீர்மானங்கள் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டன.

1. இந்த மகாநாட்டின் அபிப்பிராயப்படி தேசம் முழுவதிலும் எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாய இலவசப் படிப்பு ஏழு ஆண்டுகளுக்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

2. பள்ளிகளில் போதனை தாய்ப் பாஷையின் மூலமே இருக்க வேண்டும்.

3. மகாத்மாஜியின் பிரேரணைப்படி, கல்வி ஒரு தொழிலை அடிப்படையாகக் கொண்டு இருக்க வேண்டும். குழந்தைகளின் சக்திகளை வெளிப்படுத்துவதற்கு ஏற்றவாறு இந்தத்

தொழில் முறையைப் பள்ளிக்கூடங்கள் உபயோகப் படுத்த வேண்டும். அந்தத் தொழில்களும் கூடுமானவரை பயனுடையனவாக இருக்கவேண்டும். அந்த அந்தச் சுற்றுப்புறங்களுக் கேற்றவாறு இத்தொழில்கள் இருக்கவேண்டும்.

4. நாளடைவில் ஆசிரியர்களுக்குக் கொடுக்கவேண்டிய ஊதியத்தையும் இக்கல்வி மூலம் பெற முடியுமென்று இம் மகாநாடு எதிர் பார்க்கிறது.

வார்தாவில் நடந்த அந்தக் கல்வி மகாநாடும், அதில் நிறைவேறிய தீர்மானங்களும் கல்வியுலகில் பெரும் புரட்சியை உண்டு பண்ணின. அக்காலத்தில் மக்கள் பலர் அதனுடைய அடிப்படையான தத்துவங்களை உணரவில்லை. இன்று இந்தியா முழுவதும் ஒப்புக்கொள்ளப்படும் ஆதாரக் கல்வியின் அஸ்திவாரம் அந்த மகாநாட்டில் போடப்பட்டது.



# 14. தாலிமி சங்கத்தின் முதல் கூட்டம்.

வார்தாக் கல்வி மகாநாட்டில் செய்த தீர்மானத்தின்படி கல்வித் திட்டம் ஒன்றை அமைக்க ஒரு கமிட்டி நிறுவினர்கள், அதற்கு ஸ்ரீ ஜாகிர் ஹுசேன் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். ஸ்ரீ வினோபா முதலியவர்கள் அங்கத்தினர்களாக இருந்தார்கள். மகாத்மாஜியின் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு இந்தத் திட்டம் வகுக்கப்பட்டது. தாய்ப் பாஷையிலேயே இக் கல்வியைப் போதிக்க வேண்டும். நிரந்தரமாகக் கல்வி கற்க 7 ஆண்டுகளுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும். ஒரு கைத்தொழிலை அடிப்படையாகக் கொண்டு இத்திட்டம் வகுக்கப்பட்டது. கமிட்டியார் இத்திட்டத்தை வகுத்து மகாத்மாஜியிடம் சமர்ப்பித்தார்கள்.

திட்டம் வெளியானபிறகு, இத்திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர ஒரு ஸ்தாபனத்தை நிறுவுவது அவசியமாயிற்று. மகாத்மாஜியின் திட்டங்களனைத்தும் அவ்வப்போது அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின்முன் வைக்கப்பட்டு, அதன் தீர்மானப்படி அதற்கு உசிதமான ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப் பட்டன என்பதை நேயர்கள் அறிவார்கள். இம்முறையில் தான் அகில இந்தியச் சர்க்கா சங்கம் முதலியன ஏற்பட்டன. அதுபோல் இவ்விஷயமும் அகில இந்தியக் காங்கிரசின் முன் வைக்கப்பட்டு, அதில் ஒரு தீர்மானம் நிறைவேறியது. அந்தத் தீர்மானத்தில் வார்தாக் கல்வி மகாநாட்டின் தீர்மானங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டு, அந்தக் கொள்கைகளின்படி தயாரிக்கப் பட்ட திட்டத்தை அமலுக்குக் கொண்டுவர, அகில இந்தியக் கல்வி சங்கமொன்று ஏற்படுத்த வேண்டுமென்றும், அதை டாக்டர் ஜாகிர் ஹுசேன் அவர்களும், ஸ்ரீ அரியநாயகம்

அவர்களும் மகாத்மாஜியுடன் கலந்து நிர்மாணம் செய்ய வேண்டுமென்றும் தீர்மானம் செய்யப்பட்டது. அந்தத் தீர்மானப்படி அகில இந்தியக் கல்விச் சங்கமொன்று நிறுவப்பட்டது. அதுதான் இப்பொழுது *'இந்துஸ்தானி தாலிமி சங்க்'* என்று வழங்கும் ஸ்தாபனமாகும். இந்துஸ்தானியென்ருல் இந்துஸ்தானத்தை, அதாவது இந்தியாவைச் சேர்ந்த என்ற பொருள். தாலிமியென்ருல் கல்வி. எனவே, 'இந்துஸ்தானி தாலிமி சங்க்' என்ருல் 'இந்தியக் கல்விச் சங்கம்' என்று பொருள்படும். அவர்கள் வகுத்த கல்வித் திட்டமே ஆங்கிலத்தில் 'Basic Education' என்றும், தமிழில் 'ஆதாரக் கல்வி' என்றும் வழங்கப்பெற்றது. இப்பொழுது நாடு முழுவதும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்தச் சங்கத்தின் முதல் கூட்டம் 1938-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 23-ஆந் தேதி வார்தாவில் ஸ்ரீ ஜம்ஞலால் பஜாஜ் அவர்கள்வீட்டில் நடைபெற்றது. ஸ்ரீ ஜாகிர் ஹுசேன், ஸ்ரீ அரிய நாயகம், ஸ்ரீமதி ஆஷாதேவி, ஸ்ரீ விஞேபா, ஸ்ரீ ஜே. பி. கிருபாளனி, ஸ்ரீ நரேந்திரதேவ் முதலிய 21 பேர்கள் இதன் மூல அங்கத்தினர்களாக அமைந்தார்கள். தென்ஞட்டிலிருந்து டாக்டர் ஜேசுதாசன் அவர்களும், ஸ்ரீ ஜி. ராமச்சந்திரன் அவர்களும் நானும் அச்சங்கத்தில் அங்கத்தினர்களாக இருந்தோம். அந்தக் காலத்தில் ஸ்ரீ ஜம்ஞலால் பஜாஜ் அவர்களின் வீடுதான் காங்கிரஸ் சம்பந்தமான எல்லாக் கூட்டங்களுக்கும் மத்திய இடமாக விளங்கி வந்தது. காங்கிரஸ் காரியக்கமிட்டிக் கூட்டங்கள் பெரும்பாலும் அவர் வீட்டிலிலேயே நடந்து வந்தன. மகாத்மா காந்தியைப் பார்க்க வரும் பலரும் அவர் வீட்டிலேயே விருந்தினராக இருந்து வந்தார்கள். மகாத்மாஜி அமைக்கும் கமிட்டிக் கூட்டங்கள், சங்கங்கள் முதலியனவும் அங்கேயே நடந்து வந்தன. எனவே. இந்தக் கூட்டம் அங்கே நடந்தது அவ்வளவு ஆச்சரியமாக இருக்கவில்லை.

ஸ்ரீ ஜம்ஞலால் பஜாஜ் அவர்களைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லாமல் இருக்கமுடியாது. அவர் மிகுந்த செல்வம்

வாய்ந்தவர்: மார்வாரி வகுப்பைச் சேர்ந்தவர். ஆனால் அவருடைய எளிமையான வாழ்க்கையும் தூய்மையான பழக்க வழக்கங்களும் எல்லோர் மனத்தையும் கொள்ளை கொண்டன. அவை எல்லாவற்றிற்கும் மேலாக அவருக்கு மகாத்மாஜியின் பேரில் இருந்த பக்தி மிக்க சிறப்பு வாய்ந்தது. அதைப் பூரணமான பக்தி என்று சொல்லவேண்டும். பூரணமான பக்தியில் கேள்விக்கும் சந்தேகத்திற்கும் இடம் இல்லை. மகாத்மாஜி என்ன சொல்லுகிறாரோ, அதை முற்றும் பின்பற்றி வந்தவர்களில் ஸ்ரீ ஜம்னாலால் பஜாஜ் ஒருவர். பணத்தைப் பற்றியோ, பெருமையைப் பற்றியோ அவர் கவனித்ததில்லை. மகாத்மாஜி ஒன்று சொன்னால், அதுவே அவருக்கு முடிந்த முடிவு. அதைச் சிரமேல் ஏற்று, அதன்படி நடப்பதே அவருக்கு இன்பம் தருவதாக இருந்தது. அத்தகைய உயர்ந்த மனிதர்களுடன் பழகச் சந்தர்ப்பம் கிடைத்தது ஒரு பெரிய பேறென நாங்கள் நினைத்தோம். சிலபேர் தாங்கள் மட்டும் பக்தியுடன் இருப்பார்கள்: தங்கள் குடும்பத்தில் அவ்விஷயத்தில் ஒத்துழைப்பு இராது. ஆனால், ஜம்னாலால் பஜாஜ் அவர்களின் தூய்மையான பக்தியே அவர் குடும்பத்தையும் இந்தப் பக்தியில் ஈடுபடும்படி செய்தது போலும்! அவர் மனைவி ஸ்ரீ ஜானகிபாய் பஜாஜ் அவர்களும் தம் பர்த்தாவைப் போலவே மகாத்மாஜியிடத்தில் நிறைந்த பக்தியுடையவர்களாய் இருந்தார்கள். அவர்களுடைய குழந்தைகளும் அங்ஙனமே இருந்தார்கள். பஜாஜின் குடும்பத்தாருக்கு மகாத்மாஜியிடத்திலிருந்த பக்தியே அவர்கள் வீட்டை எல்லா முக்கியமான காரியங்களுக்கும் பொதுவுடமையாகச் செய்தது. இந்தியச் சுதந்திரச் சரித்திரத்தில் ஸ்ரீ ஜம்னாலால் பஜாஜ் அவர்களுடைய சேவை மிகவும் போற்றற்குரியது.

இந்துஸ்தானி தாலிமி சங்கத்தின் முதல் கூட்டம் அவர்கள் வீட்டில் நடந்ததென்று முன் குறிப்பிட்டேன். மகாத்மாஜி அக்கூட்டத்திற்கு வந்து, இனிமேல் நடக்கவேண்டிய வேலையைப்பற்றி விவரமாகப் பேசினார். அவர் பேச்சில் மறுபடியும் ஓர் எச்சரிக்கை இருந்தது. " நான் சொல்லுகிறேன் என்பதற்

காக இந்தக் கல்வி முறையை ஒப்புக்கொள்ள வேண்டாம். உங்கள் மனதிற்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதையே செய்யும்படி கேட்டுக்கொள்ளுகியேன். அதுவே நீங்கள் எனக்குச் செய்யக்கூடிய பெரிய உதவியாகும்'' என்ருர். அவர் மீண்டும் சொன்னதாவது: ''இக்கல்வி முறை சத்தியத்தையும் அஹிம்சையும் அடிப்படையாகக் கொண்டது. கிராமத்திலிருக்கும் மக்களுக்குப் பயன்படக்கூடிய முறையில் கிராமக் கைத்தொழில்களை அடிப்படையாகக் கொண்டே இக் கல்வியை அமைக்க வேண்டும். இத்தகைய தொழில் மூலம் கல்வியை நாம் கற்பிக்க முடியுமாஞல், சமூகத்தில் நாம் ஒரு புரட்சியை உண்டுபண்ணியவர்களாவோம். நம் பாடப் புத்தகங் களையெல்லாம் இதற்குத் தகுந்தபடி மாற்றி அமைக்கவேண்டும். எனக்கு ஆரம்பத்திலேயே அதிகமான பள்ளிக்கூடங்களை இம் முறையில் ஆரம்பிக்க வேண்டுமென்ற ஆசை இல்லை. இரண்டு பள்ளிக்கூடங்கள் இக்கொள்கைகளைப் பின்பற்றிச் சரிவர நடத்த முடியுமாஞல். நான் திருப்தி அடைவேன்'' என்று சொன்ஞர்.

சங்கத்திற்கு ஸ்ரீ ஜாகிர் ஹுசேன் அவர்கள் தலைவராகவும் ஸ்ரீ அரியநாயகம் அவர்கள் காரியதரிசியாகவும், ஸ்ரீ கிருஷ்ண தாஸ் ஜாஜு அவர்கள் பொக்கிஷதாராகவும் நியமிக்கப் பட்டார்கள். ஸ்ரீ அரியநாயகம் அவர்கள் இம்முறையை அடிப் படையாகக் கொண்டு, ஒரு பள்ளிக்கூடம் உடனே சேவாக் கிராமத்தில் ஏற்படுத்த வேண்டியதென்று ஒரு தீர்மானம் நிறைவேறியது. சங்கத்திற்கு வேண்டிய வரவு செலவுத் திட்டத்தை அந்தக் கூட்டத்திலேயே வகுத்தார்கள். அந்த ஆண்டுக்கு எத்தனை செலவாகுமென்று கணக்குப் போட்டு மகாத்மாஜிக்கு அறிவித்தோம். ''வரவுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?'' என்று அவர் சிரித்துக்கொண்டே கேட்டார். ''வரவுக்கு வழி நீங்கள்தாம்'' என்று ஜாகிர் ஹுசேன் அவர்களும் சிரித்துக்கொண்டே பதில் சொன்ஞர். அது கடைசி வரையில் உண்மையாகவே இருந்தது. இந்துஸ் தானி தாலிமி சங்கத்திற்குச் சில ஆண்டுகளில்

40,000—50,000 ரூபாய்களுக்குமேல் செலவு செய்யவேண்டி யிருந்தது. சங்கத்தில் இருந்தவர்களுக்குச் செலவு விவரந் தான் தெரியுமே யொழிய வரவு விவரம் தெரியாது. மகாத்மாஜி யின் மூலந்தான் பணம் முழுவதும் வந்தது. நாடு முழுவதி லிருந்தும் பலர் மகாத்மாஜியின் யுக்தம்போல் நல்ல காரியங் களுக்குச் செலவு செய்யவென்று ஆயிரக்கணக்கான ரூபாய் கள் அனுப்பி வந்தார்கள். அத்தொகையில் ஒரு பகுதியை மகாத்மாஜி இந்துஸ்தானி தாலிமி சங்கத்திற்குக் கொடுத்து வந்தார். இது தான் இந்துஸ்தானி தாலிமி சங்கத்தின் ஆரம்பமாகும்.

இந்துஸ்தானி தாலிமி சங்கத்தில் அங்கத்தினனுக இருந்தது, மகாத்மாஜியைப் பலதடவைகளில் சந்தித்துக் கல்வி சம்பந்தமாகப் பேச மிகவும் உதவியாக இருந்தது. இச்சங்கத் தின் கூட்டங்கள் அநேகமாக மகாத்மாஜியின் வசதியை அநுசரித்து, அவர் இருக்கும் இடத்தில் நடைபெற்றன. அநேகமாக எல்லாக் கூட்டங்களுக்கும் மகாத்மாஜி வருவார். கூட்டம் வேறு இடத்தில் நடந்த போதிலும், கூட்டத்திற்குப் பிறகு சில பிரச்னைகளில் அவருடைய அபிப்பிராயத்தை அறியும் பொருட்டு மகாத்மாஜி இருக்கும் இடம் செல்வோம். அந்தப் பிரச்னைகளை விளக்குவதற்கு அவர் அவ்வப்போது சொல்லிவந்த வார்த்தைகள் மிகவும் விளக்கம் தருவனவாக இருந்தன. அவரைக் கல்வித் துறையில் நிபுணரென்று சொல்ல முடியாது. எத்தனையோ பேர் கல்வியில் பெரிய பெரிய பரீட்சைகளில் தேறி, நிபுணர் என்று பெயர் பெற்றி ருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்குப் புரியாத விஷயங்களைப் பற்றியும் மகாத்மாஜி தெளிவாக இரண்டொரு வார்த்தை களில் எடுத்துரைப்பார். அதன் ரகசியம் என்னவென்று பல தடவைகளில் ஆலோசித்திருக்கிறேன். "எவனொருவன் தூய்மையுடையவனாகவும் சுயநலமில்லாதவனாகவும் இருக்கி றானோ அவன் மனத்தில் தெளிவு உண்டு" என்று நமது சாஸ்திரம் கூறுகிறது. உயர்ந்த தூய்மையே அறிவுக்கும் ஆற்றலுக்கும் அடிப்படையாக இருக்கின்றது. மகாத்மாஜி

யினுடைய உயர்ந்த தூய்மையும் தன்னலமற்ற வாழ்க்கையுமே எவ்விஷயத்திலும் அவருக்கு ஒளியைக் கொடுத்தன. தாய் நாட்டின் மேலுள்ள பக்தியும் நம் குழந்தைகளின் மேலிருந்த எல்லேயில்லா ஆர்வமுமே அவருடைய திட்டத்திற்கு அடிப்படையாக இருந்தன. ஆழ்ந்த தூய்மையும் பக்தியும் இருப்பவர்கள் எல்லேயற்ற அறிவும் சக்தியும் வாய்ந்தவர்களாக இருப்பார்கள். இவற்றிற்கு மகாத்மாஜியின் வாழ்க்கையே உதாரணமாக விளங்கியது.

கல்வி அமைச்சஞக இருந்து, அவருடைய பெரிய திட்டத்தை இம்மாகாணத்தில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டிய பாக்கியம் எனக்குக் கிடைக்குமென்று அப்பொழுது நான் நினைக்கவில்லே. அவ்வப்போது இந்துஸ்தானி தாலிமி சங்கத்தில் அவர் சொன்ன வார்த்தைகளும் அவரைத் தனியாகச் சந்திக்கும்போது அவர் கூறிய உபதேசங்களுமே என்னுடைய இப்போதைய வேலேக்கு வழிகாட்டிகளாக இருக்கின்றனவென்பதைச் சொல்லத் தேவையில்லே.

# 15. கொட்டும் மழையில்

நாலிமி சங்கத்தின் தொடர்பு ஏற்பட்ட பிறகு மகாத்மாஜியுடன் அதிகமாக நெருங்கிப் பழகிப் பேசக் கூடிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அதில் அங்கத்தினன் ஆனதிலிருந்து ஆண்டுதோறும் வார்தாவுக்குச் சென்று மகாத்மாஜியைச் சந்திப்பதை ஒரு யாத்திரையாக நான் வைத்துக்கொண்டேன். மத்தியச் சட்ட சபையில் அங்கத்தினனுக இருந்ததால் இதற்கு வசதியும் இருந்தது. மகாத்மாஜி 1930-ஆம் வருஷத்திற்குமுன் அலகாபாத்துக்கு அருகில் சபர்மதியில் ஓர் ஆசிரமம் ஏற்படுத்தி, அதில் வசித்துக்கொண்டிருந்தார் அல்லவா? 1930-ஆம் ஆண்டில் ஆரம்பித்த சுதந்திர இயக்கத்தைத் தொடங்குமுன் அவர் ஒரு சபதம் செய்துகொண்டார்; "சுதந்திரம் பெருமல் நான் இவ்வாசிரமத்திற்குத் திரும்பி வரமாட்டேன்" என்று அப்பொழுது தெரிவித்தார். எனவே, 1930-ஆம் வருஷத்தில் நடைபெற்ற உப்புச் சத்தியாக்கிரகத்திற்குப் பின் அவர் சபர்மதிக்குச் செல்லவேயில்லே. தாம் பல்லாண்டுகள் இருந்து சேவை செய்து வந்ததும், தமக்கு மிகப் பிரியமானதுமான அவ்வாசிரமத்தைத் துறந்து, வேறு பல இடங்களில் வசித்து வந்தார்; சில ஆண்டுகள் வார்தாவிலும் தங்கியிருந்தார். வார்தா இந்தியாவுக்கு மத்தியில் இருப்பதால், அவர் அங்கிருக்கும்போது அவரை இந்தியா முழுவதிலிருந்தும் மக்கள் வந்து பார்ப்பதற்கு ஒரு வகையில் வசதியாகவும் இருந்தது. வார்தா ஒரு பெரிய ரெயில்வே ஜங்ஷன். டில்லியிலிருந்து சென்னேக்குப் போகும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்ப்ரஸ் வார்தா மூலந்தான் செல்லுகிறது. பம்பாயிலிருந்து கல்கத்தா போகிறவர்களுக்கும் வார்தாவின் மூலம் போக வசதியுண்டு. எனவே, வார்தா ஒருவகையில் இந்தியாவின் மத்தியாக இருத்தது. மகாத்மாஜி அங்கு வந்து தங்கியது, அதை எல்லா விதத்திலும் இந்தியாவின் மத்திய ஸ்தானமாகச்

செய்தது! டில்லி போகும் வழியில் இருந்ததால், வார்தாவுக்குச் செல்வது எனக்கும் சுலபமாக இருந்தது, வருஷத்திற்கு ஒரு தரமாவது டில்லிக்குச் செல்லும்போதோ டில்லியிலிருந்து திரும்பும்போதோ வார்தாவில் இறங்கி, ஓரிரண்டு தினங்கள் அங்கே தங்கி மகாத்மாஜியைத் தரிசித்துப் பேசிவிட்டு வருவேன்.

வார்தா ஒரு முனிசிபாலிடி. அதை மிகப் பெரிய நகரமென்று சொல்ல முடியாது. 30, 40 ஆயிரம் பேர் கொண்ட பெரிய ஊர் அது. மகாத்மாஜிக்கு இவ்வளவு பெரிய ஊரில் இருப்பது பிடிக்கவில்லை. இந்தியா கிராமங்கள் மிகுந்த தேசம். இந்திய மக்கள் அநேகமாகக் கிராமங்களில்தான் வசித்து வருகிறார்கள். நகரங்களிலிருக்கும் வசதிகளை அநுசரித்துப் பணம் படைத்த மக்கள் நகரத்துக்கு வந்துகொண்டிருந்தார்கள். அதனால் கிராமங்கள் வலிமை இழந்து, களையிழந்து இருந்தன. கிராம மக்களுக்காக உழைத்து, அவர்களை மேன்மை அடையச் செய்வதே இந்தியாவின் புனருத்தாரணத்திற்கு அடிப்படை யென்று மகாத்மாஜி அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார். தாமும் மிகப் பிற்போக்கான ஒரு கிராமத்தில் வசித்து, கிராம முன்னேற்றத்திற்கு அவசியமான சேவைகளை ஆரம்பிக்க வேண்டுமென அவர் மனத்தில் தோன்றியது. எனவே, வார்தாவுக்கு அருகில் ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்தார். அது மிகச் சிறிய கிராமம். அதற்கு அப்பொழுது 'சேகான்' என்ற பெயர் இருந்தது. அங்கே பெரிய வீடுகள் இல்லை. அந்தக் கிராமத்திற்கு ரஸ்தா இல்லை. மின்சாரம் இல்லை. நாகரிகமான நகரங்களில் இருக்கக்கூடிய வசதி ஏதும் அங்கு இல்லை எனச் சொல்லலாம். அங்ஙனம் வசதிகள் ஏதுமில்லாமல் இருந்த அக்கிராமம், அக்காரணத்திற்காகவே மகாத்மாஜியின் மனத்தில் வசீகரத்தை உண்டாக்கியது. ஏனென்றால், அதை இந்தியாவின் கிராமங்களுக்கு உதாரணமென அவர் கொண்டார். தாம் அங்கு இருந்துகொண்டு, தம் சேவையை ஆரம்பிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்து, ஒரு சிறிய குடிசையைக் கட்டிக்கொண்டு அங்கு வசிக்க ஆரம்பித்தார். அது முதல்

'சேகான்' என்ற அக் கிராமத்தின் பெயர் 'சேவாக் கிராமம்' என்று மாறியது.

"ராமன் இருக்கும் இடம் அயோத்தி" என்ற பழமொழி யொன்று உண்டு! ராமன் காட்டிற்குச் சென்றபோது, அயோத்தி மக்களெல்லாம் தங்கள் நகரத்தை விட்டுவிட்டு, ராமனுடன் இருக்க விரும்பி, காட்டிற்கு ராமனுடனேயே சென்றார்களாம். அந்தக் காடு, அதன் மூலம் பெரிய நகரமாகி அயோத்தி போலவே விளங்கிற்றும். இது கதை. ஆனால், மகாத்மாஜியின் வாழ்க்கையில் அதன் உண்மையைக் கண்டோம், மத்திய மாகாணம் எதற்கும் அவ்வளவு பெயர் பெற்ற மாகாணம் அல்ல. வார்தா என்ற நகரத்தை இதற்குமுன் எவரும் கேள்விப்பட்டிருக்க மாட்டார்கள். அப்படியிருக்க, வார்தாவுக்கருகில் இருக்கும் சேவாக்கிராமம் என்ற குக்கிராமத்தை யார் கேள்விப் பட்டிருக்கப் போகிறார்கள்? அப்படி முன் பின் எவரும் அறியாத ஒரு கிராமம். மகாத்மாஜி சென்றதும் உலக முழுதும் பிரபலமாயிற்று. இந்தியா முழுவதிலிருந்தும் பெரிய மனிதர்கள் அனைவரும் அங்கே செல்லத் தொடங்கினர்கள். அகில இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டங்கள் அங்கே நடைபெற்றன. அன்றியும், உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் இந்தியாவைப் பார்க்க வரும் யாத்திரிகர்கள் மகாத்மா காந்தியைப் பார்க்காமல் இந்தியாவைப் பார்ப்பது பூரணமாகாது என்பதை உணர்ந்திருந்தார்கள். அவர்களும் வார்தாவுக்குச் சென்று சேவாக்கிராமத்தை அடைந்தார்கள். இவ்வாறு, இந்தியாவிலுள்ள 40 கோடி மக்களின் கண்களெல்லாம் சேவாக்கிராமத்தின்மேல் இருந்தன. அவர்கள் சிந்தனையனைத்தும் சேவாக்கிராமத்திலிருக்கும் அப் பெரியாரின் வார்த்தைகளை எதிர்நோக்கி நின்றன. எனவே, சேவாக் கிராமம் இந்தியாவின் இருதயமாயிற்று.

அக்காலத்தில் மத்தியச் சட்டசபைக் கூட்டங்கள் ஜனவரி மாதத்திலிருந்து ஏப்ரல் மாதம்வரை டில்லியிலும், ஆகஸ்டு முதல் அல்லது இர்ண்டாவது வாரத்தில் ஆரம்பித்து,

செப்டம்பர் 3 அல்லது 4-ஆவது வாரம் வரை சிம்லாவிலும் நடப்பது வழக்கம். 1938-ஆம் வருஷம் என்று நினைக்கிறேன்; அவ்வாண்டு ஆகஸ்டு மாதச் சட்ட சபைக் கூட்டத்துக்குச் செல்லும்போது மகாத்மாஜியைப் பார்க்க விரும்பினேன். அக்காலத்தில் கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் சுமார் காலை 7—45 மணிக்குச் சென்னையிலிருந்து புறப்பட்டு, அடுத்த நாள் காலை 7 மணி அளவுக்கு வார்தா சென்றுகொண்டிருந்தது அன்றிரவு முழுவதும் மழை ஓயாமல் பெய்துகொண்டிருந்தது. வார்தாவில் இறங்கியபோது எங்கும் ஒரே வெள்ளமாக இருந்தது. அப்பொழுது சேவாக்கிராமத்திற்கு ரஸ்தா இல்லை. சேவாக்கிராமத்தைச் சுற்றிலும்—ஏன்? வார்தாகூட—கரிசல் மண்ணுகத்தான் இருந்தது. கரிசல் நிலத்தில் மழை பெய்தால் அது எங்ஙனம் இருக்குமென்று அதில் பழக்கம் இருப்பவர்கள் ஊகித்துத் தெரிந்துகொள்வார்கள். ரோடு போடுவதாக இருந்தாலுங்கூட ஓர் ஆண்டில் அந்த மண்ணில் போட முடியாது. மண் இளகி ரஸ்தாவுக்காகப் பரப்பும் கற்களை விழுங்கிவிடும். அதற்குமேல் மீண்டும் மீண்டும் இரண்டு தடவைகளாவது கல் போட வேண்டியிருக்கும். அதன் இயல்பு அங்ஙனம் இருக்குமானுல், ரஸ்தாவே போடாமல் இருக்கும் போது எவ்வளவு சகதியாக இருக்கும்? வேறு வாகன வசதிகளோ இல்லை. நடக்க வேண்டுமானுல் முழங்கால்வரை மண்ணுக்குள் செல்லும். இந்த நிலைமையைக் கண்டதும் என் மனத்தில் மயக்கம் உண்டாயிற்று.

ஸ்ரீ அரியநாயகம் அவர்கள் என்னை அழைத்துச் செல்ல ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். அவர் என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்ருர். அவர் வீடு மகாராஷ்டிர வித்தியாலயத்தின் ஒரு பகுதியில் இருந்தது. 'இந்த நிலையில் எப்படிச் சேவாக்கிராமம் செல்ல முடியும்? செல்ல முடியாதே!' என்று ஏங்கிக்கொண்டிருந்த சமயம், ஜன்னல் வழியே வெளியே எட்டிப் பார்த்தேன். யாரோ இரண்டு பேர்கள் அந்தக்கொட்டும் மழையில் ஒரு குடையைப் பிடித்துக்கொண்டுசேவாக் கிராமத்திக்கிலிருந்து வார்தா நோக்கி வந்துகொண்டிருந்த

மாதிரி இருந்தது. வருகிறவர்களை உற்றுக் கவனித்தேன். அவ்விருவர்களுல் ஒருவர் வயோதிகராக இருந்தார். இந்த மழையில் யார் வரப் போகிருர்களென்று மீண்டும் கவனித்தபோது அது மகாத்மாஜியோ என்ற சந்தேகம் தோன்றிற்று. ஸ்ரீ அரியநாயகம் அவர்களை அழைத்து, "அதோ வருகிறவர் யார்? மகாத்மாஜியா?" என்று கேட்டேன். அவர் பார்த்தவுடனே "ஆம், அது மகாத்மாஜிதான். இங்கு மகன்வாடியில் ஓர் ஊழியர் நோய்வாய்ப்பட்டு, உடல்நலம் கெட்டுப் படுக்கையில் இருக்கிருர். அவர் மகாத்மாஜியைப் பார்த்துக் கொஞ்ச நாளாயின. அதனுல், நோயாளிக்கு அவரை மீண்டும் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் இருந்தது. அதை மகாத்மாஜிக்குத் தெரிவித்தார்கள். அந்த நோயாளியைப் பார்ப்பதற்காகவே மகாத்மாஜி இன்று காலை யில் மழையில் வந்திருக்கிருர்" என்று சொன்னுர்.

இச் செய்தியைக் கேட்டு நான் அயர்ந்து போனேன். மகாத்மாஜிக்கு ஊழியர்கள் பேரிலிருந்த அன்பு என் மனத் தைக் கொள்ளை கொண்டது ஒருபுறம். இச் சகதியில் அவரைப் போன்ற முதியவர்கள் ஆறு மைல் நடந்து வந்திருந்தபோது, என்னைப் போன்ற இளைஞர்கள் இதைக் கண்டு கலங்குவது மிகுந்த அவமானத்தையும் உண்டுபண்ணிற்று. இதிலிருந்து ஒரு தைரியம் பிறந்தது. எப்படியும் நடந்து சென்று மகாத்மாஜியைத் தரிசித்து வருவதெனத் தீர்மானம் செய்து கொண்டேன். குளித்துவிட்டு, வழிகாட்டியாக ஒரு நண்பரை உடன் அழைத்துக்கொண்டு, அச்சேற்றில் நடந்து புறப்பட் டேன். நான் உணவு கொண்டு புறப்பட மத்தியான்னம் ஆகிவிட்டது. அங்கே சென்றபோது மகாத்மாஜி வார்தாவி லிருந்து எனக்கு முன்னமேயே திரும்பியிருந்தார். வழக்கம் போல் புன்சிரிப்புடன், "வா, வா, அவிநாசி" என்று வரவேற் ருர். ஆறு மைல்கள் மழையிலும் சகதியிலும் நடந்து வந்த கஷ்டம் அப் புன்சிரிப்பில் மறைந்தது அவ்வன்பையும் புன் சிரிப்பையும்பெற எத்தகைய கஷ்டத்தைத்தான் மேற்கொள்ளக் கூடாது?

அன்றைக்கு என்ன விஷயங்களைப்பற்றிப் பேசினோ மென்று இப்பொழுது ஞாபகம் இல்லை. ஆனுல் அவரிடம் பேசும் விஷயங்கள் முக்கியமானவை அல்ல. அவர் நமக்குக் காட்டும் அன்பும், அதன் மூலம் நம் மனத்தில் உண்டாகும் உணர்ச்சியும் மன எழுச்சியுமே முக்கியமானவையாகும். ஒவ்வொரு தரமும் அவரிடம் சென்று பேசும்போது உயர்ந்த லட்சியங்களைப் பின்பற்றும் வலிமை நம் மனத்தில் உண்டாகிறது. உயர்ந்த காரியங்களில் நம்பிக்கை பிறக்கின்றது. சோர்வு இருந்தால், அது அகலுகின்றது. துவேஷமிருந்தால் அது மறைகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக நாமும் உயர்ந்த காரியங்களைச் செய்து சாதிக்க முடியுமென்ற மகிழ்ச்சியும் என்ணங்களும் தைரியமும் உண்டாகின்றன. அதுதான் பெரியோர்களிடம் இருக்கும் சக்தி. அது நம்மையும் அறியாது நம் மனத்தை உயர்த்துகின்றது போலும்!



# 16. வேகும் வெயிலில்

கம்ப ராமாயனத்தில் தாடகை வதைப் படலத்தில் பாலைவனத்தை வருணிக்கும் பாட்டு ஒன்று இருக்கிறது. அது பின்வருமாறு :—

“படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகரும்நா
முடியவேம், முடியமூடு இருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வேம் மழையும்வேம் மின்னிநெடு]
இடியும்வேம் என்னில் வேறு யாவைவே வாதவே.’’

அதன் பொருள் பின்வருமாறு :—

‘அந்தப் பாலை நிலத்தில் உள்ள வெப்பத்தைப்பற்றிச் சொன்னால், சொல்லும் நாக்கு முழுவதும் அடியோடு வெந்து போகும். அந்த வெப்பத்தால், அந்த நிலத்தை முழுவதும் மூடிய இருளும் ஆகாய முகடும் வெந்துவிடும். விடியுமானால், அந்நிலத்தின் மேல் எறிக்கும் வெயிலும் வெந்துவிடும். அந்நிலத்துக்கு மேலாக வந்தால் மேகம் வேகும். அந்நிலத்தில் மின்னும் மின்னலும், இடிக்கும் இடியும் வெந்துவிடும் என்றால், வெந்து விடாத பொருள்கள்தாம் யாவை இருக்கின்றன?’

நம் ஊரில் இருப்பவர்களுக்கு இந்த வருணனை மிகைபடக் கூறியதாகத் தோன்றும். ஆனால். வட இந்தியாவில் கோடைக் காலத்தைக் கழித்தவர்கள் அங்ஙனம் நினைக்க மாட்டார்கள். அங்கே வெயில் பல சமயங்களில் 120 டிகிரி 124 டிகிரி வரைகூடப் போவதுண்டு. வெயிலால் பலர் மடிவதும் உண்டு. அக்காலத்தில் வீசும் அனல் காற்று நெருப்புப் போல் தோன்றும். அத்தகைய ஒரு நாளில்தான் நான் ஒரு தடவை மகாத்மாஜியைக் காணச் சென்றேன்.

வட இந்தியாவில் கோடைக் காலத்தில் சுமார் நாலரை மணிக்கே விடிந்துவிடும். சுமார் 7-30 அல்லது 8 மணிக்குத் தான் இருட்டும். நாள் முழுதும் ஒரே நெருப்பாக இருக்கும். வெளியில் மைதானத்தைப் பார்ப்பதே கண்ணுக்குக் கடுமை யாக இருக்கும். நம் ஊரிலிருந்து செல்பவர்கள் அந்த வெயிலைத் தாங்குவது கடினம். அவ்வூரிலேயே இருப்பவர்கள் கூட நாளில் பெரும்பாகத்தை வீட்டுக்குள்ளேயே கழிப்பார்கள். தண்ணீர் தெளித்த விளாமிச்சை வேர்த் தட்டிகளைக் கொண்டு வாயில்களையும் ஜன்னல்களையும் மூடிக் கொள்வார்கள். அந்த வெயிலின் கொடுமையை அநுபவித்தவர்கள் மேற்கூறிய கம்பன் கவியின் கருத்தை உணருவார்கள். அந்த வெயிலை நினைத்தாலும் உண்மையிலே பயம் உண்டாகிறது.

டில்லியிலிருந்து ஏப்ரல் கடைசியில் சென்னைக்குத் திரும் பிக்கொண்டிருந்தேன். மகாத்மாஜியைக் காண வேண்டு மென்ற ஆவல் அப்போது உண்டாயிற்று. வார்தாவில் இறங்கினேன். ஸ்ரீ அரியநாயகம் அவர்கள் இல்லத்திற்குச் சென்று குளித்து உணவு அருந்திவிட்டு, சேவாக்கிராமத் திற்குப் புறப்படத் தயாரானேன். ஆனால், இந்தத் தடவை நடக்க வேண்டியிருக்கவில்லை. மகாத்மாஜி சேவாக்கிராமத்தில் தங்கியிருந்ததால், நாடு முழுவதிலிருந்தும் பிரமுகர்கள் பலர் அங்கே போகத் தலைப்பட்டார்கள். அதனால், அக்கிராமத்திற்கு ரஸ்தாபோட வேண்டுமென்று சர்க்காருக்குத் தோன்றிற்று. நான் சென்ற சமயம் ரஸ்தா போட்டு முடித்த காலமாக இருந்தது. ஆதலால் வண்டிகள் சென்றன. நானும் ஒரு டோங்கா-குதிரை வண்டியை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு சென்றேன். மத்தியான்னம் சுமார் 12 மணிக்குப் புறப்பட் டேன். வெயில் தலையைப் பிளந்தது. எங்கும் ஒரே வெப்பம். காற்று அனல் போலிருந்தது. மகாத்மாஜியைக் காண வேண்டு மென்ற ஆர்வமே என்னை இந்தக் கடுமையான வெயிலில் செல்லும்படி தூண்டியதென்று சொல்லவேண்டும். சேவாக் கிராமம் போய்ச் சேரச் சுமார் ஒரு மணி ஆகியிருக்கும். அங்கே சென்றவுடன் மகாத்மாஜியின் குடிசைக்குச் சென்று

என் வரவைத் தெரிவித்தேன். கொஞ்ச நேரத்தில் உள்ளே வரும்படி உத்தரவு வந்தது. உள்ளே சென்றதும் நான் பார்த்த காட்சி எனக்கு மிகவும் ஆச்சரியத்தை உண்டாக்கியது.

மகாத்மாஜி வசித்திருந்தது ஒரு மிகச் சிறிய வீடு. அக்காலத்தில் இன்றுபோல் சேவாக்கிராமம் அவ்வளவு பெரிதாக இருக்கவில்லை. மகாத்மாஜியும் அவரைச் சேர்ந்த சிலரும் இருப்பதற்குத்தான் வீடுகள் கட்டியிருந்தார்கள். பக்கத்தில் ஒரு வீட்டில் ஸ்ரீ அரியநாயகம் வசித்துக்கொண்டிருந்தார். மகாதேவ தேசாய் முதலிய சிலரும் சில வீடுகளில் இருந்து கொண்டிருந்தார்கள். அவ் வீடுகள் மண் சுவரால் கட்டப் பட்டிருந்தன. மேலே நாட்டு ஓடு போட்டு வேய்ந்திருந்தனர். பெரிய மரங்கள் போடாமல் மூங்கில் போட்டு அவை கட்டப் பட்டிருந்தன. உள்ளே பூச்செல்லாம் மண் பூச்சு. அடியில் சல்லி போட்டு, மேலே சாணம் பூசியிருந்தனர். வெயிலின் கொடுமை அந்த அறைக்குள்ளும் தெரிந்தது. அந்த அறை சுமார் 15 அல்லது 18 அடி சதுரம் இருக்கலாம். அறையின் ஒரு மூலையில் மகாத்மாஜி படுத்துக்கொண்டிருந்தார். கட்டிலில் அல்ல; தரையில்தான் படுக்கையை விரித்து அதன்மேல் படுத்துக்கொண்டிருந்தார். நான் உள்ளே நுழைந்ததும் வழக்கம்போல் அனைவரையும் கொள்ளை கொள்ளும் அந்தப் புன்சிரிப்புடன், ''வா, வா, அவிநாசி" என்று கூறி அழைத்து வரவேற்றார்.

நான் சென்று வணங்கிக் காலைத் தொட்டு நமஸ்கரித் தேன். உட்காரச் சொல்லி, "என்ன செய்தி?'' என்று விசாரித் தார். வணக்கம் செய்த பிறகு, அறையைச் சுற்றிலும் கவ னித்துக்கொண்டிருந்தேன். சுவரில் ஒரு பக்கம் ஒரு சர்க்கா போடப்பட்டிருந்தது. அறை முழுவதும் சுத்தமாக மெழுகிக் கூட்டப்பெற்றிருந்தது. அவர் அருகில் மீராபென்னும் இன் னும் ஒரிருவரும் உட்கார்ந்து, அவருக்கு உதவி செய்துகொண் டிருந்தனர். மகாத்மாஜி படுத்துக்கொண்டிருந்தபோது, அவர் வயிற்றின் பேரிலும் தலையின் மேலும் துணி போட்டு

மூடப்பட்டிருந்தது. அவை என்ன வென்று விசாரித்தேன். ஒருவேளை நோயுற்றிருக்கிருரோ என்ற எண்ணம் என் மனத்தில் வந்தது. கொஞ்சம் கவலையுடனேயே விசாரித்தேன்.

அதற்கு, வழக்கம்போல் ஒரு புன்னகை. "இதுதான் என்னைக் குளிர்ச்சி செய்யும் இயந்திரம்" (This is my air conditioning apparatus) என்று சிரித்துக்கொண்டே மகாத்மாஜி பதில் சொன்னார். "பணக்காரர்கள் தங்கள் வீடுகளில் இயந்திரத்தின் மூலம் குளிர்ச்சி (air condition) செய்துகொள்ளுகிறார்கள். அல்லவா? அதுபோல் நானும் செய்துகொண்டிருக்கிறேன். அவர்கள் மிகுந்த பொருள் செலவு செய்து, தங்கள் மாட மாளிகைகளைக் குளிர்ச்சி செய்துகொள்ள இயந்திரம் வேண்டும். ஆனால், தரித்திர நாராயணனுக்குப் பிரதிநிதியாக இருக்கும் நான் அவ்வளவு பணத்திற்கு எங்கே போவேன்? என் பொருளாதார நிலைக்கு ஏற்றவாறு நான் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. நான் என் அறையைக் குளிர்ச்சி செய்துகொள்ள முடியாது. ஆனால், இச் சிகிச்சைகளின் மூலம் எனக்குக் குளிர்ச்சி உண்டாக்கிககொள்ள முடியும்" என்று சொல்லித் தம் வயிற்றின் மேலிருந்த துணியை எடுத்துக் காண்பித்தார். உள்ளே களிமண் பற்றுப் போடப்பட்டிருந்தது. அது வயிறு முழுவதும் சுமார் கால் அங்குலக் கனத்தில் இருந்தது; மேல் ஒரு துணியும் போடப்பட்டிருந்தது. அவர் தலையில் ஒரு துணி முண்டாசு மாதிரி கட்டப்பட்டிருந்தது. அது உலராமல் இருக்கும் பொருட்டுத் தண்ணீரில் அதை அடிக்கடி நனைத்துப் போட்டார்கள். காலின் மேலும் ஒரு நனைந்த துணி போட்டிருந்தார்கள். "இவையெல்லாம் என் உடம்பைக் குளிர்ச்சி செய்யும் கருவிகள். இவற்றிற்குப் பணம் காசு தேவையில்லை. இந்த வெயில் கொடுமையிலும் இவைகளின் மூலம் நம் உடம்பைச் சௌகரியமாகவும், குளிர்ச்சியாகவும் காப்பாற்றிக்கொள்ள முடியும்" என்று சொல்லி அவர் வழக்கம் போல் சிரித்தார்.

பல ஆண்டுகளுக்கு முன் அவர் தண்டிக்கு நடந்து சென்றபோது நேர்ந்த விஷயம் ஒன்று அப்பொழுது எனக்கு

ஞாபகத்திற்கு வந்தது. அந்த 210 மைல்களும் நடந்து செல்வ தென்று மகாத்மாஜி தீர்மானம் செய்தார் அல்லவா? அப் பொழுதும் வெயிலின் கொடுமை அதிகமாக இருந்தது. அந்த வெயிலின் கொடுமையைச் சகித்துக்கொள்ள மகாத்மாஜி தலையின்மேல் களிமண் பற்றுப் போட்டு, அதன்மேல் ஈரத் துண்டைப் போட்டுக் கொண்டு இருந்தார். பம்பாயில் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகை அப்பொழுது தேசீயத்திற்கு விரோத மாகப் பிரசாரம் செய்துகொண்டிருந்ததை அனைவரும் அறி வார்கள். இந்த ஊரில் உள்ள 'மெயில்' பத்திரிகையைப்போல அது ஆங்கிலேயப் பத்திரிகையாய் இருந்துவந்தது. அந்தப் பத்திரிகைக்காரர்கள் ஓயாமல் மகாத்மாஜியின்மேல் வசைப் புராணம் பாடிக்கொண்டிருந்தார்கள்: "மகாத்மாஜிக்கு அறிவு கிடையாது; பெரு நோக்கம் கிடையாது. தண்டிக்கு உப் பெடுக்கச் செல்வது மடமை. நடந்து செல்வது அதைவிட மதியீனம். அவர் மண்டையில் மூளை இல்லை. களி மண்தான் இருக்கிறது" என்ற வாறெல்லாம் எழுதிக்கொண்டிருந்தார்கள். தண்டிப் பிரயாணத்தின்போது ஒரு நிருபர் வந்து, "தாங்கள் தலைமேல் என்ன போட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு மகாத்மாஜி தமக்கென இயல்பான நகைச்சுவையுடன் "மண்டைமேல் மண் பற்றுப் போட்டிருக்கிறேன். உள்ளும் வெளியேயும் ஒரேமாதிரிதான் இருக்கிறதோ என்னவோ! 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையைக் கேளுங்கள்'' என்று சொன்னார். அது இப்போது மறுபடியும் ஞாபகத்திற்கு வந்தது.

தமக்குச் சரியென்று தோன்றுவதைத் தாம் உடனே பின் பற்றுவதுதான் மகாத்மாஜியினுடைய தனிப்பட்ட பெருமை யாகும். மற்றவர்களை ஒரு காரியம் செய்யச் சொல்வதற்கு முன் தாமே அதை அநுஷ்டிப்பார். தாம் செய்யாத காரியங் களை மற்றவர்களுக்கு அவர் சொன்னதே இல்லை. தம் வாழ்க் கையில் பின்பற்ற முடியாத எதையும் அவர் மற்றவர்ளுக்கு உபதேசம் செய்யவே இல்லை. அதனால்தான் அவர் வார்த்தை களில் சக்தி இருந்தது. தாம் எழுதிய 'ஆரோக்கிய வழி'

என்ற புத்தகத்தில் பல விஷயங்களை அவர் குறித்திருப்பதை நேயர்கள் அறிவார்கள். பலருக்கு அவை புதுமையாகத் தோன்றலாம். சிலர் அவற்றை ஏளனம் செய்யலாம். 'இது முடிகிற காரியமா?' என்று சிலர் கேட்கலாம். ஆனால். அவர் அநுபவத்தில் காணாத எதையும் பிறருக்குச் சொன்னதில்லை யென்பது அவருடன் நெருங்கிப் பழகினவர்களுக்குத் தெரியும். அன்று நான் கண்ட காட்சி அந்த உண்மைக்கு ஒரு சான்றாக இருந்தது.

அன்று பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந் தோம். அப்பொழுது ஹரிஜன சேவையும் ஆதாரக் கல்வியுந் தான் அவர் மனத்தைக் கொள்ளை கொண்டிருந்தன. வருபவர் களிடமெல்லாம் அவைகளைப்பற்றியே விசேடமாகப் பேசுவார். ஹரிஜனங்களுக்கு எப்படி நன்றாகச் சேவை செய்ய முடியு மென்று கேட்டேன். அவர் இரண்டே வார்த்தைகளில் அதற்குப் பதில் சொன்னார்: "ஹரிஜன் போலிருந்து அவர்கள் மத்தியில் வாழ்ந்து, அவர்களை உயர்த்த வழி செய்வதுதான் உயர்ந்த பலன் அளிக்கும். நானும் இதுவரையில் நகரங்களில் இருந்து கிராம முன்னேற்றத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந் தேன். ஆனால், கிராம முன்னேற்றத்திற்காக உழைப்பவர்கள் முதலில் தாங்களே கிராமத்தில் வசித்துக் கிராம வாசிகள் இருப்பது போல் இருந்து அவர்கள் பிரச்னைகளை அறிந்து, அவைகளை நீக்க வழி தேட வேண்டும். அப்பொழுதுதான் கிராமத்தில் இருக்கும் பிரச்னைகளை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ள முடியும்; தெரிந்து அதற்கு வேண்டிய பரிகாரங்களைக் கண்டுபிடிக்கவும் முடியும். ஹரிஜனங்களுக்காக வேலை செய் வதும், கிராம மக்களுக்காக உழைப்பதும் வெறும் பேச்சினால் ஆகக்கூடியனவல்ல. இந்த லட்சியங்களை ஏற்று நடத்தும் வாழ்க்கையில்தான் அது இயலும். இளைஞர்கள் பலர் இந்த லட்சியங்களை,ஏற்க முன்வர வேண்டும்."

சுமார் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அப்பொழுது மகாத்மாஜியிடத்தில் அன்றைத் தபால்களைக்

கொண்டுவந்து வைத்தார்கள். அந்தத் தபால்கள் இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் வந்தவை. அவைகளுக்கு ஒவ்வொரு நாளும் பதில் எழுதுவதே பெரிய வேலையாக இருக்கும். ஆதலின், அவரிடம் விடை பெற்றுக்கொண்டு திரும்பினேன். டோங்காவில் வரும்போதும் அதற்குப் பிறகு பல தினங்களும் மகாத்மாஜி அக்குக்கிராமத்தில் அந்த வெயிலில் இருந்துகொண்டிருந்த நிலையைப்பற்றிய எண்ணங்கள் என் மனத்தில் வந்து கொண்டிருந்தன. அந்த வயசில் அக்கொடும் வெயிலில் அவர் ஏற்று நடத்திவந்த வாழ்க்கை என் மனத்துக்கு ஒரு புதிய ஒளியை உண்டாக்கியது. உலகம் முழுவதும் லட்சக்கணக்கான இளைஞர்களுக்கும், மற்றவர்களுக்கும் அவர் லட்சியமாக விளங்கும் காரணம் ஒருவாறு புலனாயிற்று. திருக்குறளில் ஓர் அழகான பாடல் உண்டு :

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.''

தீர்க்கதரிசிகள்தாம் அவ்விதம் செய்ய முடியும். அத்தகைய தீர்க்கதரிசியுடன் நாம் வாழ்கிறோமென்ற எண்ணம் என் மனத்துக்குப் பெருமையை அளித்தது. அவரைப் பின்பற்றுவதற்கு வேண்டிய தூய்மையையும், சக்தியையும் ஆண்டவன் நமக்கு அளிக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்தேன்.

# 17. எதிர் சாய்ந்தொழுகல்

மகாத்மாஜியுடன் பிரயாணம் செய்வது மிகவும் சிரமமான காரியம். அதுதான் என் அநுபவம். ஒரு தரம் வார்தாவுக்கு அவரைக் காணச் சென்றபோது அவர் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தார். நானும் அங்கேயே செல்ல வேண்டியிருந்தது. "என்னுடன் வருகிருயா?'' என்று கேட்டார். கரும்பு தின்னக் கூலியா? அவருடன் ஒருநாள் முழுவதும் ரெயிலில் ஒரே வண்டியில் இருக்கக்கூடிய சந்தர்ப்பம் கிடைப்பது அபூர்வம் அல்லவா? ஆகையால், மிகுந்த மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டேன்.

ரெயில், முதல் நாள் காலை புறப்பட்டு மறுதினம் காலையில் கல்கத்தா போய்ச் சேருகிறது. ரெயில் நிற்கும் இடங்களிலெல்லாம் பதினுயிரக்கணக்கான மக்கள் கூடியிருப்பார்கள். ஒரே 'மகாத்மா காந்திக்கு ஜே' முழக்கமாக இருக்கும். இதில் பகல், இரவு என்ற வித்தியாசமே இல்லை. மெயில் வண்டியாக இருந்தபோதிலும் மணிக்கு ஒருதரமாகிலும் நிற்கும். ஆதலின், நீண்ட தூக்கம் என்பது அசாத்தியமான காரியம். ரெயில் நின்றதும் மகாத்மாஜி எழுந்து, ஜன்னலைத் திறந்து தம் முகத்தைக் காட்டிக் கையை நீட்டி, 'ஹரிஜன் கே லியே' என்று பிச்சை எடுக்க ஆரம்பித்துவிடுவார். காலணுக்கள், அரையணுக்கள், நான்கு அணு, எட்டு அணு, ஒரு ரூபாய்க் காசுகள் ஐந்து ரூபாய், பத்து ரூபாய், அதற்கு அதிகமான நோட்டுக்கள் வந்து குவியும். சில இளைஞர்கள் தாங்கள் அணிந்திருந்த நகைகளையும் கழற்றி அளிப்பது உண்டு. இவைகளை அவ்வப்போது அருகிலிருக்கும் எங்களில் ஒருவரிடம் கொடுப்பார். அடுத்த ஸ்டேஷன் வருவதற்குள்ளாக அவைகளை எண்ணிக் கணக்கிட்டு அவரிடம் கொடுக்க வேண்டும். இவையெல்லாம் முதலில் கொஞ்ச நேரம் உற்சாகமாகவே இருந்தன.

மத்தியான்னம் வந்தது. உணவு உண்ண வழக்கம்போல் வழியில் ரெயில்வே ஸ்டேஷன்களில் இருந்த உணவு விடுதிகளை எதிர்பார்த்தோம். ஆனால் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் பதினாயிரக்கணக்கான மக்களின் கூட்டம் எங்கள் வண்டிகளின் கதவுகளைத் திறக்கவொட்டாமல் அடைத்துக்கொண்டிருந்தது. இரண்டு பக்கங்களிலும் அப்படியே; வண்டியை விட்டு இறங்கவும் முடியாது. ஒரு வேளை மிகுந்த சிரமத்துடன் இறங்கிப் போக முடிந்தாலும், பின்னால் மக்கள் அலை மூடிக்கொள்வது போல் மூடிக்கொள்வார்கள். அக்கூட்டத்தைக் கடந்து மறுபடியும் மகாத்மாஜியின் வண்டியைப் பிடிப்பது அசாத்தியமான காரியம்.

அன்று மத்தியான்னம் முழுவதும் பதினாயிரக்கணக்கான மக்களையும், அவர்களுக்கு மகாத்மாஜியின் பேரிலிருந்த பக்தியின் பெருக்கையும் கண்டோம். ஆனால் உணவு மாத்திரம் கிடைக்கவில்லை. கடைசியாக, ரெயில்வே அதிகாரிகளிடம் சொல்லி, மிகுந்த சிரமத்தின் பேரில் அன்றிரவு கொஞ்சம் உணவுக்கு ஏற்பாடு செய்ய முடிந்தது. 'மகாத்மாஜியுடன் யாத்திரை செய்பவர்களும், அவருக்குச் சேவை செய்கிறவர்களும் அதிருஷ்டசாலிகள். அவர்களுக்கு எல்லாவிதமான வசதிகளும் உண்டு' என்று சிலர் நினைப்பது உண்டு. அவர்கள் அதிருஷ்டசாலிகள்தாம்; மகாத்மாஜியின் அருகிலிருந்து அவர் சொல் கேட்டு நடக்கச் சந்தர்ப்பம் கிடைப்பது தவம் செய்து பெற வேண்டியதொன்று என்பதை யாரும் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். ஆனால், அது சுலபமான காரியம் என்று நினைப்பது தவறாகும்.

மகாத்மாஜியின் வாழ்க்கைத் திட்டம் மிகவும் கடினமானது. ஆயிரக்கணக்கான மக்கள் அவரை எப்போதும் சூழ்ந்திருப்பார்கள். பதினாயிரக்கணக்கான கண்கள் அவரை எப்போதும் பார்த்துக்கொண்டிருக்கும். தமக்கென்று தனி நேரமே அவருக்குக் கிடைக்காது. உண்பது, உறங்குவது, படிப்பது, பேசுவது,

பிரார்த்தனை அனைத்தும் பகிரங்கமாகவே நடைபெறும். அவர் செய்யும் ஒவ்வொரு சிறு காரியத்தையும், அவர் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் லட்சக்கணக்கான மக்கள் பத்திரிகை வாயிலாகப் பார்த்துக் கவனித்துக்கொண்டிருந்தனர். எனவே அவர் வாழ்க்கையில் ரகசியம் என்பதே இல்லை. "என் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகம்'' (My life is an open book) என்று அவர் அடிக்கடி சொல்லுவார். யாதொரு குற்றங் குறைக்கும் இடங் கொடாமல், உயர்ந்த லட்சியங்களை இடைவிடாமல் ஒவ்வொரு கணமும் பின்பற்றுகிறவர்கள் தாம் இத்தகைய வாழ்க்கையை நடத்த முடியும். இத்தகைய உயர்ந்த குறிக்கோள்களை ஏற்றுத் தம் வாழ்க்கையை அவர் நடத்தி வந்தார். எனினும், அவரையும் திட்டுகின்றவர்கள், அவதூறு பேசுபவர்கள் இல்லாமல் போகவில்லை. மகாராஷ்டிரத்தில் அவரைப்பற்றி அவதூறுகச் சில பத்திரிகைகள் எழுதியிருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், வங்காளத்தில்தான் மகாத்மாஜியை எதிர்த்து நேருக்கு நேர் வசவு வார்த்தைகளைக் கூவியதை நேரில் கண்டேன்.

அச்சமயம் காந்தி சேவா சங்கக் கூட்டம் மாலிக்கந்தாவில் நடப்பதற்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. காந்தி சேவா சங்கம் என்பது காந்தி அடிகளின் கொள்கைகளைத் தங்கள் வாழ்க்கையில் ஏற்று நடத்துகிறவர்களின் சங்கமாகும். அதற்கு முந்திய ஆண்டு அது பீகார் மாகாணத்தில் பிருந்தாவனம் என்னும் ஊரில் வெகு விமரிசையாக நடந்தேறியது. மாலிக்கந்தா கிழக்கு வங்காளத்தில் உள்ள ஓர் அழகான கிராமம். பத்மா என்ற பிரம்மாண்டமான நதி வங்காளத்தின் மத்தியில் கம்பீரமாகச் சென்றுகொண்டிருக்கிறது. அதன் இரு கரைகளிலும் வங்காளத்தின் பெயர்பெற்ற வளமான வயல்களும், அவற்றின் மத்தியில் பல கிராமங்களும் காணப்படுகின்றன. அக்கிராமங்களில் மாலிக்கந்தா ஒன்று. பத்மாவில் சில பாகங்களில் பெரிய முதலைகளும் காணப்படும். இம்முதலைகளினல் பல தடவைகளில் கால்நடைகளுக்கும் மக்களுக்கும் அதிகச் சேதம் ஆவதும் உண்டு.

இப்படிச் சேதம் செய்துகொண்டிருந்த ஒரு முதலையைப் பற்றி அங்கே சுவாரஸ்யமான கதையொன்று சொன்னார்கள். கதையென்றால் கட்டுக் கதை அல்ல. உண்மையாக நடை பெற்றது. ஓர் இடத்தில் ஒரு முதலை மிகுந்த அட்டகாசம் செய்துகொண்டிருந்தது. ஆற்றின் கரையில் தண்ணீர் குடிக்க வரும் கால்நடைகளையும் அது அடித்து இழுத்துக்கொண்டு போய்விடும். அதனால், மக்களுக்கு ஏற்பட்ட துன்பம் கொஞ்ச நஞ்சமில்லை. அதைக் கொல்லப் பலவாருகப் பிரயத்தனப் பட்டார்கள். இப் பிரயத்தனங்களில் ஏதும் பலிக்கவில்லை. முதலை இச் சூழ்ச்சிகளுக்கு அகப்படாத அவ்வளவு தந்திர முள்ளதாக இருந்தது. ஒரு கிழவி அந்த நதிக் கரையில் வசித்துக்கொண்டிருந்தாள். ஒரு நாள் அவள் ஜீவனத்துக்கு ஆதாரமாக இருந்த ஒரே பசுவையும் அம் முதலை இழுத்துக் கொண்டு போய்விட்டது. அந்தத் தாய் ஆருத் துயரத்தில் ஆழ்ந்தாள்; கிராமத்திலிருக்கும் மற்றவர்களை இந்த ஆபத்தி னின்றும் காப்பாற்ற வேண்டுமென்று ஆழ்ந்து யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தாள். கசாப்புக் கடைக்காரனிடம் சென்று ஒரு நல்ல ஆட்டுத் தோலைத் தலை, கண் முதலியவைகளுடன் வாங்கி வந்தாள். அதன் வயிறு, உடம்பு முதலிய இடங்களில் சுண்ணும்புக் கற்களை நிரப்பித் தைத்தாள். தைத்த அந்த ஆட்டை ஆற்றங்கரையில் கொண்டு போய் முன் இரண்டு கால்களும் தண்ணீரில் இருக்கும்படியாக வைத்துவிட்டுத் தூரத்திலிருந்து கவனிக்கலானாள். அவள் எதிர் பார்த்தது வீணாகவில்லை. முதலை எங்கோ இருந்து வேகமாக வந்து, அந்த ஆட்டை ஒரேயடியாக இழுத்துச் சென்று, கவ்வி விழுங் கியது. ஆட்டின் வயிற்றில் நிரம்பியிருந்த சுண்ணும்புக் கற் களும் உள்ளே சென்றன. அத்துடன் பத்மா நதியின் நீரும் உள்ளே சென்றது. சுண்ணும்பும் நீரும் கலந்தால் என்ன ஆகும்? உடனே வேக்காடு ஆரம்பித்து. முதலையின் குடல் எரிய ஆரம்பித்தது. முதலை அந்த அவஸ்தையைப் பொறுக்க மாட்டாமல் மீண்டும் மீண்டும் நீரைக் குடித்தது. அந்நீர் சுண்ணும்புடன் கலக்கக் கலக்க அதிக வேக்காடு உண்டாயிற்று.

இத்துன்பம் சகிக்கமுடியாமல் முதலை மேலும் கீழும் சென்று தன் உட்புறம் முழுவதும் வெந்து இறந்துவிட்டது. அந்தத் தாயின் சூழ்ச்சியால் சுற்றுப்புற மக்கள் யாவரும் பெரிய விபத்தினின்றும் காப்பாற்றப்பட்டனர். இதுவே அம் மக்களின் புத்தி நுட்பத்திற்கு ஓர் அறிகுறியாக இருந்தது.

மாலிக்கந்தா பத்மா நதிக்கு அக்கரையில் இருந்தது. அங்கே செல்ல விரும்புகிறவர்கள், ஆற்றைக் கடந்து செல்ல வேண்டும். பத்மா நதியின் அகலம் சுமார் இரண்டு மைல் இருக்கலாம். தவிர, அந்நதி அடிக்கடி தன்னுடைய பாதையை மாற்றிக்கொண்டிருந்ததால் அதற்குப் பாலம் கட்ட முடிய வில்லை. எனவே, கல்கத்தாவிலிருந்து செல்லுகிறவர்கள் ஆற்றுக்கு இக்கரையிலேயே ரெயிலை விட்டு இறங்கி, அதற்குமேல் ஆற்றைக் கடக்க நீராவிக் கப்பலில் செல்ல வேண்டியிருந்தது. ரெயிலை விட்டு இறங்கியதும் தயாராக இருந்த கப்பலில் ஏறினோம். கப்பல் முழுவதும் அநேகமாய்க் காந்தி சேவா சங்கக் கூட்டத்திற்குச் செல்பவர்களாயிருந்தார்கள். இமயத்திலிருந்து கன்னியாகுமரிவரை இந்தியா முழுவதிலிருந்தும் வந்திருந்தார்கள். தமிழ் நாட்டிலிருந்து சர்தார் வேதரத்தினம் பிள்ளை, மதுரை நா. ம. ரா. சுப்பராமன் முதலியவர்களும் நானும் போயிருந்தோம். அங்கிருந்தவர்கள் நாட்டின் பல வேறு பாகங்களிலிருந்து வந்தவர்கள்; பல மொழிகளைப் பேசுகிறவர்கள். ஆயினும் எல்லோர் மனத்திலும் ஒரேவிதமான எண்ணம் நிறைந்திருந்தது. காந்தி சேவாசங்கக் கூட்டத்தில் மகாத்மா காந்தியுடன் சேர்ந்து அடுத்த சில தினங்கள் தங்கும் பேறு பெறுவோம் என்ற கருத்து அனைவர் மனத்திலும் ஆழ்ந்திருந்தது.

ஆனால், கப்பலிலிருந்து இறங்கியதும், மாலிக்கந்தாவில் நாங்கள் பார்த்த காட்சியும், கேட்ட சொற்களும் எங்கள் மனத்தில் வருத்தத்தையும் கோபத்தையும் உண்டுபண்ணின. பதினாயிரக்கணக்கான மக்கள் மகாத்மாஜியின் தரிசனத்தைப்

பெறக் காத்துக்கொண்டிருந்தார்கள். அதற்கு விரோமாக ஒரு சிறு கூட்டத்தார் மகாத்மாஜிக்கு எதிராகக் கோஷமிட்டுக் கூட்டத்தின் அமைதியைக் கலைத்துக்கொண்டிருந்தனர். இப்படி அவர்கள் கோஷமிட்டது ஒருதரமல்ல. மகாத்மாஜி மாலிக்கந்தா வில் இருந்த எல்லாத் தினங்களிலும் பல தடவைகள் செய்து வந்தார்கள். பிரார்த்தனை சமயத்தில் கூட இங்ஙனம் செய்து, பிரார்த்தனை சரியாக நடக்கவொட்டாமல் தடுக்க முயற்சி செய்தார்கள். அவர்கள் போட்ட சத்தத்தில், 'காந்தி திரும்பிப் போ', 'காந்தி ஒழிக' என்பன போன்ற வார்த்தைகளும் இருந்தன. இப்படிச் சத்தம் செய்வதுடன் மாத்திரம் அவர்கள் நிற்கவில்லை. மகாநாட்டுப் பந்தலுக்குத் தீ வைக்கவும் முனைந்தனர். இத் துஷ்டர்களிடமிருந்து பாதுகாப்பதற்காகவே மகாநாட்டு நிர்வாகிகள் சுமார் நூற்றைம்பது தொண்டர்களை அமர்த்திப் பந்தலை அல்லும் பகலும் காவல் புரிய ஏற்பாடு செய்ய வேண்டி இருந்தது. இக்காரியங்கள் மக்கள் மனத்தில் பெருங் கொதிப்பை உண்டாக்கின. லட்சக்கணக்கான மக்கள் மகாத்மாஜியைத் தெய்வமெனப் போற்றிக்கொண்டிருக்க, சிலர் இவ்விதம் குழப்பத்தை உண்டாக்கியது எல்லோர் மனத்திலும் கோபத்தை உண்டுபண்ணியது. மகாத்மாஜி மாத்திரம் அங்கு இல்லாமலிருந்தால் அச்சிறு கூட்டத்தாரை ஒரு நொடியில் விரட்டி இருப்பார்கள்.

இதைப்பற்றி மகாத்மாஜி என்ன நினைத்தார் என்பதுதான் குறிப்பிடத்தக்கது. அவர் மனத்தில் ஒரு துளி அளவும் கோபம் உண்டாகவில்லை. தம்மை அவதூறு பேசியவர்கள் பேரில் அவருக்குச் சிறிதும் குரோதம் உண்டாகவில்லை. அதற்குப் பதிலாகத் தம்மைத் தாமே சோதனை செய்துகொண் டார். அவர் பல தடவைகளிலும் சொன்னதாவது: "நீங்கள் சிறிதேனும் அவர்கள் பேரில் கோபம் கொள்ளலாகாது. உங்கள் பொறுமையைச் சோதிக்க வந்த பரீட்சையாக நீங்கள் இதைக் கொள்ளவேண்டும். நம் மனத்தை நாமே சோதனை செய்து அதிலிருக்கும் வெறுப்பு, பகை போன்ற மாசுகளை அறவே அகற்ற இதைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்."

இவ்வாறு அவர் உபதேசித்தது, அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்கள் உள்ளத்திலிருந்த கோபத்தைத் துடைத்து பொறுமையை உண்டாக்கியது. மகாத்மாஜியின் பொறுமையும் சகிப்புத் தன்மையும் அனைவருக்கும் ஆச்சரியத்தை உண்டு பண்ணின. எனக்கு வள்ளுவர் திருக்குறள் ஒன்று ஞாபகத் திற்கு வந்தது.

"இகலெதிர் சாய்ந்துஒழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர்."

# 18. காந்தி சேவா சங்கம்

காந்தி சேவா சங்கம் கூடிய இடம் வெகு அழகாக இருந்தது. பத்மா நதி மிகவும் அழகாகவும் கம்பீரமாகவும் அருகில் ஓடிக்கொண்டிருக்க, கொஞ்ச தூரத்தில் மாலிக்கந்தா கிராமம், சோலேகளின் மத்தியில் திகழ்ந்துகொண்டிருந்தது. இவ்விரண்டிற்கும் நடுவே, நூற்றுக்கணக்கான சிறு குடிசைகள் போடப்பட்டிருந்தன. அக்குடிசைகளில் மகாநாட்டிற்கு வந்தவர்களுக்கு இருக்கை முதலியன ஏற்பாடு செய்திருந்தார்கள். மத்தியில் ஒரு பெரிய மண்டபம் போன்ற பந்தல். அதில்தான் சங்கத்தின் கூட்டங்கள் நடைபெற்றன. ஓரிடத்தில் சற்றுப் பெரியதாக ஒரு குடிசை தென்பட்டது. அதில் மகாத்மாஜியும் அவருடன் வந்திருந்த மகாதேவ தேசாய் முதலியவர்களும் தங்கியிருந்தார்கள். சர்தார் வல்லபபாய் படேல் முதலியவர்களுக்கும் அருகிலேயே இடம் இருந்தது. மற்றொரு பக்கம் உணவு விடுதி தென்பட்டது. சுருங்கச் சொல்லுமிடத்து, எல்லா விதமான வசதிகளுடனும் அழகான சிறிய கிராமம் ஒன்று அங்கு எழும்பியிருந்தது.

இதை உண்டாக்கியவர்களைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லாமல் இருக்க முடியாது. வங்காள மாகாணம் தியாகத்திற்கும் சேவைக்கும் பெயர் பெற்றது. தற்கால இந்தியா தனது ஆத்மிகச் செல்வத்தை மீண்டும் பெற்றது, வங்காளத்தில் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் மூலந்தான். தற்கால இந்தியாவைத் தட்டி எழுப்பி ஆண்மையூட்டியவரும், அந்நாட்டில் தோன்றிய விவேகானந்த சுவாமிகளேயாவார். இந்தியாவில் சமூகச் சீர்திருத்தத்தை முதல்முதல் ஆரம்பித்தவர் ராஜா ராம்மோகன் ராய். இந்தியாவின் தேசீய கவியாக விளங்கியவர் ரவீந்திரநாத் தாகுர். இவர்களும் வங்காளத்தில் தோன்றியவர்களே. எனவே, தேசீய உணர்ச்சியும் தியாக புத்தியும் அந்நாட்டில் வலுத்திருந்தன. எண்ணற்ற இளைஞர்கள் நாட்டிற்காகத் தங்கள் சுக வாழ்வைத் துறந்து, பலாத்காரத்

திலும் புரட்சி இயக்கத்திலும் ஈடுபட்டிருந்தார்கள். பலர் தூக்கு மேடைக்கும் சென்றனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அடக்கு முறை அனைத்தும் அதை அடக்க முடியவில்லை. அவர்களை அன்புவழிக்குத் திருப்பிய பெருமை மகாத்மாஜியையே சாரும். மகாத்மாஜி தோன்றிய பிறகு ஆயிரக்கணக்கான இளைஞர்கள்-ஆண்களும் பெண்களும்–பலாத்கார மார்க்கத்தை விட்டு மகாத்மாஜியின் அன்பு உபதேசத்தைக் கடைப்பிடித்துச் சேவை செய்ய முன் வந்தார்கள். அவர்களின் அன்பும் சிரத்தையுமே மாலிக்கந்தாவில் நடந்த காந்தி சேவா சங்கத்தின் அடிப்படையாக இருந்தன.

இவ்வூழியர்களில் முக்கியமானவர் டாக்டர் பிரபுல்லகோஷ். டாக்டர் பிரபுல்ல கோஷைப்பற்றித் தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள். அவர் மகாத்மாஜியின் அத்தியந்த சிஷ்யர்களில் ஒருவர்; சுமார் கால் நூற்றாண்டாகத் தேசீய சேவையில் ஈடுபட்டுப் பலதடவைகள் சிறை சென்றவர்; தூய்மையான பிரமசரிய விரதத்தைக் கடைப்பிடித்து வந்தார். பல ஆண்டுகள் அகில இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டியில் இருந்து பின்னால் மேற்கு வங்காள சர்க்காரின் பிரதம மந்திரியாகவும் சேவை செய்தவர். அவர் இளமையிலிருந்தே தியாக வாழ்வில் ஈடுபட்டார். சர்வகலாசாலையில் டாக்டர் பட்டம் பெற்று வெளி வந்ததும் சுமார் ரூ 500/-சம்பளத்தில் சர்க்காரின் நாணய அச்சு யந்திரச்சாலையில் (Mint) உத்தியோகம் ஏற்றிருந்ததை உதறித் தள்ளிவிட்டுத் தேச சேவையில் ஈடுபட்டனர். அவருடைய உணர்ச்சியும் தியாகமும் மற்றவர்களையும் அவ்விதம் செய்யத் தூண்டின. அவருடன் வேலை செய்து வந்த இளைஞர்கள் பலர் அங்கே எங்களுக்குப் பழக்கமாயினர். பலர் சர்வ கலாசாலைகளில் உயர்ந்த பட்டம் பெற்றவர்கள். சிலர் மேல் படிப்புக்காக மேனாடுகளுக்குச் சென்று வந்தவர்கள். அவர்கள், அவர் ஆசிரமத்தில் பெற்று வந்த ஊதியத்தைக் கேட்க எங்களுக்கு மிகவும் வியப்பாக இருந்தது; மாதம் ரூ. 25/-பெற்று, எளிய வாழ்க்கை மேற்கொண்டு, அல்லும் பகலும் உழைத்து வந்தனர்.

சமையல் பகுதி முழுவதையும் பெண்களே நிர்வகித்து வந்தனர். அங்கே தலைமை தாங்கி வேலை செய்து வந்த லாவணியலதா தேவியைப்பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. சாந்தமே உருவெடுத்தாற்போலிருந்த அந்த அம்மணி, படபடப்பின்றி, ஆத்திரமின்றி, ஆரவாமின்றிக் காலையிலிருந்து மாலைவரை எல்லோருக்கும் வேண்டியவற்றைக் கவனித்த விதம் பேராச்சரியமாக இருந்தது. அப்பெருமாட்டிக்கு உதவியாக இன்னும் பல சகோதரிகள் மிகுந்த அன்புடனும் பக்தியுடனும் வேலை செய்து வந்தார்கள். அதற்குப் பின் லாவணியலதா தேவியைப் பல தடவைகள் சந்தித்திருக்கிறேன். இப்போது வயது சுமார் அறுபது இருக்கலாம். சமீபத்தில் வித்தியாலயத்தில் நடந்த ஆதாரக் கல்வி மாநாட்டிற்கு அவர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் ஊரும், தேசமும் இப்போது கிழக்குப் பாகிஸ்தானுக்குச் சேர்ந்துவிட்டன. நாடிழந்து, ஊரிழந்து, பல இன்னல்களுக்கு ஆளான பிறகு, இவ்வயதிலும் அவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் வேலை செய்து வருவது மிகவும் பாராட்ட வேண்டிய விஷயமாகும்.

மகாத்மாஜியின்பால் உள்ள பக்தியிலும் தேசீய சேவையிலும் பல ஆண்டுகள் ஆழ்ந்து ஈடுபட்ட அநேகர் காந்தி சேவா சங்கக் கூட்டத்திற்கு வத்திருந்தனர். அவர்கள் நாட்டின் பல பாகங்களைச் சேர்ந்தவர்கள்; பல மொழிகளைப் பேசுகிறவர்கள்; பல துறைகளில் பணியாற்றுபவர்கள். நாட்டின் பேரிலும், நம் நாட்டின் ஒப்பற்ற தலைவரான மகாத்மாஜியின் பேரிலும் இருந்த இணையற்ற பக்தி அவர்களை இறுகப் பிணைத்தது. ஸ்ரீ கிஷோரிலால் மஷ்ருவாலா, ஜாஜுஜி, குஜராத்திலிருந்து நானுபாய், ஒரிஸ்ஸாவிலிருந்து கோப பந்து சௌதுரி, மகாராஷ்டிரத்திலிருந்து சங்ரேராவ் தேவ், ஆந்திரத்திலிருந்து ஜி. சீதாராம சாஸ்திரி முதலியோர் வந்தனர். தமிழ் நாட்டிலிருந்து சர்தார் வேதரத்தினம், மதுரை நா. ம. ரா. சுப்பராமன் முதலியவர்களும் நானும் சென்றிருந்தோம்.

அங்கு இருந்த மூன்று தினங்களும் சிறந்த முறையில் கழிந்தன. அதிகாலையில் நான்கு மணிக்கு மகாத்மாஜியின்

தலைமையில் பிரார்த்தனை நடக்கும். பிரார்த்தனைக்குப் பிறகு காலைக் கடன்களும் சிற்றுண்டியும் முடிந்த பிறகு மகாநாட்டின் பிற நடவடிக்கைகள் ஆரம்பமாகும். ஒவ்வொரு நாளும் தேக உழைப்பிற்காகக் கொஞ்ச நேரம் ஒதுக்கிவைப்பது காந்தி சேவா சங்கக் கூட்ட நடவடிக்கையின் ஒரு முக்கியமான அம்சமாகும். இதற்கு முன் பிருந்தாவனத்தில் நடந்த மகாநாட்டின்போது மண் தோண்டி ரஸ்தா போட்டார்கள். இத்துடன் நூற்பு யக்ஞமும் நடைபெற்றது. ஆனால் மாலிக் கந்தாவில் எல்லோரும் மேற்கொள்ளக்கூடிய வேறு வேலைகள் இல்லாததால், நூற்பு யக்ஞமே இரண்டுமணி நேரத்திற்கு நடந்தது. எல்லோரும் குறிப்பிட்ட நேரத்தில் தங்கள் ராட்டையைத் தயார் செய்து எண்ணெய் முதலியன போட்டுக் கதிர் முதலியவற்றைச் சரிப்படுத்திப் பட்டை போட்ட பஞ்சையும் தயாராகக் கையில் வைத்துக்கொண்டிருப்பார்கள். குறித்த நேரத்தில் மகாத்மாஜி மேடையின்மேல் தமக்கென அமைத்திருந்த ஆசனத்தில் வந்து அமருவார். அவர் உட்கார்ந்து, கடிகாரத்தைப் பார்த்து நூற்பு யக்ஞத்தை ஆரம்பிக்கவேண்டிய நேரத்தில் தமக்கு அருகில் வைத்திருக்கும் வெண்கலப் பாத்திரத்தில் மணி அடித்ததும், நூற்றல் ஆரம்பமாகும். நூற்பு யக்ஞம் நடக்கும்போது யாரும் பேசாமல் மௌனமாகத் தங்கள் வேலையைக் கவனிப்பார்கள். அப்போது பந்தல் முழுவதும் ஆழ்ந்த அமைதி நிலவுவது மனதிற்குச் சாந்தியும் இன்பமும் அளிக்கும். காந்தி சேவா சங்கக் கூட்டங்களில் இந்த நூற்பு யக்ஞமே குறிப்பிடத்தக்க அநுபவமாகும். நூற்பினால் மனதிற்குச் சமாதானமும் தூய்மையும் உண்டாகும் என்ற மகாத்மாஜியின் வாக்கின் பொருளை இத்தகைய யக்ஞத்தை அநுபவித்தவர்கள் நன்ருக உணர்வார்கள்.

மற்ற நேரம் முழுவதும் விவாதத்திலும், மகாத்மாஜியிடம் சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு செய்துகொள்வதிலும் செலவாகும். மாலிக்கந்தாவில் நடந்த கூட்டந்தான் காந்தி சேவா சங்கத்தின் கடைசிக் கூட்டமாகும். அக்கூட்டத்தில் தான் காந்தி சேவா சங்கம் கலைக்கப்பட வேண்டுமென்ற

தீர்மானம் நிறைவேறியது. மகாத்மாவின் புனித லட்சியங்களை இச்சங்கத்தின் மூலம் அறிந்து, பின்பற்றிவந்த இளைஞர்கள் இப்பிரேரணையைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். மகாத்மா தாம் ஆரம்பித்த சங்கத்தைத் தாமே ஏன் அழிக்க விரும்புகிறார் என்று ஒருவருக்கொருவர் கேட்டுக்கொண்டார்கள். இதைப் பற்றி மகாத்மாஜி பலதடவைகளில் பேசினர். "நிர்மாணத் திட்டத்தை நாடு முழுதும் பரப்புவதற்கும் மக்களுக்கு அதை எடுத்துச் சொல்வதற்மே காந்தி சேவா சங்கம் நிறுவப்பட்டது. இப்போது அதன் பல்வேறு அம்சங்களான தீண்டாமை விலக்கு, கதர், கிராமக் கைத்தொழில், ஆதாரக் கல்வி முதலிய வற்றைக் கவனிக்க ஹரிஜன சேவா சங்கம், சர்க்கா சங்கம் கிராமக் கைத்தொழில் அபிவிருத்திச் சங்கம், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் முதலியன இருக்கும்போது இனித் தனியாகக் காந்தி சேவா சங்கம் என்று ஒன்று இருக்கவேண்டிய அவசிய மில்லை" என்று எடுத்துக் காட்டினர். "இனிமேல் காந்தி சேவா சங்கம், அஹிம்சையையும் சத்தியத்தையும் பற்றிய உயர்ந்த ஆராய்ச்சி (Research) செய்யக்கூடிய சிலரைக் கொண்டதாகமட்டும் இருக்கவேண்டும்" என்று வற்புறுத்தினர். தவிர, நிர்மாணத் திட்டத்தில் ஈடுபட்டவர்கள் அரசியல் பூசலில் நுழையாமல் இருப்பது நல்லதென்றும் தெளிவு படுத்தினர்.

அவர் மீண்டும் சொன்னதாவது :- "சங்கத்தைக் கலைத்து நீங்கள் அதில் அங்கத்தினராக இல்லாமல் இருக்கலாம். எனினும், நீங்கள் ஒவ்வொருவரும் சங்க லட்சியத்தின் உயிருள்ள பிரதிநிதியாக இருக்கவேண்டும். நான் சபர்மதி ஆசிரமத்தைக் கலைத்தபோது அதன் அங்கத்தினர்கள் எங்கே சென்றபோதிலும் நடமாடும் ஆசிரமங்களாக இருக்கவேண்டு மென்று உரைத்தேன். அங்ஙனமே நீங்கள் ஒவ்வொருவரும் காந்தியத் தத்துவங்களுக்கு நடமாடும் பிரதிநிதிகளாக இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தத்தம் மனத்தை அலசிப்பார்த்து ஆழ்ந்து சிந்தியுங்கள். மரணம் நேர்ந்தபோதிலும் நீங்கள் மேற்கொண்ட லட்சியங்களைக் கைவிடாமல் இருக்கக்கூடிய

தூய்மையையும் சக்தியையும் ஆண்டவன் உங்களுக்கு அளிப்பாளுக!'' இவ்வார்த்தைகள் அங்கே கூடியிருந்த ஊழியர்கள் அனைவர் மனத்திலும் சோர்வை அகற்றி, ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுத்தன. எனினும், அதுதான் இந்தியா முழுவதிலிருந்தும் நிர்மாண ஊழியர்கள் கூடும் கடைசிக் கூட்டம் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் வருத்தத்தை உண்டாக்காமல் இருக்கவில்லை.

சங்கக் கூட்டங்கள் நடைபெற்ற மூன்று தினங்களும் மகாத்மாஜியின் முன்னிலையில் வெகு இன்பமாகக் கழிந்தன. மகாநாடு முடிவுற்றதும் எல்லோரும் தத்தம் ஊருக்குப் புறப்பட்டனர். நாங்கள் – சர்தார் வேதரத்தினம் பிள்ளை, நா. ம. ரா. சுப்பராமன், நான் ஆகிய மூவரும் - கிழக்கு வங்காளம், அஸ்ஸாம் மாகாணங்களிலுள்ள முக்கிய ஊர்களைப் பார்க்க இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினோம். நாராயணகஞ்சுக்குப் பத்மாவில் புகைக் கப்பலில் சென்றோம். இரு கரையிலும் அழகான காட்சிகள். பிரயாணம் வெகு ரம்மியமாக இருந்தது. நாராயணகஞ்சிலிருந்து சில்ஹட் (Sylhet) டுக்கும். அங்கிருந்து அஸ்ஸாமின் தலைநகரான ஷில்லாங் (Shillong) குக்கும் சென்றோம். அச்சமயம் சில்ஹட், அஸ்ஸாம் மாகாணத்தைச் சேர்ந்ததாக இருந்தது. இப்பொழுது அது கிழக்கு வங்காளத்துடன் சேர்ந்து, கிழக்கு பாக்கிஸ்தானில் இருக்கிறது. சில்ஹட்டில் ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த ஆசிரமம் இருக்கிறது. என்னுடன் மத்திய சட்டசபையில் அங்கத்தினர்களாக இருந்த ஸ்ரீ விரஜேந்திரநாத் சௌதுரியும் அப்துல் ரஷீத் சௌதுரியும் அவ்வூரைச் சேர்ந்தவர்கள். எனவே அங்கு இரண்டு மூன்று தினங்கள் இருந்து ஷில்லாங் குக்குப் புறப்பட்டோம்.

ஷில்லாங் மலைப்பிரதேசத்தில் உள்ளது. நம் ஊரில் உதகமண்டலம், கோடைக்கானல் மாதிரி கோடைக்காலத்திற்கு மக்கள் விரும்பிச் செல்லும் இடமாக இருந்தது. அஸ்ஸாம் மாகாணத்தின் தலைநகராகவும் அது இருந்ததால் பெரிய ஊராக விளங்கியது. அவ்வூர் சுமார் ஐயாயிரம் அடி

உயரத்தில் இமயமலைச் சாரலை அடுத்திருந்ததால் சுற்றிலும் பல அழகான காட்சிகள் தென்பட்டன. அங்கும் அவ்வூர் ராமகிருஷ்ண ஆசிரமத்தில்தான் தங்கியிருந்தோம். அங்கிருந்து சுமார் பத்து மைலில் சிரபுஞ்சி என்ற ஊர் இருக்கிறது. அங்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தார் மலை ஜாதியினர்க்கென உயர்தரப் பாடசாலை ஒன்றை நடத்தி வருகின்றனர். அந்தப் பள்ளியில் உழைத்துவந்த பிரம்மசாரிகள் மூவரும் தென்னிந்தியாவைச் சேர்ந்தவர்களாக இருந்ததைக் காணச் சந்தோஷமாக இருந்தது. இந்தியாவிலேயே அதிக மழை பெய்யும் இடம் சிரபுஞ்சி. வருஷத்திற்கு, சுமார் 900 அங்குலம் மழை அங்கே பெய்கிறது. மழை இல்லாத பிரதேசத்தில் இருக்கும் நாம் அவ்வளவு மழை பெய்யுமிடம் மிகச் செழிப்பாக, இருக்குமென்று நினைக்கலாம். ஆனால் உண்மை அதற்கு நேர்மாறாக இருந்தது. அவ்வளவு மழை பெய்யும் காரணத்தால் மண் அடித்துக்கொண்டு போகப்பட்டு, அது வெறும்மொட்டை மலையாகத் தென்பட்டது.

அங்கே முஸ்லீம் லீக் கட்சியாரின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த காலம் அது. என்னுடன் மத்தியச் சட்ட சபையில் அங்கத்தினர்களாக இருந்த ஸ்ரீ வசந்த குமார்தாஸ் அங்கே சட்டசபைத் தலைவராகவும், ஸ்ரீ அப்துல் மதீன் சௌதுரி ஒரு மந்திரியாகவும் இருந்தார்கள். தவிர அஸ்ஸாம் மாகாண சர்க்காரில் உத்தியோகம் பார்த்துவந்த தமிழ் நண்பர்கள் பலரும் எங்களை அன்புடன் வந்து பார்த்து உபசரித்தார்கள். ஸ்ரீ சுப்பராமன் அவர்கள் மதுரை நகரசபைத் தலைவராக இருந்தபோது, அவரின்கீழ் உத்தியோகம் பார்த்து வந்த டாக்டர் டி. கே. விஸ்வநாதன் அவர்கள் அங்கே சுகாதார உதவி டைரெக்டராக இருந்தார். அவரும் பிற தமிழ் நண்பர்களும் எங்களுக்கு எல்லாவற்றிலும் உதவியாக இருந்தனர். அங்கிருந்து கௌஹாட்டி (Gouhati) சென்ற போது அங்கே இந்தியா முழுவதும் புகழ்பெற்ற அஸ்ஸாம் பட்டு நிலையத்திற்கு ஸ்ரீ சுந்தரம் என்ற தென்னிந்தியர் தலைமை வகித்து நிர்வாகம் செய்துகொண்டிருந்ததைக் கண்டோம். கௌஹாட்டிக்கு அருகில் ஹரிஜன சேவா

சங்கத்தினர் மலைஜாதிகளினிடையே வேலை செய்துகொண்டிருந்தனர். அங்கும் எங்களுடன் சிறையிலிருந்த நண்பர் ஸ்ரீ கோசன்ன பண்டாரி, மலை ஜாதிப்பெண் ஒருத்தியை மணந்து, அவர்களுடன் ஒன்ருக இருந்து சேவை செய்துகொண்டிருந்தார் என்ற செய்தி எங்கள் மனத்தில் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கியது. கௌஹாட்டிக்கு அருகில் காமாக்ய (Kamakya) என்ற பெரிய சக்தி க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கும் சென்று தரிசனம் செய்து வந்தோம். அங்கே கோவில் ஒரு சிறு குன்றின்மேல் அமைந்திருக்கிறது. அங்கிருந்து தென்படும் அகன்ற பிரமபுத்திரா நதியுடன், அதற்கப்பால் இருக்கும் இமயமலைச் சிகரம் உலகிலேயே அபூர்வ அழகு மிகுந்த காட்சிகளில் ஒன்ருக விளங்குகின்றது. ஷில்லாங்கிலிருந்து கௌஹாட்டி செல்லுபவர்கள் பிரமபுத்திரா நதியைக் கடந்துதான் செல்லவேண்டும். அந்த நதிக்கும் பாலம் இல்லை. அந்நதியைக் கடந்து அக்கரை சென்று ரெயில் ஏறினேம். அஸ்ஸாம் மாகாணப் பிரயாணம் முழுவதும் ரோடில் கார் மூலந்தான் செய்யவேண்டி யிருந்தது. கௌஹாட்டியிலிருந்து நேராகக் கல்கத்தா சென்ருேம்.

மாலிக்கந்தாவில் காந்தி சேவா சங்கக் கூட்டம் நடந்து சுமார் பத்தாண்டுகள் கடந்துவிட்டன. ஆனல், இப்பொழுது அதைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் என் மனத்தில் மிகுந்த துக்கம் உண்டாகிறது. காரணம், அந்த ஊர் இப்போது நம் நாட்டைச் சேர்ந்ததில்லை என்பதே. அப்பிரதேசம் இந்தியாவிலிருந்து துண்டிக்கப்பட்டுக் கிழக்குப் பாக்கிஸ்தானமாக இருக்கிறது. அன்று அவ்வளவு அன்புடன் எங்களை உபசரித்த மக்கள், இன்று பிற நாட்டாராக, மற்றவர்கள் ஆதிக்கத்தில் அல்லல்பட்டு உழல்கிருர்கள். அவர்களும் நம்முடன் தோளோடு தோள் ஒன்றி நின்று மூவர்ணக்கொடி ஏந்தி, சுதந்திரப் போரில் ஈடுபட்டு எல்லாத் துன்பங்களையும் அநுபவித்தார்கள். ஆனல் இப்போதைய நிலைமையை நினைத்தால் மனம் வெதும்புகிறது. பல சமயங்களில் அதை நினைத்துக் கண்ணீர் வடித்திருக்கிறேன். சரித்திரத்தின் போக்கை யாரே அறிவார்கள்?

# 19. சாந்தி சைன்யம்

அன்பையும் சத்தியத்தையும் அடிப்படையாகக்கொண்ட ஒரு சமூகத்தை உண்டாக்க மகாத்மாஜி விரும்பினர். இப்போது உலகில் நிலவி வரும் சமூகத்தின் அமைப்பு, சுய நலத்தையும் பலாத்காரத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. தனி மனிதர்களும் சமூகங்களும் தங்களுடைய சுகத்தையும் சந்தோஷத்தையும் நாடுகின்றன. இங்ஙனம் நாடுவதில் மற்றவர்களுக்குக் கெடுதல் விளைவிப்பினும், அதை அவர்கள் பொருட்படுத்துவதில்லை. மற்றவர்களுக்குக் கெடுதல் உண்டாக்காமல் தாங்கள் பெருமையுடன் வாழமுடியாது என்றும் சிலர் கருதுகின்றனர் இந்த மனப்பான்மையால்தான் சுரண்டல் முறை ஏற்படுகிறது. இவர்கள் வலியவர்களாக இருந்தால், தங்கள் சுரண்டலை எதிர்ப்பவர்களைப் பலாத்காரம் செய்து, தங்களுக்கு உட்படும்படி செய்கிறார்கள்; தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ள உதவியாகச் சேனைகள், படைகள் முதலியவற்றை உண்டாக்குகிறார்கள். ஒரு தேசம் சேனைகளை அதிகமாக்குவதைப் பார்த்துத் தற்காப்புக்கென மற்ற நாடுகள் தங்கள் சேனைகளையும் பெருக்குகின்றன. அதிகமான சேனைகள் எல்லோரிடமும் இருக்கும்போது, அவை, தங்கள் பலத்தைப் பரீட்சை செய்ய யுத்தங்களை ஆரம்பிக்கின்றன. இதுதான் சென்ற பல்லாயிர வருஷங்களாக மனித ஜாதியின் சரித்திரமாக இருந்து வருகிறது. இத்தகைய சுய நலமும், சுரண்டலும், பலாத்காரமும் தேசங்களின் அடிப்படையாக இருக்கும்வரை அவைகளுக்கு எதிர்ப்பும் இருந்தே தீரும். அவை காரணமாக கோர யுத்தங்களும், லட்சக்கணக்கான மக்களின் மரணமும், துக்கமும் நேரும். ஒவ்வொரு யுத்தமும் முடிவில் தீரா வெறுப்புக்கு விதை போடுகிறது. இவ்வெறுப்பு மீண்டும் சண்டையை வளர்க்கிறது. நம் ஆயுளிலேயே இரண்டு உலக யுத்தங்களைக் கண்டோம். மூன்றாவது உலக

யுத்தத்தையும் காணும் நிலை வருமோ என்ற பயத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இம்முறை நிலவும்வரை, உலகில் தனிப் பட்ட நபர்களின் சமாதானமோ, மனித வர்க்கத்தின் அமைதியோ சாந்தியோ காணமுடியாது சமாதானம் இல்லா மல் எப்பொழுதும் பயத்தில் வாழும் மக்கள் எப்படிச் சந்தோஷ மாக இருக்க முடியும்?

மக்கள் பயமின்றிச் சந்தோஷமாய் வாழும் பொருட்டு, இந்த அடிப்படையை மாற்றி, அன்பையும் சத்தியத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு சமூகத்தை மகாத்மாஜி நிலை நாட்ட விரும்பினர். அதுவே அவருடைய லட்சியமாகும். அவர் செய்த காரியங்கள் அனைத்தும் அந்த நோக்கத்துடனேயே இருந்தன. இது சாத்தியமாவென்று பலர் அவரைக் கேட்டார் கள். “சில தனிப்பட்ட நபர்கள், சுய நலத்தைக் கைவிட்டு, உயர்ந்த லட்சியங்களைப் பின்பற்றும்படி செய்யலாம்; ஆனால், ஒரு சமூகம் அல்லது தேசம் முழுவதும் அவ்வாறு செய்ய முடியுமா?'' என்று அவர்கள் கேட்டார்கள். மனித சுபாவமே சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டது ; மகாத்மாஜியைப் போன்ற சில பெரியோர்கள் தவிர மற்றவர்கள் இந்நிலையை அடைவது அசாத்தியம் என்பது அவர்கள் கருத்து. “உலக சரித்திரத்தில் அவ்வப்போது புத்தர்பிரான், ஏசுநாதர் போன்ற பெரிய மகான்கள் தோன்றி, இதே செய்தியை உலகிற்கு அளித்திருக்கிறார்கள். ஆனால், தனி மனிதர்களை இவ்வுயர்ந்த லட்சியங்களைப் பின்பற்றும்படி அவர்கள் முயற்சி செய்தார்களே தவிர மனித வர்க்கத்தையே இம்மாதிரி செய்யும்படி அவர்கள் செய்யவில்லை. அத்தகைய மகாபுருஷர்கள் செய்ய இயலாததை மகாத்மாஜி எவ்விதம் சாதிக்க முடியும்?''—இங்ஙனம் நினைத்த அறிவாளிகள் பலர் இருந்தனர். மகாத்மாஜி இச்சந்தேகங் களைச் செவியுற்றார். இவைகளுக்கு அவர் கூறிய விடை மிகவும் அபூர்வமானது.

''நீங்கள் மனித வர்க்கத்தின் சரித்திரத்தைச் சரியாகக் கவனித்துப் படிக்கவில்லையென்றே நான் கருதுகிறேன்.

மனிதன் தோன்று தொட்டு வாழ்ந்து வந்த சரித்திரத்தை ஆராய்ந்தால், நமக்கு என்ன புலனுகிறது? மனிதன் படிப் படியாக அன்பையும் அஹிம்சையும் அடிப்படியாகக்கொண்டு வருகிருன் என்பதே புலனுகும். ஆதிகாலத்தில் மனிதன் மனிதனையே கொன்று தின்று வாழ்பவனுக இருந்தான்.

"கொஞ்ச காலத்திற்குப் பிறகு மனிதன் இது தவறென உணர்ந்து மற்ற மிருகங்களை வேட்டையாடி ஜீவித்தான். பிறகு மற்ற மிருகங்களைக் கொன்று வாழ்வதும் தாழ்வெனத் தோன்றவே, விவசாயத்தில் ஈடுபட்டான். விவசாயத்தில் ஈடு பட்ட பிறகு, அவன் ஊர் ஊராகச் சுற்றுவது நின்று, ஓர் இடத்தில் நிலையாக நிற்க நேர்ந்தது. அதனுல் கிராமங்களும் நகரங்களும் தோன்றி, ஒன்றுபட்ட வாழ்க்கையும் உண்டாகி, ஆட்சி முறையும் வகுக்கப்பட்டுச் சமாதானமாக வாழத் தலைப் பட்டான். அதற்குமேல் ஒருவருக்கொருவர் அடித்துக்கொள் வதும், சண்டை போட்டுக்கொள்வதும் குற்றம் என ஆயின. மற்றவர்களுடன் இணங்கிச் சமாதானமாக வாழ்வதே நாகரி கத்தின் சின்னமென்ற கொள்கை ஏற்பட்டது. இவைகளெல் லாம் மனிதன் அன்பையும் அஹிம்சையையும் படிப்படியாக மேற்கொண்டதற்கு அறிகுறிகள் அல்லவா? அப்படியானுல், இன்னும் அவன் இத்துறையில் முன்னேற்றமடைவதை ஏன் நீங்கள் அசாத்தியமென நினைக்கிறீர்கள்?" என்று மகாத்மாஜி அவர்களைத் திருப்பிக் கேட்டார்.

அவர் மீண்டும் சொன்னுர்: "இந்தப் பல ஆயிர வரு ஷங்களில் மனிதன் முன்னேறியிருப்பது பலாத்காரத்தின் மூலம் அல்ல என்பதைச் சரித்திரம் நிரூபிக்கிறது. மனித வர்க்கத்தின் முன்னேற்றத்திற்கு அவ்வப்போது அடிப்படை யாக இருந்தவை எவையென்று ஆராய்வோமானுல், அவை புத்தபிரான், ஏசுநாதர் போன்ற மகான்களின் வாழ்க்கையும் உபதேசங்களுமே என்பது புலனுகும். அவர்கள், அன்பையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையை நடத்தி, அத்தகைய வாழ்க்கையை மேற்கொள்ளும்படி

மக்களுக்கு அந்த அந்தக் காலங்களுக்கேற்ப உபதேசம் செய்து வந்தார்கள். அம் மகான்களின் வாழ்க்கைளும் தத்துவங் களுமே உலகை உயர்த்தியிருக்கின்றன. தவிர, தற்காலத்தில் நாம் மேற்கொள்ளும் சோஷலிஸம், கம்யூனிஸம், கூட்டுறவு முதலிய அனைத்தும் எல்லோருக்கும் சம சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக் கின்றன. நாம் தற்காலத்தில் நம் குழந்தைகளை நடத்தும் முறை, மனைவி மக்களுடன் பழகும் விதம், நோயாளிகளின் சிகிச்சை, கேவலம் கொடுங் குற்றம் செய்து சிறைக்கு அனுப்பப்பட்டவர்களையும் சீர்திருத்த முயற்சி செய்ய வேண்டு மென்ற கொள்கை முதலியன அனைத்தும், அன்பையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்டிருப்பதைக் காணலாம். மனிதனுடைய முன்னேற்றமும் நாகரிகமும் அவன் சமூகத்தின் உயர்வும், அவன் எவ்வளவு தூரம் இப் புனிதக் கொள்கைகளை ஏற்று நடக்கிறனோ அதைப் பொறுத் திருக்கின்றன. மனித வர்க்கத்தின் எதிர்காலமும், சிறப்பும், சந்தோஷமும், இன்பமும் அவன் இக் கொள்கைகளை இன்னும் பூரணமாகப் பின்பற்றுவதைப் பொறுத்திருக்கின்றன.''

அஹிம்சையைப்பற்றி அவர் மீண்டும் சொன்னார்: ''அஹிம்சையைப் பலவீனமானவனும் பயங்கொள்ளியும் பின் பற்ற முடியாது. பய்ந்து, அந்தப் பயத்தால் கெட்டதை எதிர்க்காமல் இருப்பவன் கோழை. கோழைத்தனத்தைவிடப் பலாத்காரம் மேலானது'' என்று மகாத்மாஜி பல தடவை களில் சொல்லியிருக்கிறார். ''நிறைந்த சக்தியுடன் இருந்து, அதற்குமேல் பொறுமையுடன் சகித்து, அஹிம்சையை மேற்கொள்பவன் தான் உண்மையில் அதை மேற்கொள்ளுபவ னுவான். புத்தர் ராஜ்யத்தைத் துறந்து, பிச்சை எடுத்து வாழ முன் வந்தது பெரிய துறவைக் குறிக்கும். ஆனால், ஒருவன் பிழைக்க வழியறியாது பிச்சையெடுப்பது இழிவின் சின்னமாகும். அதுபோல் பலவான்களுடைய பொறுமையே அஹிம்சையாகும். எனவே, முதலில் நம் சக்தியையும் பலத்தையும் பெருக்கவேண்டும். உயர்ந்த லட்சியங்களைப்

பின்பற்றி, தன்னம்பிக்கையைப் பெருக்கி, நாட்டில் நம்பிக்கை வைத்து தூய்மை வாழ்க்கை நடத்தி, நம் பலத்தை அதிகப் படுத்திக்கொள்வதே அஹிம்சை வாழ்க்கையின் ஆரம்பமாகும்.''

''இத்தகைய லட்சியங்களைப் பின்பற்ற என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டேன்.

அதற்கு மகாத்மாஜி சொன்னார்; ''எல்லா லட்சியங்களை யும் பரப்புவதற்காக அவைகளுக்கேற்பச் சங்கங்கள் நிறுவப் படுகின்றனவல்லவா? அங்ஙனமே இந்த அஹிம்சை லட்சியத் தைப் பரப்பவும், அதில் ஆர்வமுள்ளவர்கள் சேர்ந்து ஸ்தாப னங்கள் உண்டாக்கப்படல் வேண்டும். அவைகளுக்குச் சாந்தி சைன்யம் என்ற பெயர் கொடுக்க விரும்புகிறேன். சேவையில் ஆர்வமுள்ள தொண்டர் தாம் அவைகளில் அங்கத்தினர்களாக இருப்பார்கள். அத்தகைய தொண்டர் படைகள் நாடெங்கும் அமைக்கப்படல் வேண்டும்.''

''அத்தொண்டர் படை பிற தொண்டர் படைகள் போல் கவாத்துப் பழகலாமா?''

"கவாத்துப் பழகுவதில் தவறு ஏதும் இல்லை. ஒன்றாக நடப்பதும், ஒழுங்காக ஒருமித்துக் காரியங்கள் செய்வதும் எவருக்கும் நன்மை செய்யக்கூடியவை. ஆனால் அவர்கள் யாதோர் ஆயுதமும் தரிப்பதை நான் விரும்பமாட்டேன். அவர்களுக்கு அன்பும், சேவையும், பக்தியும், தூய்மையுமே ஆயுதமாக இருக்கவேண்டும்.''

''அவர்கள் தனி உடை தரிக்கலாமா?"

''தனி உடை வேண்டுமானால் தரிக்கட்டும். ஆனால், அது அவர்கள் லட்சியத்திற்கு ஏற்றதாக இருக்கவேண்டும். மற்றப் படைகள் அணிவது போன்ற படாடோபமான உடை அவர் களுக்கு ஒவ்வாது. முழங்காலுக்கு மேல் ஒரு வேஷ்டியும், உடலுக்கு ஒரு சட்டையும் தூய கதரில் இருந்தால், அதுவே பொருத்தமானதாக இருக்கும்.''

"அவர்களுக்குத் தனிப் பயிற்சி அளிக்க வேண்டு மல்லவா?''

''அவர்கள் சேவையே அவர்களுக்கு வேண்டிய பயிற்சியை அளிக்கும். அன்பு மார்க்கத்தில் உறுதியுடன் சுயநலமற்ற சேவையில் ஈடுபடுவார்களாஞல், அதுவே அவர்களுக்கு வேண்டிய பயிற்சியையும் அறிவையும் கொடுத்து, மேற்செல்ல வழிகாட்டியாகவும் இருக்கும்.''

அவர் மீண்டும் சொன்ஞர் : ''சாந்தி சைன்யத்தில் சேரு பவர்கள், அன்பு வாழ்க்கையிலும், சத்தியத்தைப் பிற்பற்றுவதி லும் அளவற்ற நம்பிகை உடையவர்களாக இருக்க வேண்டும் கடவுள் பக்தி இல்லாதவர்கள் இத்தகைய நம்பிக்கையைப் பெறுவது அசாத்தியம். ஆதலால், இவர்கள் இறைவனிடத் தில் நிறைந்த பக்தி உள்ளவர்களாக இருக்கவேண்டும். இவர்கள் எல்லா மதங்களிடமும் மரியாதையுடையவர்களாயும், எல்லா மதத்தைச் சேர்ந்தவர்களேயும் ஆதரிப்பவர்களாயும், அவர்களேச் சகோதரர்களாகப் பாவிப்பவர்களாயும் இருக்க வேண்டும். தினசரி வாழ்க்கையில் சேவையையே மேற்கொண்டு, அனேவருடைய அன்பையும், ஒத்துழைப்பையும் இவர்கள் பெற வேண்டும். இத்தகையவர்களுடைய ஒழுக்கமும் வாழ்க்கையும் மிகுந்த பரிசுத்தம் வாய்ந்தனவாக இருக்கவேண்டும். சமூகச் சண்டைகளோ சச்சரவுகளோ நேரும்போது, இவர்கள் சென்று, அவைகளைத் தடுக்க முன் வரவேண்டும். இப்படிச் செய்யும் போது சில சமயங்களில் இவர்கள் உயிருக்கே ஆபத்து நேரிடி னும் நேரலாம். எனினும் இவர்கள் தங்கள் லட்சியத்தில் நம்பிக்கை யுடையவர்களாய்த் தங்கள் கடமையைச் செய்துவர வேண்டும்.''

பேசப் பேச மகாத்மாஜியின் வார்த்தைகளின் வேகம் அதிகமாயிற்று. எப்பொழுதுமே அதிக ஒளியுள்ள அவர் கண்களின் பிரகாசம் இன்னும் அதிகமாயிற்று. அவர் பேசிய வார்த்தை ஒவ்வொன்றும் தெளிவாகவும், அமைதியுடனும், உறுதியுடனும், மிகுந்த சக்தியுடனும் வெளிவந்தது.

# 20. அடிப்படைச் சக்தி

*1940-ஆம்* வருஷம்; மாதம், தேதி, ஞாபகம் இல்லை. சேவாக்கிராமத்தில் மகாத்மாவைச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தேன். இந்தியா முழுவதும் மகாத்மாஜியின் ஆலோசனையை எதிர்பார்த்திருந்த காலம் அது. இரண்டாவது மகா யுத்தம் தொடங்கியாகிவிட்டது. இந்திய மக்களைக் கேட்காமல் இந்தியாவையும் யுத்தத்தில் ஆங்கிலேயர் ஈடுபடுத்திவிட்டனர். ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராட அதுதான் தருணம் என்று அனைவரும் நினைத்தனர். இப்போராட்டத்தை ஆரம்பிக்க, மகாத்மாஜியின் உத்தரவை மக்கள் எதிர்பார்த்தபடி இருந்தனர். லட்சக்கணக்கான இளைஞர்கள் போர் செய்யத் துடித்தனர். மகாத்மா சுண்டுவிரல் அசைத்திருந்தால் போதும். பதினாயிரக்கணக்கான இளைஞர்கள் தங்கள் உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்தனர்.

அச்சமயந்தான் மகாத்மாஜியிடம் சொன்னேன்; "மகாத்மாஜி, இந்திய மக்கள் அனைவரும் தங்கள் உத்தரவை எதிர்பார்த்தவண்ணம் இருக்கிறார்கள்.'' அதற்கு அவர் நிதானமாக, மெள்ள உரைத்த பதில் என்னை ஒரு கலக்குக் கலக்கிற்று. நான் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, அவர் பெருமைப்படவில்லை; தம் சக்தியை வியந்து ஆரவாரம் செய்யவில்லை; சந்தோஷங்கூடப் படவில்லை. அவர் முகத்தில் மிகுந்த கவலையும் பெரிய பாரத்தைத் தாங்கும் குறியும் தோன்றின, அவர் சொன்னார்: ''அவிநாசி, அதுதான் என் பெரிய துரதிருஷ்டமாக இருக்கிறது. லட்சக்கணக்கான இளைஞர்கள் என்னை நம்பி, எனக்காக எதுவும் செய்யத் தயாராக இருப்பதுதான் எனது தாங்க முடியாத சுமையாகும். ஆண்டவனிடத்தில் மாத்திரம் எனக்கு நம்பிக்கையில்லாமலிருந்தால், என்னால் அந்தச் சுமையைத் தாங்க முடியவே முடியாது. இறைவனிடம்

நான் கொண்டுள்ள நம்பிக்கையே எனக்கு அதைத் தாங்கச் சக்தியளிக்கிறது.'' (It is the tragedy of my life that lakhs of people take my merest wish as law. But for my trust in God, I cannot bear this huge burden). இந்த வார்த்தைகளில் எவ்வளவு உண்மை இருந்தது என்று எனக்கு அப்போது புலப்படவில்லை. நாட்கள் செல்லச் செல்லத்தான் இவை எவ்வளவு உண்மையானவை என்பதும், இவை மகாத்மாஜியின் மகத்தான வாழ்க்கையின் அடிப்படையை வெளிப்படுத்தின என்பதும் தெரிய வந்தன.

மகாத்மாஜியிடம் நான் முதலில் நெருங்கிப் பழகியது 1927-ஆம் ஆண்டில். அதிலிருந்து கடைசிவரை, பல இடங்களில், பல சந்தர்ப்பங்களில், பல நிலைகளில் அவரைச் சந்தித்திருக்கிறேன். இத்தனை வருஷங்களில் அவர் எத்தனையோ லட்சக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்திருக்க வேண்டும். பதினாயிரக்கணக்கான ஊர்களுக்குச் சென்றிருக்க வேண்டும் பதினாயிரக்கணக்கான கூட்டங்களில் பேசியிருக்க வேண்டும். வைசிராய் முதலியவர்களைப் பார்த்துப் பேசுவதிலிருந்து, ஏழைத் தொண்டர்களுக்குச் சிகிச்சை செய்வதுவரை, லட்சக்கணக்கான காரியங்களைச் செய்திருக்க வேண்டும். அவர் எதிர் நின்று விடுவித்த சிக்கலான அரசியல் பிரச்னைகள் அநேகம். அவர் ஆரம்பித்து நடத்திய புரட்சி இயக்கங்கள் பல. இவையனைத்திற்கும் மத்தியில் அவர் ஒன்றை மாத்திரம் மறந்தது இல்லை. உணவை மறந்திருப்பது அவருக்குப் பெரிய காரியம் அல்ல. உற்றார் உறவினரை விட்டிருப்பதும் அவருக்குச் சகஜம். உயிரைக் கூட அவர் திருணமாக நினைத்து வந்தார். ஆனால், கடவுளை வழிபடாமல் அவர் ஒரு நாளும் இருந்ததில்லை. ஒரு நாள்கூட அவ்வழிபாடு தவறியிராது. ரெயிலில், கப்பலில், கூட்டத்தில், தனிமையில் எங்கிருந்தாலும் அது மாத்திரம் தவறாது. 'உணவும் நீரும் இராமல் மனிதன் கொஞ்ச காலமாவது வாழ முடியும். ஆனால், பிரார்த்தனையின்றி மனிதன் வாழவே முடியாது' என்பது அவர்

முடிவு. எந்நிலையிலும், அவருடைய காலை மாலைப் பிரார்த்தனைகள் தவறா. பல கூட்டங்களில் பல லட்சக்கணக்கான மக்களுக்கு முன் பேசிவிட்டுச் சுமார் பன்னிரண்டு மணிக்குத் தான் தம் இருக்கைக்கு வருவார். அதற்குப் பிறகும், இருக்கும் அலுவல்களை முடித்துக்கொண்டு உறங்கச் செல்லச் சுமார் ஒரு மணி ஆகும், சில சமயங்களில் 'ஹரிஜனு'க்குக் கட்டுரை எழுத ஆரம்பித்துவிட்டால், சுமார் இரண்டு அல்லது மூன்று மணியாகும், உறங்கச் செல்வதற்கு. அப்படியிருந்தாலும், நான்கு மணியானதும் எழுவார். உடனே பிரார்த்தனை நடை பெறும். அவர் உடம்பு என்ன? கல்லோ! மரமோ! இத்தனை சிரமத்திலும் பிரார்த்தனை மட்டும் தவறாது. அதற்குப் பிறகு அவசியமானால் படுத்துக்கொள்வார். ஆனால், நான்கு மணிப் பிரார்த்தனை மாத்திரம் தவறியதே இல்லை.

அவர் பிரார்த்தனையில் மூன்று அம்சங்கள் உண்டு. ஒன்று, லட்சியத்தைப்பற்றிக் கூறுவது. இரண்டாவது அதை அடையும் முறை. மூன்றாவது, அதற்காக மேற்கொள்ளும் விரதங்கள். பிரார்த்தனை, பஜனைப் பாட்டுக்களுடன் ஆரம்பமாகும். அவருக்குப் பிரியமானவையும் அவர் முன்னிலையில் அதிகமாகப் பாடப்பெற்றவையுமான பாடல்கள் தொகுக்கப் பட்டு, ஆசிரம பஜனாவளி என்ற பெயரில் வழங்குகின்றன. அவை முக்கியமாக, ஹிந்தி, குஜராத்தி மொழிகளில் இருக்கின்றன. இப்பாடல்களைத் தவிர, தம் லட்சியத்தை அநுதினமும் ஞாபகப்படுத்திக் கொள்ளும் பொருட்டுக் கீதையிலிருந்து சில சுலோகங்களை அவர் சொல்லிவந்தார். அவர்மூலம் அந்தச் சுலோகங்கள் இந்தியாவின் மூலை முடுக்குகளிலும் தெரியவந்தன. அவரிடத்தில் ஆழ்ந்த பக்தியுள்ளவர்கள், அவற்றை அநுதினமும் பாராயணம் செய்து வந்தார்கள். அவை ஸ்ரீமத் பகவத் கீதையில் இரண்டாவது அதிகாரத்தில் 53-லிருந்து 72-வரை உள்ள சுலோகங்களாக இருக்கின்றன.

அந்தச் சுலோகங்களின் மொழிபெயர்ப்புப் பின் வருமாறு:

அர்ச்சுனன் கேட்கிறான்: கேசவா, ஞானம் நிலைத்துச் சமாதியில் நிற்பவனுடைய தன்மை என்ன? ஞானத்தில் நிலைத்தவன் (ஸ்தப்பிரஞ்ஞன்) எவ்வாறு பேசுவான்? எப்படி இருப்பான்? எவ்விதம் ஒழுகுவான்?

பகவான் கூறுகிறார்:— எவன் ஒருவன், மனத்திலுள்ள ஆசைகள் அனைத்தையும் தூரத் தள்ளி, ஆத்மாவிடத்திலேயே, ஆத்மாவினால் உள்மகிழ்ச்சி அடைகிறானோ அவனே ஸ்திதப் பிரஞ்ஞன் என்று சொல்லப்படுவான்:

துன்பத்தினால் பாதிக்கப்படாதவனாய், இன்பத்தில் விருப்பம் அற்றவனாய், ஆசை, பயம், கோபம் இல்லாதவனாய் இருப்பவனே ஞானம் நிலைபெற்றவன் என்று சொல்லப் படுவான்.

எவன் எல்லாவிடத்திலும் பற்றில்லாதவனாய், நன்மை தீமைகளை அடைந்தபோதிலும், சந்தோஷத்தால் பூரிக்காமலும், துக்கத்தால் பீடிக்கப்படாமலும் இருக்கிறானோ, அவனுடைய ஞானமே உறுதியாக நிலைபெற்றதாகும்.

ஆமை, தன் அங்கங்களை அடக்குவதுபோல் எந்த யோகி தன் இந்திரியங்களை, இந்திரிய விஷயங்களிலிருந்து எல்லா வகைகளிலும் உள்ளே இழுத்துக்கொள்கிறானோ, அவனுடைய ஞானமே உறுதியாக நிலைபெற்றதாகும்.

உணவை ஒழித்தவன் பொருள்களினின்றும் விடுபடுகிறான். ஆனால், அவன் மனத்தில் அவற்றை அநுபவிப்பதில் ஆசை இருக்கலாம். அவ்வாசையும் பரம்பொருளைக் கண்ட பின் அவனுக்கு ஒழிகிறது.

குந்தியின் மகனே, விடா முயற்சியும் அறிவும் உடைய மனிதனையும் கலங்கச் செய்து, இந்திரியங்கள் மனத்தைப் பலாத்காரமாக இழுத்துச் செல்லும் வன்மையுடையனவாக இருக்கின்றன.

நிலைபெற்ற மனத்தையுடையவன் அவை அனைத்தையும் செவ்வனே அடக்கி, என்னையே உயர்பொருளாகக் கருதி அமைதியோடு இருக்கவேண்டும் எவனுடைய இந்திரியங்கள் தன்வசப்பட்டனவோ அவனுடைய ஞானமே உறுதியானது.

விஷயப் பொருள்களை உற்று நினைக்கிறவனுக்கு அவற்றின்மேல் பற்று உண்டாகிறது. பற்றினின்றும் ஆசை தோன்றுகிறது. ஆசையினின்றும் கோபம் பிறக்கிறது. கோபத்திலிருந்து மோகம் உண்டாகிறது. மோகம் அவன் நல்ல நினைவுகளைக் கெடுக்கின்றது, நல்ல நினைவு கெட்டதனால் அறிவு அழிகிறது. அறிவு அழிந்தால், அவனும்முற்றும் அழிகிறான்.

ஆனால், விருப்பு வெறுப்பற்றுத் தன்வயமான இந்திரியங்களைப் பெற்றவன், பொருள்களை அநுபவித்தபோதிலும், அடக்கத்துடன், இருந்து உள்ளத்தெளிவு அடைகிறான். உள்ளத் தெளிவினால் அவனுடைய எல்லாத் துன்பங்களுக்கும் அழிவு ஏற்படுகின்றது. தெளிந்த மனமுடையவன், தடுமாற்றம் போய் நிலையான அறிவைப் பெறுகிறான்.

நிலைபெறாதவனுக்கு விவேகம் இராது. அவனுக்கு ஆன்ம சிந்தையும் இல்லை. ஆன்ம சிந்தை இல்லாதவன் மன அமைதி பெறமாட்டான். மன அமைதி அற்றவனுக்கு இன்பம் எங்ஙனம் உண்டாகும்?

ஏனெனில் அலைகின்ற இந்திரியங்களால் இழுத்துச் செல்லப்படுபவனுடைய மனம், நீரின் மேலுள்ள படகு காற்றால் அடித்துச் செல்லப்படுவதுபோலக் கவர்ந்து செலுத்தப்படுகிறது. எனவே, தோள்வலி படைத்தவனே, எவனுடைய இந்திரியங்கள். இந்திரிய விஷயங்களிலிருந்து முற்றும் அடக்கப்பெற்றனவோ, அவனுடைய ஞானமே நிலைபெற்றதாகும்.

எல்லாப் பிராணிகளுக்கும் எது இரவோ, அதில் மனம் அடங்கிய முனிவன் விழிப்புடையவனாக இருக்கிறான். எதில் பிராணிகள் விழிப்பு உடையவனவோ, அது உண்மையைக் காணும் முனிவனுக்கு இரவாம்.

எங்கும் நிரம்பியதும், நிலை குலையாததுமாகிய சமுத்திரத்தை நதிகள் அடைவதுபோல, ஆசைகள் எல்லாம் எவனை அடைகின்றனவோ, அவன் அமைதியை எய்துகிறான். ஆசைகளைத் தொடர்பவன் அமைதி எய்தான்..

எவன் எல்லா ஆசைகளையும் விட்டு, பற்றில்லாதவனாய், 'நான்', என்னுடையது என்பவை இல்லாதவனாய் வாழ்கின்றானோ அவனே அமைதியை எய்துகிறான்.

பார்த்தா, இதுவே பிரமம் தான் ஒன்றுபட்ட நிலையாகும். இந்த நிலையை அடைந்தவன், மோகத்தில் அழுந்தமாட்டான். இத்தகையவன் தன் அந்திய காலத்தில் பிரமத்துடன் கலந்து, போக்குவரவற்ற முக்தி நிலையை அடைகிறான்.

இந்த நிலையை அடைவதே மகாத்மாஜியின் லட்சியமாயிருந்தது. பற்றற்ற வாழ்வும், ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட கர்ம யோகமுமே அவர் பின்பற்றிவந்த உயர்ந்த நெறியாகும். இதைப் பின்பற்றுவதில் உதவியாயிருக்க அவர் ஏற்ற மந்திரம் ராம நாமமாகும். எனவே, பிரார்த்தனைகளில் ராம நாமத்தை இடைவிடாது உச்சரிப்பதும் அவர் பழக்கமாயிருந்தது. இரண்டு வேளைகளிலும் அவர் பிரார்த்தனைகளில் ராமநாம பஜனை நடைபெறும்.

'ரகுபதி ராகவ ராஜாராம்
பதித பாவன சீதாராம்'

என்பது அவருடைய பிரியமான பஜனை. ஆனால், ராமன் என்ற பெயரால் அவர் எந்தத் தனிப்பட்ட மனிதனையும் குறிப்பிடவில்லை; இறைவனையே அதன் மூலம் குறிப்பிட்டார். இறைவனுக்குப் பல பெயர்கள் உள. மக்கள் தங்களுக்குப் பிரியமான பெயர்களால் அழைத்து, அவ்வாறே ஈசுவரனை வழிபடுகிறார்கள் என்பது அவர் முடிவு. இந்து மதக் கோட்பாடுகளில் வழங்கிவரும் திருநாமங்களைத் தவிர, பிற மதங்களில் வழங்கப்பெற்ற பெயர்களையும் இறைவனுடைய நாமங்களாக

அவர் கொண்டார். இதை அறிவுறுத்துவதற்காகவே பிற் காலத்தில் அவர் பிரார்த்தனையில் பாடப்பெற்ற ராம நாம பஜனை கீழ்க்கண்டபடி இருந்தது:

'ரகுபதி ராகவ ராஜாராம்
பதித பாவன சீதாராம்
ஈஸ்வர அல்லா தேரே நாம்
சப்கோ சன்மதி தேபகவான்.'

இப்பாட்டு நாடு முழுவதும் இப்பொழுது பாடப்பட்டு வருவதை நேயர்கள் அறிவார்கள். ஆரம்பத்தில் ஈஸ்வர அல்லா தேரே நாம் என்ற அடிக்கு மிகுந்த எதிர்ப்பிருந்தது. ஆனால் மகாத்மாஜியின் தெளிந்த அறிவும் பரந்த நோக்கமும் இவ்வெதிர்ப்பை வென்று, இப்பாடல் நாடு முழுவதும் பரவச் செய்தன.

மனிதன், உயர்ந்த லட்சியங்களை அடைய இறைவன் நாமத்தை சொன்னால் மாத்திரம் போதாது, கட்டுப்பாடான வாழ்க்கையையும் விரதங்களையும் மேற்கொண்டு, அன்பு வாழ்க்கையை நடத்துவதே இதற்கு இன்றியமையாதது என் பதை மகாத்மாஜி உணர்ந்தார். எனவே, அவர் பிரார்த்தனை யின் கடைசியில், இதற்கு அவசியமான விரதங்களும் குறிப் பிடப்பட்டன. அவற்றைச் சொல்லும் சுலோகம் வருமாறு.—

'அஹிம்ஸா ஸத்யாம் அஸ்தேய
ப்ரம்மசரிய அஸங்க்ரஹ
சரீரஸ்சம அஸ்வாத
ஸர்வத்ர பயவர்ஜன
ஸர்வதர்மீ ஸமானத்வா
ஸ்வதேசி ஸ்பர்ச பாவன
ஹிம் ஏகாதா சேவாவிம்
நம்ரத்வே வ்ரத நிஸ்சயே.'

மகாத்மாஜிக்கு மிகவும் முக்கியமான, அவர் லட்சியத்தை நன்ருகத் தெளிவுபடுத்திய பாடல் ஒன்றுண்டு. அது தமிழில் அழகாக ஸ்ரீ சங்கு சுப்பிரமணியம் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. அது மகாத்மாஜியின் கருத்துக்களை மிக அழகாகச் சொல்லுவதால், அதை இங்குக் குறிப்பிடுவது அவசியமாகும்.

சொல்லுவம் வைஷ்ணவன் யாரெனக் கேளிர்
    சோர்ந்தவர் பிடையை அறிவானே
எல்லோர்தம் துக்கத்தைகளிப்பவனாயினும்
    எள்ளளவும் கர்வம் அடையானே— (சொ)
மன்னுயிர் மக்களை வந்தித்து நிற்பான்
    மாசறு நிந்தனை மொழியானே
சொல்மனம் உடலதில் சுத்தம தானவன்
    சோதியுற் றுன்பெற்ற தாய்மாரே— (சொ)
பாவப் பேராசையற்றுப் பார்வை சமத்துவமுற்று,
    பரஸ்திரியைத் தாயெனப் பணிவானே
நாவினுல் பொய்மொழி நவிலவும் மாட்டான்
    நாளும் பிறர்செல்வம் தீண்டானே (சொ)
மாயையும் மோகமும் மாயும் அவன்பால்
    மனத்தில் வைராக்கியம் உறுவானே
ஓயாமல் ராமனை உண்மை நினைந்திட
    உண்டு புண்ணியம் உடலதிலே (சொ)
காமமும் லோபமும் கபடமும் கோபமும்
    கனவிலும் இல்லாத கனவானே
பாமரர் பார்த்திடப் பற்பல தலைமுறை
    பாவனம் அடைந்திடச் செய்வானே. (சொ)

நாட்கள் செல்லச் செல்ல, ராம நாமத்திலும் இறைவனிடத்திலும் அவருக்குள்ள பக்தியும் நம்பிக்கையும் அதிகமாகிக்கொண்டு வந்தன. அவர் கூட்டங்கள் எல்லாம் பிரார்த்தனைக் கூட்டங்களாகவே இருந்தன. அவர் கடைசியாகச் சென்னை வந்தபோது நடந்த பிரார்த்தனைக் கூட்டங்

களில் சுமார் 4, 5 லட்சம்பேர் சேர்ந்து, கையால் தாளம் போட்டு, ரகுபதி ராகவ ராஜாராம் பாட்டுச் சொன்னது அதில் கலந்துகொண்டவர்கள் எவரும் மறக்க முடியாத அநுபவமாகும்.

இந்த நம்பிக்கையும் பக்தியுமே அவருடைய வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்து, அவருக்கு எல்லை இல்லாத சக்தியை அளித்தன.

# 21. செய் அல்லது செத்துப்போ

இரண்டாவது உலக யுத்தம் 1939-ஆம் ஆண்டு ஆரம்பித்தது. அந்நிலையில் காங்கிரஸ் என்ன செய்ய வேண்டு மென்ற கேள்வி பிறந்தது. வெள்ளைக்கார ஆதிக்கத்தை ஒழித்து சுதந்திரத்தை நிலைநாட்ட அதுதான் தருணம் என்று பலர் நினைத்தனர். அக்காலத்தில் யுத்த நிலைமை படிப்படியாக ஆங்கிலேயருக்கு விரோதமாகப் போய்க்கொண்டிருந்தது. ஜெர்மானியர் முதலில் போலந்து தேசத்தைக் கைப்பற்றினர். பிறகு மேற்கே திரும்பிப் பிரான்சு நாட்டின்மேல் படை யெடுத்தார்கள். மக்கள் எதிர்பாராதபடி வெகு சுலபமாகவே பிரான்சு தோல்வியுற்று, ஜெர்மானியர் ஆளுகைக்கு உட் பட்டது. பிரான்சு வெகு பாடுபட்டு, பல ஆண்டுகள் கோடிக் கணக்கான பவுன்கள் செலவு செய்து கட்டின மாகினட் லைன் என்ற அரண் பயனற்றுப் போயிற்று. ஜெர்மனி வெகு வேகமாகப் பிரான்சு முழுவதும் கைப்பற்றி, இங்கிலாந்திற்கு இப்பாலிருக்கும் சமுத்திரக் கரையைப் பற்றிக்கொண்டது. இங்கிலாந்திற்கும் பிரான்சுக்கும் மத்தியிலிருந்த சில தீவுகள் கூட ஜெர்மானியர் கைவசம் வந்ததாகச் சொல்லிக் கொண்டனர். இந்நிலையில் இங்கிலாந்துக்கும் சில வாரங் களில் அல்லது சில மாதங்களில் தோல்வி நேரும் என்று பலர் எதிர்பார்த்தனர். ஆயிரக்கணக்கான ஜெர்மன் விமானங்கள் இங்கிலாந்தின்மேல் படையெடுத்து, லண்டன் முதலான நகரங்களைத் தீக்கு இரையாக்கின. இவ்வளவு துன்பங்களுக்குள்ளும் ஆங்கிலேய மக்கள் தைரியத்தை இழக்காமல் நம்பிக்கையுடன் எதிர்த்து நின்று, வெற்றிக்கு வேண்டிய ஆயத்தங்கள் அனைத்தும் செய்து ஜயம் பெற்றது சரித்திரத்திலேயே ஆச்சரியமான விஷயங்களில் ஒன்றாகும்.

ஆங்கிலேயர் ஆபத்தான நிலையில் இருந்த அக்காலமே அவர்களை இந்தியாவை விட்டகற்றச் சரியான சமயம் என்று இந்திய அரசியல் வாதிகளில் பலர் அபிப்பிராயப் பட்டனர்.

விரோதியின் கஷ்ட காலத்தைப் பயன்படுத்திக் கொள்ளுதல் ஆண்மைக்கும் சத்தியாக்கிரக முறைக்கும் ஏற்றதல்லவென்று மகாத்மாஜி நினைத்தார் ஆதலால், அச்சமயத்தில் அவர் இயக்கம் ஏதும் நடத்த முன்வரவில்லை. இவ்விஷயத்தைப் பற்றி விவாதித்து முடிவு செய்ய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்கள் பல கூடின. அபிப்பிராயங்கள் பலதிறப் பட்டனவாக இருந்தன. ‘எக்காலத்திலும் அஹிம்சையைத் தான் பின்பற்ற வேண்டும். சுதந்திரத்தை ஹிம்சை மூலம் பெறுவதைக் காட்டிலும் அஹிம்சையைத்தான் பின்பற்ற வேண்டும். அதுவே வீரத்தின் உயர்ந்த சின்னம்’ என்று சிலர் நினைத்தனர். இவர்கள் மகாத்மாஜியைப் பின்பற்றிய வர்கள். ‘சுதந்திரந்தான் நமது லட்சியம்; அஹிம்சை முறை யில் சுதந்தரம் பெற இயலாவிட்டால், அதைக் கைவிட்டுப் பலாத்காரத்தை மேற்கொண்டாவது சுதந்திரத்தை நிலைநாட்ட வேண்டும்’ என்று வேறு சிலர் நினைத்தனர். இவ்வபிப்பிராய பேதங்களிடையே என்ன செய்வதென்று தெளிவு பிறக்காமல் இருந்தது.

ஆனால், மக்களிடையே நாளுக்கு நாள் கொந்தளிப்பு மாத்திரம் அதிகமாகிக் கொண்டுவந்தது. சுதந்திரத்தை நிலை நாட்ட ஏதாவதொரு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டு மென்ற உணர்ச்சி அவர்களுக்கு இருந்தது. பலதடவைகள் மகாத்மாஜி வைசிராயுடன் சமரசம் செய்துகொள்ள முயற்சி செய்தார். ஆனல். இப்பேச்சுக்கள் அனைத்தும் பயனற்றுப் போயின. எனவே, மக்கள் மனத்திலிருக்கும் அதிருப்தியை தெரிவித்துக்கொள்ள ஏதாவது செய்யவேண்டுமென்று அவர் நினைத்தார். மகாத்மாஜி மிகுந்த பெருந்தன்மை வாய்ந்தவர். ஆங்கிலேயர் மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாகியிருந்த அக் காலத்தில் அவர்களுக்குச் சிரமத்தைக் கொடுக்க மகாத்மாஜி விரும்பவில்லை. சர்க்காரின் யுத்தக் கொள்கைக்கு மக்களுடைய எதிர்ப்பைக் காட்டும் நோக்கத்துடன் 1940-ஆம் வருடம் தனிப் பட்ட சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. இது பெரிய இயக்க மாகி மிகுந்த குழப்பத்தை விளைவிக்காமல் இருக்கும்பொருட்டுப்

பொறுக்கி எடுத்த சிலருக்கு மாத்திரம் இவ்வியக்கத்தில் கலந்துகொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. மகாத்மாஜியின் பிரதம சீடர்களில் ஒருவரான ஸ்ரீ விநோபா பாவே அவர்கள் முதன் முதலில் இவ்வியக்கத்தை மத்திய மாகாணத்தில் 17—10—40-ஆம் தேதியில் ஆரம்பித்தார். இதைத் தொடர்ந்து மற்ற மாகாணங்களில் இயக்கம் பரவியது. காங்கிரஸின் திறத்தில் சட்டசபைகளுக்கு அங்கத்தினர்களாக இருந்த பலர் இதில் கலந்துகொண்டார்கள். இவர்களில் பலர் இதற்குமுன் மாகாணங்களை ஆண்டு வந்த மந்திரிகளாக இருந்தனர். இவ்வியக்கத்தில் சுமார் முப்பதினுயிரம் பேர்கள் சிறைக்குச் சென்ருர்கள். இவ்வியக்கம் மக்களுக்கிருந்த அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவே ஆரம்பிக்கப்பட்டது. கொஞ்ச காலத்தில் இதன் வேகம் குறைந்து, சிறைக்குச் சென்றவர்கள் விடுதலை ஆனர்கள்.

ஆனல், இதற்குப் பிறகும் சுதந்திரப் பிரச்னை தீர்ந்த பாடில்லை. காங்கிரஸ் தலைவர்களுக்கும் வைசிராய்க்கும் இடையே மீண்டும் பேச்சு வார்த்தைகள் பல நடந்தன. ஆனல், அவைகளினல் யாதொரு பயனும் ஏற்படவில்லை. இந்நிலையில் யுத்த நிலைமை இன்னும் மோசமாகிக்கொண்டே வந்தது. ஜப்பானியர் பர்மாவின்மேல் படையெடுத்தனர்; இந்தியாவிலும் சில இடங்களில் ஆகாய விமானத்தின் மூலம் குண்டுகள் வீச ஆரம்பித்தனர். நான் டில்லி சட்டசபைக் கூட்டம் ஒன்றுக்குச் சென்று, கல்கத்தா வழியாகத் திரும்பிய போது, விசாகப்பட்டினத்தில் இத்தகைய தாக்குதல் ஒன்று நடந்தது. வால்டேருக்கு அடுத்த ஸ்டேஷனில் நாங்கள் வந்த கல்கத்தா மெயில் நின்றுகொண்டிருந்தது. அது சமயம் ஐந்து ஆகாய விமானங்கள் கிழக்கிலிருந்து 'வி' (V) போல் வந்தன. கொஞ்ச நேரத்தில் அவை எங்களைத் தாண்டி விசாகப் பட்டினத்தை நோக்கிச் சென்றன. சில வினடிகளில் 'கும் கும்' என்ற சப்தம் எங்கள் காதில் விழுந்தது. சில மணி நேரம் அங்கே நிறுத்தப்பட்டோம். வால்டேர் ஸ்டேஷனுக்கு வந்தபோது அங்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஆயிரக்

கணக்கான பெண்களும் ஆண்களும் பயத்தால் பிடிக்கப்பட்டுத தங்கள் சாமான்களைத் தூக்கிக்கொண்டு நகரை விட்டுப் புறப்பட விரும்பினர்கள். பிளாட்பாரம் நிறைந்திருந்தது. ரெயில் வந்ததும் அதில் கொஞ்சமும் இடம் இல்லாமல் நிறைந்து ஏறிக்கொண்டார்கள். இந்தக் குழப்பமும் பீதியும் நெடுநாள் இருந்தன. 'பாம்' விழாத நகரங்களும் இப்பயத் தால் பீடிக்கப்பட்டிருந்தன. அக்காலத்தில் சென்னையில் இருந்தவர்கள் அதை நன்ருக உணர்ந்திருப்பார்கள்.

இதே சமயத்தில் இன்னும் ஒரு சம்பவம் நடந்தது. அது ஆங்கிலேயரின் பேரிலிருந்த மதிப்பைப் பின்னும் குறைத்தது. பெர்ல் ஹார்பர் (Pearl Harbour) என்பது அமெரிக்கர்கள் (U. S. A.) பசிபிக் சமுத்திரத்தில் ஏற்பாடு செய்திருந்த பெரிய யுத்த நிலையமாக இருந்தது. அதை யாராலும் அசைக்க முடியாதென்று அமெரிக்கர்களும் ஆங்கிலேயர்களும் நம்பி யிருந்தார்கள். ஆனல் திடீரென்று 1941-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 7-ஆம் தேதி அதை ஜப்பானியர் கடுமையாகத் தாக்கி அதன் அரண்களைத் தவிடுபொடியாக்கினர். இதை யாரும் எதிர்பார்க்கவில்லை. இது ஜப்பானியர்களுக்கும் அவர்களுடைய தோழர்களான ஜெர்மானியர்களுக்கும் மதிப்பை அதிகமாக்கி, ஆங்கிலேயர் அமெரிக்கர் மதிப்பைக் குறைத்தது. இந்நிலை யில் ஆங்கில அரசாட்சியின் மதிப்பு எங்கும் குன்றி வந்தது. இச்சமயத்திலுங் கூடக் காங்கிரஸ் தலைவர்கள் சமாதான முறையையே மேற்கொள்ள விரும்பினர்கள். இச்சமயத்தில் தான் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் (Sir Stafford Cripps) இந்தி யாவுக்கு வந்தார்.

முன் தூதுக் கோஷ்டிகளைப் போலல்லாமல் சர் ஸ்டா போர்டு கிரிப்ஸ் ஆங்கிலேய சர்க்காரின் பிரதிநிதியாகவே வந்தார். குறிப்பாக இந்திய சுதந்திரப் பிரச்னையைத் தீர்ப் பதற்காகவே அவர் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார். அவர் ஆங்கிலத் தொழிற்கட்சியின் பிரதான அங்கத்தினராக இருந்தார். இந்தியாவின் சுதந்திர லட்சியத்தில் அநுதாப முள்ளவர் என்ற பெயரும் அவருக்கிருந்தது. எனவே, அவர்

வந்ததை அனைவரும் வரவேற்றனர். இந்தத் தடவை இந்தியாவின் சுதந்திரப் பிரச்னை சமரஸமாக முடியுமென்று பலர் எதிர்பார்த்தனர். அவருக்கும் காங்கிரஸ் தலைவர்களுக்கும் நடந்த ஆரம்பப் பேச்சு வார்த்தைகளும் இவ்வபிப்பிராயத்திற்கு ஆதரவு அளித்தன. ஆனால் பேச்சுக்கள் தொடர்ந்து நடக்க நடக்க மீண்டும் ஏமாற்றமே உண்டாயிற்று. ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் பிரித்துத் தாங்களே இந்தியாவை ஆளவேண்டுமென்ற எண்ணத்தை ஆங்கிலேயர் விட்டதாகத் தெரியவில்லை. கடைசியில் இப்பேச்சுக்களும் முறிந்துபோயின. எல்லோர் மனத்திலும் ஏமாற்றமும் கோபமும் உண்டாயின. காங்கிரஸின் பொறுமையையும் நல்லெண்ணத்தையும் ஆங்கிலேயர் பாராட்டாதது குறித்து மக்கள் பெரிதும் வருத்தப்பட்டதுடன், இது தங்களுக்குச் செய்யப்பட்ட அவமானம் என்று கொண்டனர். இந்நிலையில் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளைப்பற்றி ஆலோசிக்க அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று 1942-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 7, 8-ஆம் தேதிகளில் பம்பாயில் கூடியது. அதற்கு நண்பர்களுடன் நானும் சென்றிருந்தேன்.

இதுவரையில் காங்கிரஸ் சரித்திரத்தில் கூடிய எல்லா அகில இந்தியக் காங்கிரஸ் கூட்டங்களைக் காட்டிலும் இக்கூட்டம் தனிச் சிறப்பு வாய்ந்தது. பம்பாய் நகரக் காங்கிரஸ் கமிட்டியார் இக்கூட்டத்திற்காக அமோகமான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். எங்கும் ஒரே உற்சாகம், ஒரே பரபரப்பு. இதுவரை வாளா காத்திருந்த காலம் போய், இனிமேல் காரியாம்சத்தில் வேலை தொடங்கும் காலம் வருமென்று மக்கள் எதிர்பார்த்தார்கள். மகாத்மாஜியின் தலைமையில் பொது ஜனங்களுக்கு எல்லையில்லா நம்பிக்கை இருந்தது. அவர் தலைமையில் மீண்டும் ஓர் இயக்கம் ஆரம்பமாகும் என்றும். அதுவே சுதந்திரத்திற்குரிய கடைசி யுத்தமாக இருக்குமென்றும் நம்பினார்கள். கூட்டம் நடந்த மண்டபத்தில் அவர் வரும்போதும் போகும்போதும் "மகாத்மா காந்திக்கு ஜே" என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. காரியக்கமிட்டியின்

தீர்மானம் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பிரரேபிக்கப்பட்டபோது மக்களுடைய உற்சாகம் எல்லை கடந்த தாக இருந்தது. இவ்வளவு காலம் கழித்து, இந்தியாவின் சுதந்திரத்திற்காக வழி பிறந்ததாகவே அவர்கள் நினைத்தார்கள் போலும். தீர்மானத்தின் சாராம்சம் பின்வருமாறு :

"ஆங்கிலேய சர்க்கார் உடனே இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும். அப்படியில்லாத வரையில் அஹிம்சா முறையில் காங்கிரஸ் தன் முழுப் பலத்தையும் கொண்டு இறுதிப் போர் ஆரம்பிக்க வேண்டி நேரிடும். இப்போர் இது வரை நடந்த இயக்கங்கள் போலல்லாமல் அவைகள் அனைத்தையும்விட மகத்தானதாக இருக்கும். இதில் காங்கிரஸ்வாதிகள் மாத்திரமலலாமல் பொதுமக்கள் அனைவரும் பங்கெடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுவார்கள்." இத்தகைய போர் மகாத்மாஜியின் ஒப்பற்ற தலைமையில்தான் இருக்க முடியுமென்பது தீர்மானத்தில் தெளிவுபடுத்தப்பட்டது.

மற்ற அனைவரும் பேசி முடித்த பிறகு மகாத்மாஜியும் இத் தீர்மானத்தைப்பற்றிப் பேசினர். தாம் அவசரப்பட்டு ஏதும் ஆரம்பிக்கப் போவதில்லை யென்றும், மீண்டும் வைசிராயுடன் ராஜி பேசப் பிரயத்தனம் செய்யப் போவதாகவும் கூட்டத் தினருக்கு எடுத்துரைத்தார். அவருடைய பேச்சில் நிறைந்த ஆர்வமும் நிதானமும் ஒருங்கே காணப்பட்டன. இதுவே சுதந்திரத்தின் இறுதிப் போர் என்றும், போர் மூண்டால் மிக மிகக் கடுமையாக இருக்குமென்றும், மக்கள் எல்லாவிதமான கஷ்டங்களுக்கும் அடக்கு முறைகளுக்கும் தயாராக இருக்க வேண்டுமென்றும் தெளிவாக விளக்கிக் காட்டினர். "சென்ற நான்கு வருஷங்களாகப் பொறுத்துப் பார்த்தாகிவிட்டது. ஆங்கிலேய சர்க்கார் நம் பொறுமையை உணர்ந்ததாகத் தெரிய வில்லை. ஆனல் பொறுமை நமது பலவீனத்தின் அறிகுறி யாகிவிடக்கூடாது. சில சமயங்களில் காரியத்தை மேற் கொள்ளாமல் பொறுத்திருப்பது பலவீனத்தின் அறிகுறியாகும். அப்பலவீனமே மரணத்திற்கு மார்க்கமாகும். நமது தற்கால நிலைமை அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒன்று. முதலில்

சமாதானத்தின் மூலம் சுதந்திரத்தை நிலைநாட்ட முயற்சி செய்வேன். அது இயலாவிடில் இயக்கம் ஆரம்பிக்கும். இவ் விஷத்தில் தலைவர்கள் என்றும் தொண்டர்களென்றும் பாகு பாடு இல்லை. எல்லோரும் அவரவர்கள் பொறுப்பை உணர்ந்து இயக்கத்தில் ஈடுபடவேண்டும். இதுவே நமது இறுதிப் போர். இப்பொழுது பூர்ண முயற்சி செய்து நாம் சுதந்திரத்தைப் பெருவிடில் நமது தேசத்தின் கதி அதோகதிதான். எனவே, இவ்வியக்கம் ஆரம்பித்தால் எல்லோரும் பூர்ண முயற்சியுடன் இதில் ஈடுபடுவீர்களாக! இல்லாவிடில் நமது மரணம் நிச்சயம், ஆதலால் இதையே தருணம் எனக் கொண்டு பூர்ண முயற்சி செய்யுங்கள், இல்லாவிட்டால் செத்துப் போங்கள். (Do or Die)" என்ற மகத்தான வாக்கியத்துடன் மகாத்மாஜி தம் பிரசங்கத்தை முடித்தார். வார்த்தைகள் மிக்க தெளிவாகவும் நிதானமாகவும் அவர் வாயிலிருந்து வந்தன. அவற்றில் ஒரு வித ஆவேசமும் சத்தியும் இருந்தன. மரண தைரியத் துடன் மக்கள் தங்கள் பிறப்புரிமைக்காக ஒரு பெரிய போராட் டம் ஆரம்பிப்பதன் உறுதியும் ஆண்மையும் அதில் காணப் பட்டன.

அதுவே "வெள்ளையனே, வெளியோ போ" (Quit India) என்ற பெரிய இயக்கத்தின் ஆரம்பமாக இருந்தது.

# 22. 1942.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் மகாத்மாஜியின் பிரசங்கத்தையும் பிற நடவடிக்கைகளையும் கவனித்துக்கொண்டிருந்தவர்களுக்கு, இந்தியா முழுவதிலும் பெரிய இயக்கம் ஒன்று ஆரம்பிக்குமென்றும், அதை அடக்க இதுவரை இந்திய மக்கள் கண்டறியாத அடக்கு முறையும் நடக்குமென்றும் தோன்றியிராமல் இராது. ஆனால் அவ்வளவு திடீரென்று அடுத்த நாள் காலையிலேயே அது ஆரம்பிக்குமென்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. மகாத்மாஜி மறுபடியும் வைசிராயுடன் பேசுவார்; பேச்சு முறிந்தால் மட்டுமே இயக்கம் ஆரம்பிக்கும் என்று மக்கள் எதிர்பார்த்தார்கள். அடுத்த நாள் காலை 8-30 மணிக்கு மகாத்மாஜி தங்கியிருந்த இடத்தில் ஊழியர் கூட்டம் நடக்குமென்றும், அதற்குமுன் 7-30 மணிக்குத் தேசீயக்கொடி வணக்கம் நடக்குமென்றும் கூட்டத்தின் இறுதியில் அறிவித்தார்கள். அதற்குப் போகத் தயார் செய்து கொண்டிருந்த நாங்கள், மகாத்மாஜியும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் நள்ளிரவில் கைது செய்யப்பட்டுப் பம்பாயை விட்டுக் கடத்தப் பட்டார்கள். என்ற செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டோம். "போன்" பேச மறுத்துவிட்டது. அதற்குப் பின்னால் விசாரித்ததில் பம்பாயிலிருக்கும் 'போன்கள்' அனைத்தும் சுமார் 12 மணிக்குக் கழற்றப்பட்டனவென்று உணர்ந்தோம். மகாத்மாஜியும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் கைதியான செய்தி வெளியூர்களுக்கு உடனே தெரியவொட்டாமல் செய்வதற்கு அதிகாரிகள் செய்த உபாயம் இது மகத்மாஜியின் வீட்டிற்கு ஒரு போலீஸ் அதிகாரி சென்று, அவரைக் கைது செய்து கடத்திச் சென்றார். அப்படியே காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டார்கள். அவர்களை எங்கே அழைத்துச் சென்றார்கள் என்பது பல வாரங்கள்

பரம ரகசியமாக இருந்தது. விமானமூலம் அவர்களைத் தென் ஆப்பிரிக்காவிற்குக் கடத்தி, அங்கே சிறை வைத்திருக்கிறார்களென்றும் பொது ஜனங்கள் பேசிக்கொண்டனர்.

இச்செய்தி வெளியானதும், பம்பாய் முழுவதும் ஒரே கொந்தளிப்பாக இருந்தது. எங்கே பார்த்தாலும் மக்கள் ஆக்ரோஷத்துடன் கூட்டங் கூட்டமாகக் கூடிக்கொண்டிருந்தனர். போலீஸ் படைகள் எல்லா இடங்களிலும் காணப்பட்டன. அவர்களுக்கு அவசியமானால் உதவி செய்யத் துப்பாக்கி தாங்கிய துருப்புகளும் நகரத்தின் பல பாகங்களிலும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. விஷயம் வெளியானதிலிருந்து நிமிஷத்திற்கு நிமிஷம் கலவரம் அதிகமாகிக்கொண்டு வந்தது. நிலைமையைத் தெரிந்துவர நான் தங்கியிருந்த சர்தார் கிருகத்திலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தபோது, அப்பக்கம் தம் காரில் சென்றுகொண்டிருந்த ஸ்ரீ தீருபாய் தேசாய்—மத்திய சட்ட சபையில் காங்கிரஸ் கட்சித் தலைவராக இருந்த ஸ்ரீ புலாபாய் தேசாயின் புதல்வர், சுவிட்சர்லாந்தில் இந்திய ஸ்தானிகராக இருந்தவர்—தம் காரை நிறுத்தி ஓடோடியும் வந்து, "அவிநாசி, அவிநாசி, மகாத்மாஜி முதலியோர் கைது செய்யப்பட்ட விஷயம் உங்களுக்குத் தெரியுமல்லவா? நீங்கள் இனிமேல் சீக்கிரம் ஊர் போய்ச் சேர்ந்து, அங்கே கவனிக்க வேண்டிய காரியங்களைக் கவனிக்கவேண்டும். இங்கு இனிமேல் கலவரம் அதிகமாகும். எப்பொழுது போலீசார் சுட ஆரம்பிப்பார்கள் என்று சொல்ல முடியாது" என்று அவசர அவசரமாகச் சொல்லி, "எங்கே போய்க்கொண்டிருக்கிறீர்கள்?" என்று விசாரித்தார். "கொடி வணக்கத்திற்கு" என்று சொன்னேன். "அப்படியானால் என்னுடன் வாருங்கள்" என்று தம்முடன் அழைத்துச் சென்றார்.

கொடி வணக்கம் நடக்கும் இடத்தில் ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். கொடி வணக்கத்திற்குத் தயாராகத் தொண்டர் படைகள் அணிவகுத்து நின்றுகொண்டிருந்தன. ஒரு பக்கம் ஆண் தொண்டர் படையும், மற்றொரு பக்கம் பெண்

தொண்டர் படையும் நின்றுகொண்டிருந்தன. அதில் பல தமிழர்கள் இருந்திருக்க வேண்டும் ஏனெனில், என்னைக் கண்டதும் சில சகோதரிகள் ஓடோடி வந்து, "காந்திஜியும் இதர தலைவர்களும் கைது செய்யப்பட்டார்கள் என்பது உண்மையா?" என்று கேட்டார்கள் "உண்மைதான்; நாம் கொடி வணக்கத்தை இப்பொழுது நடத்துவதுதான் நம்முடைய இப்பொழுதைய கடமை. அதற்குத் தயாராகுங்கள்" என்று நான் சொன்னதும், அவர்கள் தைரியமாக அணி வகுப்பில் போய் நின்றார்கள். சுற்றிலும் போலீஸ் படைகளும் துருப்புக்களும் எங்களை வளைத்துக்கொண்டு நின்றன. பண்டித ஜவாஹர்லால் கொடி வணக்கத்திற்காக அழைக்கப்பட்டிருந்தார். அவர் வராமல் போகவே, அங்கிருந்த வேறு ஒருவர் அதைச் செய்ய ஆரம்பித்தார். அச்சமயம் போலீஸ் அதிகாரி ஒருவர் அவரிடம் வந்து, அது சட்ட விரோதமான கூட்டமென்றும், கொடி வணக்கம் செய்யக் கூடாதென்றும், கூட்டம் கலைந்துபோக வேண்டுமென்றும் தெரிவித்தார். இவ்வெச்சரிக்கை பயன் அற்றுப்போகவே, அடக்கு முறை ஆரம்பமாயிற்று. போலீஸ் அதிகாரி சமிக்ஞை செய்ததன் பேரில், கொஞ்சம் எட்டி நின்று கொண்டிருந்த போலீஸ் லாரி அருகில் வந்தது. எங்களைச் சுற்றி வளைத்துக்கொண்டிருந்த போலீஸ் படையினர் கொஞ்சம் எட்டி நின்றனர். அருகில் வந்த போலீஸ் லாரியினின்றும் பட்டாசு மாதிரி ஒன்றைக் கொளுத்திக் கூட்டத்தின் மத்தியில் பல இடங்களில் போட்டார்கள் அதிலிருந்து பலமான புகை கிளம்பிற்று அது தான் கண்ணீர்ப் புகை. உடனே, "கண்ணீர்ப்புகை படுத்துக் கொள்ளுங்கள்" என்ற சப்தம் பிறந்தது. நாங்கள் அனைவரும் தரையில் படுத்துக்கொண்டோம். எவரும் கொடி வணக்கம் செய்யும் இடத்தை விட்டு வெளிச் செல்லவில்லை. போலீஸ்காரர்களின் சூழ்ச்சி பலிக்காமல் போகவே, அவர்களுக்குக் கோபமுண்டாகி, "இவ்விடத்தை விட்டுப் போங்கள்" என்று அடிக்க ஆரம்பித்தார்கள். அங்கே கூடியிருந்தவர்கள் பலருக்கு நல்ல அடி. ஸ்ரீ திருபாய் தேசாய் குறிப்பாகத் தாக்கப்பட்டார். ஸ்ரீமதி அருணா ஆசப் அலியும் கண்ணீர்ப் புகையால்

பாதிக்கப்பட்டு மயக்கமானார். எனக்கும் அதுதான் கண்ணீர்ப் புகையின் முதல் அநுபவம். அந்த அம்மாளைச் சிரமத்துடன் காருக்குக் கொண்டுவந்து மயக்கத்தைத் தெளிவித்தோம். அப்பொழுது பம்பாயிலிருந்த கலவரம் அன்று மத்தியான்னம் நாங்கள் ஊருக்குப் புறப்பட இயலுமா என்று சந்தேகிக்கும்படி இருந்தது. மத்தியான்னம் சுமார் 12-மணிக்குள் ஆறு இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்ததாம்.

பம்பாயிலிருந்து எக்ஸ்பிரஸில் மத்தியான்னம் சுமார் 1-30 மணிக்குப் புறப்பட்டேன். குண்டக்கல் வழியாகத்தான் சென்னை வரவேண்டும். வழி நெடுக ஒரே பரபரப்பாக இருந்தது. இனிமேல் என்ன விதமான விபத்துக்கள் நேருமோ என்று மக்கள் பீதியுடன் இருந்தார்கள். குண்டக்கல் ஸ்டேஷனில் என் நண்பர் ஸ்ரீ சங்கர ரெட்டி எம். எல். சி. அவர்களைக் கைது செய்து சிறைக்குக் கொண்டு போவதைப் பார்த்தேன். சென்னைக்கு வந்து சேர்ந்ததும், ஸ்ரீ சத்திய மூர்த்தி, ஸ்ரீ முத்துரங்க முதலியார் முதலியோர் கைது செய்யப் பட்ட செய்தி கிடைத்தது. ஊர் சேர்ந்த சில தினங்களில் நானும் ஸ்ரீ சி. பி. சுப்பையா அவர்களும் கைது செய்யப் பட்டோம். ஸ்ரீ சுப்ரீ முதலிய மற்ற நண்பர்களும் சில தினங் களில் எங்களோடு சிறைக்கு வந்து சேர்ந்தார்கள். நாங்கள் சிறையில் இருக்கும்போதும், அதற்குக் கொஞ்சம் முன்பும் அனைவரையும் திகைக்க வைக்கக்கூடிய சில காரியங்கள் கோவை ஜில்லாவில் நடந்தன. யுத்தத் தளவாடங்களைக் கொண்டுபோகும் ரெயில் தொடர் ஒன்று சிங்காநல்லூருக் கருகில் கவிழ்க்கப்பட்டது. சூலூருக்கருகில் இருந்த ஆகாய விமான நிலயம் நள்ளிரவில் தாக்கப்பட்டு, நெருப்பு வைத்துச் சூறையாடப்பட்டது. பல இடங்களில் தந்திக் கம்பிகளும் டெலிபோன் கம்பிகளும் வெட்டப்பட்டன. இம்மாதிரியான சம்பவங்கள் கோவை ஜில்லா சரித்திரத்திலேயே பல நூற்றாண்டுகளாக நடந்ததில்லை. எனவே, இவை பெரும் பீதியை மக்களிடையே உண்டாக்கின.

இந்தியா முழுவதிலும் இவ்விதமான செயல்கள் நடந்து கொண்டிருந்தன. இந்தியாவின் பல பாகங்களிலும் லட்சக் கணக்கான மக்கள் வீறு பெற்றெழுந்தனர். எங்கும் ஒரே கொந்தளிப்பு. பல இடங்களில் ரெயில் பாதைகள் பெயர்க்கப் பட்டு, ரெயில்வே நிலையங்கள் தீக்கிரையாயின. பல இடங் களில் போலீஸ் ஸ்டேஷன்களும் சர்க்கார் கஜானுக்களும் காரியாலயங்களும் தாக்கப்பட்டன. சில இடங்களில் சர்க்காரே மறைந்துவிட்டதுபோல் தோன்றியது. இந்நிலையில் வெள்ளைக் காரர்கள் தங்கள் உயிருக்கே ஆபத்து வந்ததாக நினைத்து, தங்கள் பெண்டு பிள்ளைகளை வேற்று இடங்களுக்கு அனுப்பிப் பத்திரப்படுத்தினுர்கள். சர்க்கார் தங்கள் ஆத்திரத்தை நிலை நிறுத்த மிகக் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டார் கள். லட்சக்கணக்கான பேர்கள் சிறை செய்யப்பட்டனர். ஆயிரக்கணக்கான இடங்களில் துப்பாக்கிப் பிரயோகமும் பீரங்கிப் பிரயோகமும் நடந்து, நூற்றுக்கணக்கான பேர்கள் குண்டுக்கிரையாயினர். சில இடங்களில் ஆகாயவிமானத் திலிருந்துகூடக் குண்டுகள் போடப்பட்டன. இது பலத்த சேதத்தையுண்டாக்கி, மக்களிடையே ஒருபுறம் பீதியையும் மற்றொரு புறம் கோபாவேசத்தையும் உண்டுபண்ணிற்று. ஆங்கில ஆட்சியின்பால் என்றும் இல்லா வெறுப்புத் தோன்றிற்று. சில இடங்களில் ஐரோப்பியர்கள் தாக்கப் பட்டுக் கொலையுண்டனர். துப்பாக்கிப் பலத்தாலும் பயங்கர மான அடக்குமுறையாலும் அரசாட்சி நடந்துவந்ததே யொழியச் சாதாரணமாக அரசாங்கத்திற்கு அடிப்படையாக இருக்க வேண்டிய அன்பும் ஆதரவும் மறைந்து போயின. இதை ஆங்கிலேயரும் உணராமல் இல்லை.

இந்நிலையில் காரியக்கமிட்டி அங்கத்தினர்கள் அனைவரும் ஆமதாபாத் கோட்டையிலும், மகாத்மாஜி பூனுவிற்கு அருகி லுள்ள ஆகாகான் மாளிகையிலும் சிறை வைக்கப்பட்டிருந் தார்கள். அதுபோலவே எல்லா மாகாணங்களிலும் முக்கிய மாக இருந்த காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் சிறையில் வைக்கப்பட்டனர். மகாத்மாஜியுடன் ஸ்ரீ மகாதேவ் தேசாய்,

ஸ்ரீமதி கஸ்தூரிபா காந்தி, ஸ்ரீமதி சரோஜினி தேவி, டாக்டர் கில்டர் முதலியவர்களும் வைக்கப்பட்டிருந்தனர். சிறை சென்ற சில வாரங்களில் மிகவும் எதிர்பாராத விபத்து ஒன்று சிறையில் நேர்ந்தது. அதுதான் ஸ்ரீ மகாதேவ் தேசாய் மரணம். ஒரு நாள் காலை திடீரென்று அவர் இருதயக் கோளாறு கண்டு உயிர் துறந்தார். ஸ்ரீ மகாதேவ் அவர்களின் மறைவு மகாத்மா ஜிக்கு எவ்வளவு ஆற்றெணுத் துயரத்தை உண்டாக்கியிருக்க வேண்டு மென்பதை அவர்களுக்குள்ளிருந்த நெருங்கிய அன்பை அறிந்தவர்கள்தாம் உணர முடியும். 'மகாத்மாஜி நன்ருக வேலை செய்ய உதவுகிற அவருடைய இரண்டாவது உடம்பாக மகாதேவ் இருந்தார் என்று ஸ்ரீ ராஜாஜி சொன்னது மிகைபடச் சொன்னதன்று. சுமார் இருபத்தைந்து ஆண்டு கள் அல்லும் பகலும் அன்புடன் உழைத்த உண்மை ஊழியரின் மறைவு மகாத்மாஜிக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கி யிருக்கவேண்டும். ஊழியரோ, சுதந்தரப்போரின் மத்தியில் தாம் லட்சியமாக நினைத்து, தம் உயிரினும் அதிகமாக ஓம்பிய மகாபுருடரின் திருவடியில் தலை வைத்து உயிர் விடுவதைவிட வேறு பேற்றை விரும்பி யிருக்கமாட்டார். மகாதேவ் தேசாய் ஒரு சுத்த வீரனைப்போல் மாண்டார். மகாத்மாஜியோ தம் உண்மை ஊழியரை இழந்து பரிதவித்தார்.

மகாத்மாஜியின் கஷ்டங்கள் இத்துடன் நிற்கவில்லை. மகாதேவ் தேசாயின் உடம்பு ஆகாகான் மாளிகையின் ஒரு புறத்தில் எரிக்கப்பட்டு, அவ்விடத்தில் ஒரு மேடை கட்டப் பட்டது. மகாத்மாஜி அனுதினமும் காலையிலும் மாலையிலும் அங்கே பூப்பறித்து மேடைமேல் வைத்துவிட்டு வருவது வழக்கம். 'கடவுள் தம் பக்தனைக் கடுஞ் சோதனைக்குள்ளாக்கு கிருர்' என்பது மகாத்மாஜியின் சரித்திரத்திலும் உண்மை யாயிற்று. மகாதேவ் தேசாய் காலமான கொஞ்ச காலத்திற்குள் கஸ்தூரிபா காந்தி அம்மையாரும் காலமான செய்தியை அனை வரும் அறிவார்கள். மகாத்மாஜியின் லட்சியங்களுக்கேற்ப, கடுமையான வாழ்க்கையை ஏற்று வாழ்ந்து வந்தவர் அவர். தம் கஷ்டங்கள் அனைத்திற்கும் பங்காளியாக இருந்து, சுமார்

அறுபது ஆண்டுகள் சேர்ந்து கழித்த தோழருடைய மரணம் மகாத்மாஜிக்கு அளவிட முடியாத வருத்தத்தைக் கொடுத் திருக்கவேண்டும். அம்மையார் சடலமும் மகாதேவ் தேசாயின் உடம்பு எரிக்கப்பட்ட இடத்திற்கு அருகில் வைத்துப் பொசுக்கப் பட்டு, அந்த இடத்திலும் ஒரு மேடை கட்டப்பட்டது. அன்றி லிருந்து மகாத்மாஜி அனுதினமும் காலையிலும் மாலையிலும் அங்குச் சென்று, அம்மேடைகளின்மேல் பூ வைத்துத் தனி யாக இருந்து பிரார்த்தனை செய்து வருவது வழக்கமாயிருந்தது.

ஆகாகான் மாளிகையில் இங்ஙனம் நேர்ந்துகொண்டிருந்த சமயத்தில் இந்தியா முழுவதும் பெருங்குழப்பமாக இருந்தது. இந்தியாவின் பொறுப்பு வாய்ந்த அரசியல் தலைவர்கள் அனை வரும் சிறையில் சிக்கி வாடி வதங்கிக் கொண்டிருந்தனர். சென்னையிலிருந்து ஸ்ரீ சத்தியமூர்த்தி, ஸ்ரீ முத்துரங்க முதலியார் முதலியவர்கள் மத்திய மாகாணத்திலிருக்கும் அமராவதி சிறைக்கு மாற்றப்பட்டார்கள். என் நண்பர்கள் ஸ்ரீ நா.மா.ரா. சுப்பராமன், ஸ்ரீ சுப்ரி, ஸ்ரீ சி. பி. சுப்பையா, ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியார், ஸ்ரீ விநாயகம் பிள்ளை, டாக்டர் சுப்பிரமணியம், ஸ்ரீ ஆர். சீதாராம சாஸ்திரியார், ஸ்ரீ கே. கோடீஸ்வர ராவ் முதலியவர் களும் நானும் வேலூர் சிறையில் அடைக்கப்பட்டிருந்தோம். ஆரம்ப காலத்தில் சிறைக் கட்டுப்பாடுகள் மிகவும் பயங்கர மாகவே இருந்தன. வெளியிலிருந்து யாதொரு செய்தியும் எங்களுக்கு வரவொட்டாமல் தடுத்திருந்தார்கள். சாதாரண மாக அரசியற் கைதிகளுக்கு அளிக்கப்படும் பத்திரிகைகள், கடிதங்கள், புத்தகங்கள் போன்ற வசதிகள்கூட இந்தத்தடவை அனுமதிக்கப்படவில்லை. வெளியில் நடக்கும் நடவடிக்கை ஏதும் தெரியாமல் போகவே, எங்கள் காதுக்கு எட்டிய பலவித மான பராரிப் பேச்சுக்களை நம்புவதா அல்லது நம்பாமலிருப் பதாவென்று தெரியாமல் விழித்துக்கொண்டிருந்தோம். "ஜப்பா னியர் இந்தியாவின்மேல் படை எடுத்துவிட்டனர். இன்னும் சில தினங்களில் சிறைக் கதவுகள் உடைக்கப்படும்" என்பது ஒரு செய்தி. இதைக் கேட்டுச் சிலர் சந்தோஷப்படுவார்கள்.

ஜப்பானியர் படையெடுப்புக் காரணமாக, சிறையிலிருக்கும் அரசியல் கைதிகள் அவர்களுக்கு உதவியாக இருக்காமல் செய்வதற்கு அவர்கள் அனைவரையும் சுட்டுக் கொல்லப்போகிறுர்கள் என்பது மற்றெரு செய்தி. இது பெருத்த கிலியை உண்டாக்கும். அக்காலத்தில் எதும் நேரக்கூடியதாக இருந்ததால் எதைத் தள்ளி எதை நம்புவது என்று திகைக்க வேண்டியிருந்தது. எனவே, இந்தத் தடவை முன்தடவைகள்போல் சிறைவாசம் அமைதியாக இருக்க முடியவில்லை.

ஆனுல் நாட்கள் செல்லச் செல்லக் கட்டுப்பாடுகள் குறைய ஆரம்பித்தன. முதலில் படிக்கப் புத்தகங்கள் சிலவற்றை அனுமதித்தார்கள். அதற்குமேல் நோட்டுப் புத்தகங்கள், பென்சில் முதலியன கிடைத்தன. சில மாதங்களுக்குப் பின் 'டைம்ஸ் ஆப் இந்தியா' வாரப்பதிப்பு வரத் தொடங்கியது. இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக நெகிழ்ந்து, பத்திரிகைகளும் வரத் தொடங்கின. ஆனுல், சிறையில் இருப்பவர் அறியக் கூடாதென்று அதிகாரிகள் நினைக்கும் பாகங்கள் நன்ருகக் கரி பூசிவரும். எனினும், இவை முன்னிருந்த பயங்கரத்தை மிகவும் குறைத்தன. நண்பர்களுடன் சேர்ந்து திருக்குறள் வகுப்பு நடத்துவதிலும் புத்தகங்கள் எழுதுவதிலும், படிப்பதிலும் என்னுடைய காலம் கழிந்தது. நான் எழுதிய புத்தகங்கள் பெரும்பாலும் சிறையில் எழுதப்பட்டவை. 1932-ஆம் வருஷம் கடலூர்ச் சிறைவாசத்தின்போது இந்தியப் பொருளாதார நூல் எழுதப்பட்டது. 1941-ஆம் வருஷம் திருச்சி சிறையில் திருக்கேதார யாத்திரையும் விவேகானந்த சுவாமிகளின் கல்வியைப்பற்றிய தொகுப்பும் செய்யப் பெற்றன. 1942-இல் விவேகானந்த சுவாமிகளின் இந்தியப் பிரசங்கங்களை மொழி பெயர்த்தேன்.

இதற்குமுன் நேர்ந்த சிறைவாசங்கள் அனைத்தையும்விட 1912 சிறைவாசமே மிகவும் கடுமையானதெனச் சொல்ல வேண்டும். அப்பொழுதிருந்த சௌகரியம் குறைவல்ல. பாதுகாப்புக் கைதிகளாக இருந்தவர்களுக்குப் பல வசதிகள் இருந்தன. எனினும், அக்காலத்திலிருந்த சூழ்நிலையே

அதற்குக் காரணமாயிருந்தது. இக்காலத்தில் தங்கள் உடல் நலத்தை இழந்தவர்கள் பலர். ஸ்ரீ சி. பி சுப்பையா அவர்கள் ஆஸ்த்மாவால் மிகவும் கஷ்டப்பட்டார். ஸ்ரீ என். ஜி ராமசாமி மிகவும் நோய்வாய்ப்பட்டு விடுதலையான இரண்டு மூன்று வாரங்களில் உயிர் நீத்தார். சிலர் வியாதியால் பீடிக்கப்பட்டுச் சிறை வைத்தியசாலையிலேயே மாண்டனர். மிகவும் ஜாக்கிரதையாக இருப்பதாக நினைத்துக்கொண்டிருந்த என் உடம்பும் திடீரென்று வலி இழந்து நலம் குன்றியது. அதன் காரணத்தைச் சுமார் ஒரு மாதம் எவரும் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியில் ஆஸ்த்மாவென்று கண்டுபிடித்த பிறகும், சிறை வைத்தியர்களால் குணப்படுத்த முடியவில்லை. இரவு முழுதும் இருமல் பலநடைய தூக்கத்தையும் கெடுக்கத் தக்க அவ்வளவு பலமாக இடைவிடாது இருந்தது. உடம்பு மிகவும் மெலிய ஆரம்பமாகவே, அது க்ஷயம் என நினைத்து பலர் என்னிடம் இரக்கம் காட்டத் தொடங்கினர்கள். நான் மீண்டும் பிழைப்பதுகூடக் கடினம் என்று சிலர் நினைத்ததாகப் பின்னல் கேள்விப்பட்டேன்.

அப்பொழுது இந்தியா முழுதும் திகில் அடையத் தக்க சம்பவம் ஒன்று நடைபெற்றது.

# 23. மகா விரதம்

ஒரு நாள் காலை நேரம். சிறைக்குள் திருக்குறள் வகுப்பு நடத்திக்கொண்டிருந்தோம். 1945-ஆம் வருஷம் பெப்ரவரி மாதம் இரண்டாம் வாரமென்று நினைக்கிறேன். பலவிதமான குழப்பத்தை உண்டாக்குகின்ற செய்திகள் வந்துகொண்டிருந்த காலம் அது. திடீரென்று ஒருவர் ஓடிவந்து, ''மகாத்மாஜி சிறையில் பட்டினி கிடக்கிறார். சாகும் வரையில் இருப்பார் என்று செய்தி வந்திருக்கிறது'' என்று சொன்னார். இச்செய்தி காட்டுத் தீப்போல் சிறை முழுவதும் பரவிற்று. எல்லா வேலைகளும் நின்று ஆங்காங்கே பலர் கூட்டங் கூட்டமாகக் கூடிப் பலவாறாகப் பேசிக்கொண்டிருந்தனர். 'அவர் உண்ணாவிரதம் இருக்கிறார் என்பது உண்மையா? அப்படியானால் எதற்காக? எவ்வளவு தினங்கள்? அல்லது காலவரையறையின்றிச் சாகும் வரையா?' என்ற கேள்விகள் எங்கள் மனத்தில் தோன்றிக் கொண்டிருந்தன. ஆனால் கொஞ்ச நேரத்தில் நிலைமை விளக்கமாயிற்று. சர்க்காரே அதிகார பூர்வமாமன அறிக்கை விட்டிருப்பதாகத் தெரியவந்தது. மகாத்மாஜி இருபத்தொரு தினங்கள் பட்டினியிருப்பதாகவும், அவர் இதன் மூலம் தம் உயிரை மாய்த்துக்கொள்ள விரும்பவில்லை யென்றும், எனவே தண்ணீருடன், அவசியமானால் எலுமிச்சம்பழ ரசமும் உப்பும் கலந்து சாப்பிடுவாரெனவும் அதில் கண்டிருந்தது. தவிர, தம்மைப் பின்பற்றி எவரும் உண்ணாவிரதம் இருக்கக்கூடா தென்றும் மகாத்மாஜி கேட்டுக்கொண்டிருந்தார்.

இச்செய்தி அங்கிருந்த அனைவரையும் ஆருத்துயரத்தில் ஆழ்த்தியது. அவருக்கு அப்பொழுது வயது 74. அவ்வயதில் 21 நாட்கள் பட்டினி என்ன விளைவை உண்டாக்குமோ என்ற நினைவே திகிலையும் பயத்தையும் உண்டாக்கிற்று. ஒரு வேளை மகாத்மாஜிக்கு ஏதாவது நேர்ந்தால், இந்நாட்டின் கதியென்ன

என்பது ஒருபுறம்; அவரை நம்பிச் சிறைக்குச் சென்று, அங்கு வாடி வதங்கிக்கொண்டிருப்பவர்களின் முடிவு என்ன என்ற எண்ணம் மற்றொருபுறம். எனவே, அவ்வெண்ணம் அனைவர் மனத்திலும் மிகுந்த கலக்கத்தையும் துக்கத்தையும் உண்டு பண்ணிற்று. அன்றிலிருந்து ஒவ்வொரு தினமும் காலையிலும் மாலையிலும் பிரார்த்தனைக் கூட்டங்கள் அவருடைய க்ஷேமத்தை முன்னிட்டு நடந்தன. இப் பிரார்த்தனைக் கூட்டங்கள் மிகுந்த உணர்ச்சி நிறைந்தனவாக இருந்தன. பலர் தங்கள் உணர்ச்சியை அடக்க முடியாமல் கதறி அழுதார்கள். இன்னும் பலர் தாங்களும் உண்ணாவிரதம் இருந்து, மகாத்மாஜிக்காக நாள் முழுதும் பிரார்த்தனை செய்வதெனத் தீர்மானித்தார்கள். முதல் நாள் அனைவரும் விரதமிருந்து பிரார்த்தனை செய்வதெனவும், அதற்குமேல் அவரவர்கள் விருப்பத்திற்கும் சக்திக்கும் ஏற்றவாறு செய்யவேண்டியதெனவும் தீர்மானம் ஆயிற்று. ஒரு நேரங்கூடப் பட்டினியிருக்க முடியாதென்று நினைத்திருந்த பலர் மகாத்மாஜியின் பேரிலிருந்த பக்தி காரணமாகப் பல தினங்கள் பட்டினி கிடந்தார்கள். எனக்கு அருகில் இருந்த என் நண்பர் திரு. சி. பி. சுப்பையா மூன்று தினங்கள் பட்டினியிருந்தார். நான் நான்கு தினங்கள் உணவருந்தவில்லை. என் ஆயுளில் பட்டினி இருந்த அதிக காலம் அதுதான். பலர் இன்னும் அதிக தினங்கள் விரதம் இருந்தனர்.

நாட்கள் செல்லச் செல்ல, பத்திரிகையில் பலவாறான செய்திகள் வரத் தொடங்கின. 'பலவீனமாயிருக்கிறார்; ஆதலால் முன்மாதிரி தாங்க முடியவில்லை; வாயிலெடுக்க ஆரம்பித்துவிட்டார்; தண்ணீரும் சாப்பிட முடியவில்லை; யுரேமியா கண்டுவிட்டது; ஆபத்தான நிலைமையில் இருக்கிறார்' என்று நாளும் செய்திகள் மாறி மாறி வந்துகொண்டிருந்தன. இவையெல்லாம் எங்கள் மனத்தில் அளவில்லாத பீதியையும் பயத்தையும் உண்டாக்கின. அடுத்த நாள், 'கொஞ்சம் பரவாயில்லை; தண்ணீர் அருந்த முடிகிறது' என்று செய்தி வந்த போது, அவர் ஆண்டவன் அருளால் பிழைத்துக்கொள்வார்

என்ற நம்பிக்கையும் தைரியமும் தோன்றின. ஆனால், மூன்றும் வாரத்தில் பயங்கரமான செய்திகள் வரத் தொடங்கின. சர்க்கார் இந்நிலையிலும் அவரை விடுவிக்க மறுத்தனர் என்ற செய்தி அனைவர் மனத்திலும் மிகுந்த கோபத்தை உண்டாக்கிற்று. மகாத்மாஜியின் உடல்நிலை குன்றி வருவதாகவும், அவரால் பேசவும் இயலுவதில்லை என்றும் பத்திரிகைகளில் வந்தபோது அனைவரும் திகில் அடைந்தோம். அதற்குப் பிறகு வந்த செய்தி இன்னும் அதிக பயத்தை உண்டாக்கியது. அவர் இறந்தால், அவர் உடம்பைத் தகனம் செய்யச் சந்தனக் கட்டைகள் தயார் செய்யப்பட்டனவென்றும், ஈமக்கிரியைகள் செய்யப் புரோகிதர்கள் கொண்டுவரப்பட்டதாகவும் தெரிவிக்கப் பட்டது. இது வெளியனபோது பலர் கதறித் தேம்பித் தேம்பி அழுதனர். சிறை முழுதும் துக்க மயமாக இருந்தது. கடைசியில் 21-வது நாளும் வந்தது. என்ன நேருமோ -வென்று திகிலுடன் இருந்த எங்களுக்கு அந்நாள் ஒரு கண்டமாகத் தோன்றிற்று. இருபத்தோராவது நாள் உபவாசமும் முடிந்து மகாத்மா மீண்டும் உணவருந்தினர் என்ற விஷயம் தெரிந்த போது அனைவருக்கும் உயிர்ப்பிச்சை அளிக்கப்பட்டதுபோல் தோன்றிற்று. எல்லோரும் செத்துப்பிழைத்த மாதிரி பெருமூச்சுவிட்டு ஆனந்தப்பட்டனர்.

வெளி உலகிலும் மக்கள் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்தனர். சமீபத்தில் நேர்ந்த விஷயமாதலால் நேயர்கள் பலரும் மக்கள் அக்காலத்தில் அடைந்த சஞ்சலத்தையும் கவலையையும் உணர்ந்திருப்பார்கள். இந் நிலையிலும் மகாத்மாஜியை விடுதலை செய்யாததுபற்றி அனைவர் மனத்திலும் சீற்றம் உண்டாயிற்று. தேச முழுவதிலும் பிரார்த்தனைக் கூட்டங்கள் கூடி, அவர் க்ஷேமத்திற்காகப் பிரார்த்தனைகள் நடத்தப் பெற்றன. எல்லா ராஜீயக கட்சிகளைச் சேர்ந்தவர்கள் அனைவரும் ஒன்றுகூடி. மகாத்மாஜி விடுதலை செய்யப்பட வேண்டும் என்று பல்லாயிரக்கணக்கான கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேற்றினர். கோவில்களிலும் மசூதிகளிலும் கிறிஸ்தவ ஆலயங்களிலும் அவருக்காக விசேட பூஜைகளும் பிரார்த்

தனைகளும் நடத்தப்பட்டன. இவையெல்லாம் மகாத்மாஜியே இந்தியாவின் தனிப் பிரதிநிதி யென்பதைத் தெளிவுபடுத்தின. இந்தச் சமயத்தில் மகாத்மாஜியை விடுதலை செய்யாத காரணத்திற்காக, அப்பொழுது வைசிராயின் நிர்வாக சபையில் அங்கத்தினர் பதவியை வகித்துவந்த ஸ்ரீ சர் எச். பி. மோடியும், ஸ்ரீ எம். எஸ். ஆனேயும், ஸ்ரீ என். ஆர். சர்க்காரும் தங்கள் பதவியை ராஜீநாமாச் செய்தனர். ஆனால், இவை எவற்றிற்கும் அப்பொழுதிருந்த அன்னிய அரசாட்சி செவி சாய்க்கவில்லை. கடைசியில் மகாத்மாஜி வெற்றியுடன் விரதத்தை முடித்தபோது மக்களுடைய மகிழ்ச்சி கரை கடந்ததாக இருந்தது. ஆண்டவனே மக்கள் பிரார்த்தனைக்கு இணங்கி அவரைக் காப்பாற்றியது போலிருந்தது. விரதத்தின்போது சிலர் அவரைப் பார்க்க அநுமதிக்கப்பட்டிருந்தார்கள். விரதம் முடிந்ததும் காந்தியடிகள் மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார்.

இதற்குப் பிறகு சுமார் பதினைந்து மாதங்கள் மகாத்மாஜி சிறையில் இருந்தார். இக்காலத்தில்தான் அன்னை கஸ்தூரிபா காந்தியின் மறைவு நேர்ந்தது. இது மகாத்மாஜியை மிகவும் பாதித்திருக்கவேண்டும். அவர்கள் இருவருக்கும் ஏகதேசம் ஒரே வயது, மிக இளமையிலேயே மணமானவர்கள். மகாத்மாஜியின் எல்லாவிதச் சுக துக்கங்களிலும், எல்லா நிலைகளிலும் கஸ்தூரிபா அம்மையார் பங்கெடுத்துக்கொண்டவர்கள். மகத்தான பட்டினிகளையும் பிற விரதங்களையும் மேற்கொண்ட போது, கூடவேயிருந்து, தாயைப்போல் மகாத்மாஜியைக் கண்ணுங் கருத்துமாகப் பேணியவர்கள். மரணத் தறுவாயில் கூட அன்னையையும் சர்க்கார் விடுதலை செய்ய மறுத்தனர். ஆனால், அன்னையோ சந்தோஷமாகத் தம் பர்த்தாவின் மடி மேல் தலை வைத்து உயிர் நீத்தார். அவர் உடம்பும் மகாதேவ தேசாயின் உடம்பை எரித்த இடத்திற்கு அருகில் வைத்துத் தீக்கு இரையாக்கப்பட்டது அந்த இரண்டு இடங்களையும் குறிக்க மேடைகள் கட்டப்பட்டிருக்கின்றன. இப்பொழுது ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் உலக முழுவதிலுமிருந்து

அங்கு வந்து அவைகளை வணங்கிச் செல்லுகின்றனர். மகாத்மாஜி சிறையுல் இருக்கும்வரை அநுதினமும் அம் மேடைகள் மேல் பூக்கள் வைத்து, மாலை நேரங்களைத் தனியாகத் தியானத்தில் அங்குக் கழித்து வந்தார்.

மீண்டும் 1943-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் காந்தியடிகளுக்கு உடல்நலம் சரியில்லை என்று தெரிவிக்கப்பட்டது. 21 நாட்கள் பட்டினியின்போது மகாத்மாஜியின் உயிருக்கே ஆபத்து நேர்ந்த காலத்தில் அவரை விடுதலை செய்யாத அரசாங்கம் இப்பொழுது அவரை விடுதலை செய்யும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. மகாத்மாஜியைத் தொடர்ந்து சிறையில் வைத்திருப்பதால் தங்களுக்குக் கெடுதல் ஏற்படுகிற தென்பதை அவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். இந்திய மக்களை விரோதம் செய்துகொண்டு, அவர்களை ஆள முடியாது என்பதையும், மகாத்மாஜியுடன் ராஜி செய்துகொள்வதன் மூலந்தான் மக்களின் நன்மதிப்பையும் ஒத்துழைப்பையும் பெற முடியும் என்பதையும் அவர்கள் அறிந்திருக்கவேண்டும். திடீரென்று மகாத்மாஜி 1944-ஆம் வருஷம் மேமாதம் 5-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். காந்திஜிக்கே இது எதிர்பாராத புதிராக இருந்தது. முந்திய நாள் இரவுதான் அவருக்கு இத் தகவல் அறிவிக்கப்பெற்றது. அடுத்த நாள் காலை எட்டு மணிக்கு விடுதலை செய்யப்பட்டார். இதை எவரும் எதிர்பார்க்கவில்லை. ஆயினும், இந்தியா முழுவதிலும் இச்செய்தி மக்கள் மனத்தில் மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. உலக முழுவதும் காந்தியடிகள் இனிமேல் என்ன செய்யப்போகிறார் என்பதை எதிர்நோக்கி நின்றது. சர்க்காரும் அவர் அடுத்த செய்கையைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தது. நாடு முழுவதும் இந்திய மக்கள் அவருடைய வார்த்தைகளை எதிர்நோக்கியிருந்தார்கள், அவரும் இதை உணராமல் இல்லை.

மகாத்மாஜி வெளியில் வந்ததும், மீண்டும் முஸ்லீம் லீகுக்கும் காங்கிரசுக்கும் ஒற்றுமை உண்டாக்குவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்ய ஆரம்பித்தார். இவ்வொற்றுமைக்குறைவே அன்னிய அரசாட்சிக்கு அஸ்திவாரமாக இருந்து

வந்ததென்பது அவர் முடிவு. எனவே, முஸ்லீம் லீகின் தலைவர் ஸ்ரீ ஜின்னுவுடன் பேச்சு வார்த்தை ஆரம்பித்தார். அதற்காகத் தாமே முதலில் அவருக்குக் கடிதம் எழுதினுர். ஆனுல் ஜின்னு எதற்கும் இணங்குவதைக் காணும். நாட்டை ஹிந்துஸ்தான், பாகிஸ்தான் என இரண்டு துண்டாகச் செய்ய வேண்டுமென்று ஜின்னுவும் லீகும் தீவிரமாக அப்பொழுது பிரசாரம் செய்துகொண்டிருந்தனர். மகாத்மாஜி எவ்வளவு முயற்சி செய்தும் ஜின்னுவின் பிடிவாதத்தால் பேச்சுக்கள் முறிந்து போயின.

இந்தப் பேச்சுக்கள் நடந்துகொண்டிருந்த சமயம் நான் மகாத்மாஜியைக் காணச் சேவாக்கிராமம் செல்ல நேர்ந்தது. இப்பேச்சுக்களை நடத்துவதில் மகாத்மாஜி மிகத் தாழ்ந்து போவதாகவும், அதன்மூலம் காங்கிரசுக்கும் தமக்கும் உள்ள கௌரவத்தைக் குறைத்துக்கொள்ளுகிருர் என்றும் காங்கிரஸ் காரர்களிடையே அபிப்பிராயம் இருந்துவந்தது. அவரிடம் பேசிக்கொண்டிருந்தபோது அதை அவரிடம் தெரிவித்தேன். அதற்கு அவர் சொன்ன பதில் எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது; ''காங்கிரஸ் ஊழியர்கள் பலர் அங்ஙனம் நினைப்பது தவறு. காங்கிரஸின் கௌரவத்தைக் குறைக்க நான் என்றும் உடன்பட மாட்டேன். ஆனுல். பணிவினுல் எப்பொழுதும் தாழ்வு உண்டாகாது. யாவர்க்கும் பணிதல் நன்ரும்; அதிலும் செல்வர்க்கே செல்வம் தகைத்து. பெருமைதான் பணியும் என்பதை நீ உணராயா?'' என்ருர். அவர் மீண்டும் சொன்னுர்: ''என் சொந்தக் கௌரவத்தைப் பற்றி எனக்கு என்றும் கவலை கிடையாது. இந்தியப் பிரச்னையைத் தீர்க்க உதவி செய்யுமானுல், ஸ்ரீ ஜின்னு மாத்திரமல்ல, வேறு எவர் வீட்டுக்கும் நான் எத்தனை தரம் வேண்டுமானுலும் செல்லத் தயங்கமாட்டேன். இதன்மூலம் ஒருபோதும் காங்கிரசுக்கோ எனக்கோ இழுக்கு வராது."

இதே சமயத்தில் நேர்ந்த இன்னும் ஒரு விஷயத்தையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். தம் அன்பிற்குரிய ஊழியர் களைப்பற்றிய சிறு விஷயங்களையும் எவ்வளவு ஆர்வத்துடன்

அவர் கவனித்து வந்தார் என்பதற்கு அது சான்றாகும். 1942-ஆம் வருஷ இயக்கத்தின் சிறைவாசத்தின்போது நான் கடுமையான இருமலுக்கும் இளைப்புக்கும் ஆளானதுபற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அதனால் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்தேன். அது காரணமாகக் குளிர் தாங்கவோ, குளிர்ந்த நீரில் குளிக்கவோ இயலாமல் இருந்தது. வெந்நீரிலேயே குளிக்க வேண்டியிருந்தது, சேவாக் கிராமத்துக்குக் காந்திஜியைப் பார்க்கச் சென்றபோது அங்கு மற்றவர்களைத் தொந்தரவு செய்யவேண்டாமென்று குளிர்ந்த நீரில் குளித்துவிட்டேன். அதனால் இளைப்புத்தோன்றிக் கொஞ்சம் கஷ்டப்பட நேர்ந்தது. அதற்கு மருந்து கையில் இருந்தது. உடனே மருந்து சாப்பிட்டுக் கொஞ்ச நேரத்தில் இளைப்பு நின்றுவிட்டது. மத்தியான்னம் மூன்று மணிக்கு மகாத்மாஜியைச் சந்திப்பதென்று ஏற்பாடு. குறிப்பிட்ட நேரத்திற்கு அவர் அறைக்கு அழைத்துச் சென்றார்கள். வழக்கம்போல் புன்சிரிப்புடன் வரவேற்றார். ஆனால் அவர் கேட்ட முதல் கேள்வி பின்வருமாறு: “அவிநாசி, எதற்காகக் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து இளைப்பை வரவழைத்துக் கொண்டாய்? இங்கு வெந்நீர் கிடைப்பது கடினமல்லவே! கேட்டிருந்தால் கொடுத்திருப்பார்களே. நீ இளைப்பால் கஷ்டப்பட்டிருக்க வேண்டிய அவசியமே இல்லையே?” அதைக் கேட்டதும் நான் அயர்ந்துவிட்டேன். நான் குளிர்ந்த நீரில் குளித்ததும் இளைப்பு வந்ததும் மகாத்மாஜிக்கு எப்படித் தெரிந்தது! என்பது ஆச்சரியமாயிருந்தது. மகாத்மாஜியின் அளவற்ற அன்பே என்னைப் போன்ற எளிய ஊழியர்களுடைய சாதாரண விஷயங்களையும் தெரிந்துகொள்ளும்படி செய்தது. இவ்வளவு பெரிய அரசியல் சிக்கல்களுக்கிடையேயும் சிறிய ஊழியர்களின் தேவைகளை இவ்வளவு கவனிக்கக்கூடிய அவருடைய அன்பை வியந்து போற்றினேன்.

# 24. நவகாளி யாத்திரை

மகாத்மாஜி விடுதலையான பிறகு முஸ்லீம் லீக் தலைவர் ஜின்னுவுக்கும் மகாத்மாஜிக்கும் பல பேச்சு வார்த்தைகள் நடந்தன. ஆனல் ஜின்ன அவர்களின் பிடிவாதத்தால் அப் பேச்சுக்கள் அனைத்தும் முறிந்து போயின. ஐரோப்பியப் போரில் நேசக் கட்சி வெற்றி பெற்றது. முதலில் ஜெர்மனியும் இத்தாலியும் தோல்வியுற்றன. பிறகு ஜப்பானும் தோற்றது. அதன் பிறகு மறுபடியும் இந்தியாவின் சுதந்திரத்தைப் பற்றிய பேச்சுக்கள் அதிகமாயின. ஆனல் இவை பேச்சளவில் இருந் தனவேயொழியக் காரிய ரூபமாக ஏதும் நடைபெறவில்லை. காங்கிரசும் முஸ்லீம் லீகும் ஒத்து வந்தால் அதன்படி செய்வ தாக ஆங்கிலேய சர்க்கார் வாக்களித்தார்கள். ஜின்னுவோ இந்தியாவைத் துண்டுபோட்டு, ஹிந்துஸ்தான், பாகிஸ்தான் என இரண்டாக்கி, அதன் பிறகுதான் சுதந்திரத்தை அளிக்க வேண்டுமெனப் பிடிவாதமாகச் சொன்னுர். இந்த நிலையில் வேவல் போய் மவுண்ட் பேட்டன் வைசிராயாக வந்தார்.

யுத்த ஆரம்பத்திலிருந்து மத்தியச் சட்ட சபைக்கோ மாகாணச் சட்ட சபைக்கோ தேர்தல் நடக்கவில்லை. 1934-ஆம் ஆண்டு மத்தியச் சட்ட சபைக்கும், 1937-ஆம் ஆண்டு மாகாணச் சட்ட சபைகளுக்கும் நடந்த தேர்தலுக்குப் பின் பொதுத் தேர்தல் ஏதும் நடக்கவில்லை. மத்தியச் சட்ட சபை யாவது சிற்சில சமயங்களில் கூடி வேலை செய்து வந்தது. காங்கிரஸ் அங்கத்தினர்கள் அதில் கலந்துகொள்ளும்போது சர்க்காருக்கு எதிர்ப்புப் பலமாக இருக்கும். அவர்கள் கலந்து கொள்ள மறுத்தபோது எதிர்ப்பே இராது. மந்திரிகள் ஆட்சி போய் ஆலோசனையாளர்களின் ஆட்சி வந்தபோது மாகாணங் களில் சட்டசபைகள் கூடவில்லை. ஆதலின், மக்கள் அபிப் பிராயத்தைச் செவ்வனே அறிந்துகொள்ளத் தேர்தல்கள்

நடத்துவதே முதல் வேலை எனச் சர்க்கார் நினைத்தார்கள். அதன்படியே 1944-ஆம் ஆண்டு இறுதியில் மத்தியச் சட்ட சபைத் தேர்தலும், 1946-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் மாகாணச் சட்ட சபைத் தேர்தலும் நடைபெற்றன. இதன் பயனாக ஒரு விஷயம் தெளிவாயிற்று. இந்துக்கள் அதிகமாக இருக்கும் மாகாணங்கள் அனைத்திலும் காங்கிரஸ்காரர்கள் பெருவாரியாக வெற்றி பெற்றார்கள். இவை சென்னை, பம்பாய், மத்திய மாகாணம், ஐக்கிய மாகாணம், பீஹார், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம் மாகாணங்களாகும். அங்ஙனமே சிந்து பஞ்சாப், வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களில் லீகுக்குப் பெரும்பான் மையான வெற்றி கிடைத்தது. தேர்தலுக்குப் பிறகு மாகாணங் களில் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. இதற்கிடையில் காங்கிரசுக்கும் லீகுக்கும் உள்ள அபிப்பிராய பேதங்களும் அவநம்பிக்கையும் வளர்ந்துகொண்டே வந்தன. சமாதானத் திற்காக மகாத்மாஜி செய்த முயற்சிகள் அனைத்தும் வீண் ஆயின. காங்கிரஸ் பெரும்பான்மையான ஸ்தானம் பெற்ற சென்னை முதலிய மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகளும் ஏற்பட்டன. சென்னையில் ஏற்பட்ட மந்திரிசபையில் ஓர் அங்கத்தினனாக இருந்து அடுத்த மூன்று ஆண்டுகள் நம் மாகாணத்தில் கல்வி மந்திரியாகப் பணியாற்றும் சந்தர்ப்பம் அப்போது எனக்குக் கிடைத்தது.

1946-ஆம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் மாகாணங்களில் மந்திரி சபைகள் ஏற்பட்டன. அவை ஏற்பட்டுச் சுமார் ஆறு மாதங்கள் இருக்கலாம். லீகின் வெறுப்புப் பிரசாரம் அதிக மாகிக்கொண்டே வந்தது. லீக் தலைவர்கள் வேண்டுமென்றே அதை அதிகப்படுத்திக்கொண்டு வந்தார்கள். தங்களுக்கும் இந்துக்களுக்கும் பொதுவாக ஏதும் இல்லை என்றும், தாங்கள் எல்லாவிதத்திலும் தனிப்பட்ட மக்கள் என்றும், தங்களுக்குத் தனிப்பட்ட ராஜ்யம் வேண்டும் என்றும் அவர்கள் செய்த துவேஷப் பிரசாரம் ஓங்கிக்கொண்டே வந்தது. 1946-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி இது உச்ச நிலையை அடைந்தது. இந்தியா முழுவதும் அந்நாளை முஸ்லீம்கள்

தங்களுக்கு விடுதலை நாளாகக் கொண்டாட வேண்டுமென்று அதாவது இந்துக்கள் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுத் தங்களுக்குத் தனி ராஜ்யமாகப் பாகிஸ்தானை ஸ்தாபிக்க வேண்டுமென்ற எண்ணத்தை வெளிக்காட்டிக் கொண்டதாக வேண்டுமென்று முஸ்லீம் லீக் ஸ்ரீ ஜின்னு தலைமையில் முடிவு செய்திருந்தது. கல்கத்தாவில் இக்கொண்டாட்டம் மிகுந்த மோசமான நிலையை அடைந்தது. அங்கு முஸ்லிம்களில் போக்கிரிகள் தாங்கள் பாக்கிஸ்தானைப் பெற்றுவிட்டதாகவே நினைத்து இந்துக்களை இம்சிக்கத் தொடங்கினுர்கள். இந்துக்களின் வீடுகளை எரித்தார்கள். பல இந்துக்கள் கொலையுண்டனர். அப்போது அங்கிருந்த முஸ்லிம் அரசாங்கம் கண்டும் கவனியாமல் இருக்கவே, அது இந்துக்கள் மனத்தில் ஆத்திரத்தை உண்டாக்கியது. அவர்கள் பதிலுக்குப் பதில் செய்யத் தொடங்கினுர்கள். இது காரணமாகக் கல்கத்தாவில் ரத்தவெள்ளம் ஓடத் தொடங்கிற்று இந்துக்களும் முஸ்லிம்களும் மனிதத் தன்மையை இழந்து மிருகங்கள் போல் ஒருவருக்கொருவர் சகிக்க முடியாத கொடுமைகளை இழைத்துக் கொண்டார்கள். நூற்றுக் கணக்கான வீடுகள் தீக்கு இரையாயின. ஆயிரக்கணக்கான பேர்கள் கொல்லப்பட்டனர். பெண்கள் மானபங்கம் செய்யப்பெற்றுக் கடத்திச் செல்லப்பட்டனர். குழந்தைகளும் வதைக்கப்பட்டனர். இவ்வாறு கல்கத்தா கோர சொருபமாகப் பல வாரங்கள் இருந்தது. கல்கத்தா இந்துக்கள் பெரும்பான்மையோராக இருக்குமிடம். முஸ்லீம்களே அங்கு அதிகம் கஷ்டப்பட்டதாகச் சொல்ல வேண்டும். இதற்கு எதிரொலிபோல் முஸ்லிம்கள் அதிகமாக இருக்கும் கிழக்கு வங்காளத்தில் நவகாளி என்ற ஊரில் இந்துக்களுக்கு எண்ணிறந்த அக்ரமங்களைச் செய்தார்கள். இதற்குப் பதில்போல் பீஹாரிலும், ஐக்கிய மாகாணத்திலும் பல இடங்களில் முஸ்லிம்கள் வதைக்கப்பட்டனர். இச்செய்திகள் நாடெங்கும் மிகுந்த பரபரப்பை உண்டாக்கின. இந்துக்களும் முகமதியர்களும் தாங்கள் ஒரு நாட்டில் பிறந்து வாழும் சகோதரர்கள் என்ற உண்மையை மறந்தனர். இரு சமூகத்தாருள்ளும் பரஸ்பர அவநம்பிக்கையும் வெறுப்பும் வளர்ந்தன.

நாடு முழுதும் இங்ஙனம் பகைக்கனல் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த சமயத்தில் மகாத்மாஜி ஒருவர்தாம் தம் நிதானத்தை இழக்காமல் இருந்தார். அன்பால்தான் காரியங்களைச் சமாளிக்க முடியுமென்ற நம்பிக்கை அன்றும் அவர் மனத்தில் சுடர் விட்டு எரிந்துகொண்டிருந்தது. சேவாக் கிராமத்திலிருந்து கல்கத்தா சென்று அங்கு இந்துக்களுக்கு அன்பு உபதேசம் செய்தார். இதை அவர்கள் முதலில் உணர வில்லை, அவர் இருந்த வீட்டை இடித்து அதன்மேல் கல்லும் எரிந்தார்கள். மகாத்மாஜி எதற்கும் அஞ்சாமல் அவர்கள் மத்தியில் இருந்து அவர்கள் செய்கையில் உள்ள பிழையை உணர்த்தினர். அதற்குமேல் கொஞ்சம் சமாதானம் நிலவியது. ஆனால் அவர்கள், "இங்கு எங்களுக்குச் சமாதான வார்த்தை களைக் கூறி வந்த நீங்கள் கிழக்கு வங்காளத்திற்குச் சென்று இந்துக்களை முகமதியர்களின் அக்கிரமங்களினின்றும் காப்பாற்ற முடியுமா? என்று கேட்டார்கள். "அப்படியே செய்வேன்" என்று மகாத்மாஜி கிழக்கு வங்காளத்திற்குப் புறப்பட்டார்.

மகாத்மாஜியின் நவகாளிப் பிரயாணம் உலக சரித்திரத்தி லேயே அற்புதமானது. மகாத்மாஜி இப்பணியை ஒரு தவமாக மேற்கொண்டார். பலர் அவரை அங்கே போகவேண்டா மென்று தடுத்தனர். வெறிபிடித்த முகமதியப் போக்கிரிகள் நிறைந்த நவகாளிப் பிரதேசத்தில் அவர் உயிருக்கு ஆபத்து நேரிடுமென்று அவர்கள் பயந்தார்கள். அதனுடன் அவரோடு செல்லக்கூடிய அவருடைய பேத்திகள் முதலிய பெண்களுக்குக் கேடு ஏற்படுமென்றும் அவர்கள் அஞ்சினர்கள். தம்முடைய உயிரை இழக்க அவர் எப்பொழுதும் தயாராக இருந்தார் என்பதை அனைவரும் அறிவார்கள். தம் கொள்கைகளுக்காகத் தம் அன்பைப் பெற்ற குழந்தைகளையும் ஆபத்துக்குள்ளாக்க அவர் துணிவார் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் அவர் செய்தது அனைவருக்கும் வியப்பை உண்டாக்கியது. "லட்சக்கணக்கான இந்துப் பெண்கள் அங்கே தைரியமாயிருக் கும்படி சொல்லும் நான், என் பேத்திகள் மாத்திரம் இங்கே

பாதுகாப்பாக இருக்கட்டும் என்று நினைப்பது சரியல்ல. அவர்களையும் அங்கே அழைத்துச் சென்று நவகாளிப் பெண்மணிகளுக்குத் தைரியம் ஊட்டுவேன்'' என்று சொல்லி அங்ஙனமே அழைத்துச் சென்றார். அதோடு தமக்குச் சேவை செய்துவந்த ஸ்ரீமதி சுசீலா நய்யார் போன்ற சகோதரிகளையும் ஆங்காங்கே கிழக்கு வங்கப் பெண்களுக்குப் பணியாற்றும்படி செய்தார்.

நவகாளி யாத்திரை உலக சரித்திரத்திலேயே சேவைத் துணிவுக்கும் அன்பிற்கும் அருளுக்கும் சிகரமாக விளங்குகிறது. மகாத்மாஜியின் அஹிம்சை அநுபவத்தில் அது தனிச் சிறப்பு வாய்ந்த பகுதி. நவகாளி ஜில்லா சுற்றுப் பிரயாணத்தைக் கால்நடையாகச் செல்வதெனவும், அதுவும் காலில் பாதரட்சையும் இல்லாமல் புனித யாத்திரைபோல வெறுங் கால்களால் நடப்பது என்றும் அவர் தீர்மானம் செய்துகொண்டார். அங்கு இருந்த முகமதிய மூர்க்கர்களின் மனத்தில் இருந்த வெறுப்பையும் பகைமையயுப் மாற்றவே இதை அவர் தவமாக மேற்கொண்டார். ஏசுநாதர் அக்காலத்து மக்களின் பாவத்தைப் போக்க அவர்களுக்குப் பதிலாகத் தாம் கஷ்டங்களை மேற்கொண்டு சிலுவையில் மாண்டதாகக் கிறிஸ்துவ நூல் சொல்கிறது. மகாத்மாஜியும் அங்ஙனமே நவகாளியில் அக்கிரமம் செய்தவர்களின் பாவங்களைப் போக்க இக்கடுந் தவத்தை மேற்கொண்டார் போலும். அவர் சென்ற காலம் கடுங் குளிர் காலம், அதிகாலையில் வெறுங்காலில் நடக்கும் போது கற்கள் முள்ளைப்போல் குத்தி, கத்திபோல் சில சமயங்களில் வெட்டவும் செய்யும். மகாத்மாஜி இக்கஷ்டங்களைப் பொருட்படுத்தவில்லை. சிரித்த முகத்தோடு கிராமந்தோறும் வீதிதோறும் வீடு விடாகச் சென்று ஆறுதல் சொல்லி வந்தார். முகம்மதியப் போக்கிரிகள் சிலர் அவர் கூட்டங்களைக் கலைக்க முயற்சி செய்தனர். அவர் சுற்றுப் பிரயாண விவரங்கள் முன்னமேயே அறிவிக்கப்பட்டன. அதைத் தெரிந்த மூர்க்கர்கள் அவர் போகும் வழியில் ஆணிகளையும் கண்ணாடித் துண்டுகளையும் பதித்து வைப்பார்கள். இதைத் தெரிந்த அன்பர்கள்

சிலர் அவ்வழிகளில் செல்ல வேண்டாமென அவரைத் தடுப்பார்கள். "ஆண்டவன் பாதுகாத்தால் எவரே என்னை அழிக்க முடியும்? ஆண்டவன் காப்பாற்ருவிடில் எவரே என்னைக் காப்பாற்ற முடியும்?" என்று சொல்லி முன் போட்ட திட்டத்தை மாற்றவே மாட்டார். பல சமயங்களில் அவர் பாதங்களில் புண் நிறைந்திருக்கும். ஆனுல் அவை அனைத்தையும் சந்தோஷத்துடன் ஏற்பார். அவர் காட்டிய அன்பால் பல முஸ்லீம்கள் தூய்மை அடைந்து அவர்பால் இழுக்கப் பட்டனர். சிலர் அவரைத் தங்கள் வீடுகளுக்கும் விருந்தினராக அழைத்தார்கள் இதை அறிந்த மூர்க்கர்கள் சிலர், மகாத்மா ஜிக்கு விருந்தளித்தால் அவர்கள் வீட்டை எரித்து அவர்களைத் துன்புறுத்துவதாகப் பயமுறுத்தினர். அதனுல் மகாத்மாஜி வரும்போது தங்கள் வீட்டிற்குள் வரவேண்டாமென்று அவர்கள் சொல்லுவார்கள். மகாத்மாஜியோ கொஞ்சமும் கோபம் உண்டாகாமல் அவர்கள்பால் இரங்கி அவர்களுக்கு ஆறுதல் சொல்லி மேற்செல்லுவார். இங்ஙனம் நவகாளி யாத்திரையின் போது நேர்ந்த சம்பவங்கள் பல.

பல மாதங்கள் மகாத்மாஜி இத்தகைய வாழ்க்கையை மேற்கொண்டார். தம் தவத்தைக் கடுமையாக்கிக் கொள்ளும் பொருட்டுத் தாமே மேற்கொண்டிருந்த வசதிகளை ஒவ்வொன்ருகக் குறைத்துக் கொண்டார். தமக்குப் பணியாற்றிவந்த ஸ்ரீ பியாரிலால், ஸ்ரீமதி சுசீலா நய்யார் போன்ற அன்பர்களைப் பேருக்கு ஓர் இடத்திற்குச் சேவை செய்ய அனுப்பிவிட்டு, தம் காரியங்கள் அனைத்தையும் தாமே கவனித்து வந்தார். தமக்கு வேண்டிய உணவைத் தாமே தயார் செய்துகொண்டார். துணி மணிகளையும் தாமே சுத்தம் செய்துகொண்டார். இவைகளை யக்ஞமாக மேற்கொண்டபடியால் அங்கு இருக்கும் வரையில் மற்றவர்களையும் தமக்கு உதவி செய்ய அநுமதிக்கவில்லை. அப்பொழுது அவருக்குச் சுமார் எழுபத்தாறு வயசு இருக்கும். இந்நிலையில் அவர் மேற்கொண்ட பணி எவ்வளவு கடுமை யானதென்பதை நேயர்கள் ஊகித்தறிந்துகொள்ளலாம்.

பல மாதங்கள் இங்ஙனம் கழிந்த பிறகு, கொஞ்சங் கொஞ்சமாக நவகாளி மக்கள் வாழ்க்கையில் அபிவிருத்தி தோன்றியது. மக்கள் மனத்திலிருந்த வெறுப்புணர்ச்சி ஒரு வாறு அப்போதைக்காவது மறைந்தது ; இந்துக்களும் முஸ்லீம் களும் ஒன்றுப் பழகத் தொடங்கினர்கள். இந்துக்கள் மனத் தில் இருந்த பயமும் கொஞ்சங் கொஞ்சமாகக் குறையத் தொடங்கியது. மூர்க்கர்களும் தங்கள் மூர்க்கத்தைப் பற்றி வெட்கப்படத் தொடங்கினர்கள். மற்ற இடங்களிலும் மகாத் மாஜி செய்யவேண்டிய பணிகள் மிக அதிகமாக இருந்தன; எனவே, நவகாளியை விட்டுப் புறப்பட வேண்டியிருந்தது.

மகாத்மாஜி நவகாளியை விட்டுப் புறப்பட்டபோது, லட்சக் கணக்கான மக்கள் கண்ணீர் விட்டு அழுதனர். தங்களை மூர்க்கர் கையிலிருந்து காப்பாற்றித் தங்களுக்கு ஆண்மையும் பலமும் அன்பும் தூய்மையும் அளித்து வந்த மகாபுருஷரை விட்டுப் பிரிவதை அவர்கள் எங்ஙனம் சகிப்பார்கள்! பலர் 'ஓ' வென்று கதறி அழுதனர். பல முஸ்லீம்களும் அவருடைய அன்பால் கவரப்பட்டு அவரை விட்டுப் பிரிய இயலாமல் விம்மி விம்மி அழுதனர். ஏதாவது நேர்ந்தால் மீண்டும் வருவதாக அவர் வாக்களித்தபோதுதான் அவர்களுக்குக் கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது.

# 25. வெற்றியும் வருத்தமும்

*1946*-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி கல்கத்தாவில் ஆரம்பித்த சமூக வெறி நாடெங்கும் பரவி எல்லையில்லாக் கொடுமைகளை உண்டாக்கியது. இரு சமூகத் தாரும் இவ்வெறியில் மனிதத் தன்மையை இழந்து ரத்த வெறி பிடித்த மிருகங்கள்போல் ஆனார்கள். கல்கத்தா சம்பவங்கள் நவகாளியைத் தூண்டின. நவகாளியில் நடந்த அக்கிரமங்கள் பீஹார் மாகாணத்தில் நெருப்பைக் கிளப்பி விட்டன, நவகாளி முஸ்லீம்கள் மிகுந்த இடம் அங்கு இந்துக்கள் அளவில்லாத் துன்பங்களுக்கும் அவமானங்களுக்கும் உட்படுத்தப்பட்டனர். ஆனால் பீகாரில் இந்துக்கள் அதிகம். நவகாளியில் இந்துக் களுக்கு இழைத்த கொடுமைகளுக்குப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணத்தால் தூண்டப்பெற்றுச் சிலர் அங் கிருந்த முஸ்லீம்களைக் கொள்ளை அடித்தனர்; கொலையும் செய் தனர். இந்த ரத்த வெறி ஐக்கிய மாகணத்திற்கும் பரவியது. ஐக்கிய மாகாணத்தில் கங்கைக் கரையில் கர்முக்தேசுவரம் என்ற ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கு இந்துக்கள் தீர்த்த யாத்திரை செய்யும் காலம் ஒன்றுண்டு. அங்கே சென்று கொண்டிருந்த யாத்திரிகர்கள் முஸ்லீம்களால் தாக்கப்பட்டனர் என்ற வதந்தி கிளம்பியது. உடனே இந்துக்களுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. முஸ்லீம்களைத் தாக்கினர். அவர்கள் வீடுகளை எதிர்த்தனர். பலாத்காரம் மிகுந்தது. பல முஸ்லீம் பெண் களும் கடத்திச் செல்லப்பட்டனராம். இவ்வெறி வட இந்தியா வோடு நிற்காமல் தெற்கேயும் பரவியது பம்பாய் நகரம் இந்தியாவில் எல்லா விதங்களிலும் பெரிய நகரங்களில் ஒன்று. அங்கும் இந்து முஸ்லீம் கலவரங்கள் ஆரம்பித்தன. பல வாரங்கள் பம்பாய் நகரம் களை இழந்து, பாழடைந்து தென் பட்டது. தெருக்களில் ஜன நடமாட்டம் இல்லை. வியாபாரம் முதலியன அனைத்தும் நின்று போயின. எல்லா முக்கியத் தெருக்களிலும் துருப்புகள் துப்பாக்கியுடன் காவல் செய்து கொண்டிருந்தன.

கல்கத்தாவிலும் சண்டை ஓய்ந்தபாடில்லை. அச்சமயம் நான் டில்லியிலிருந்து கல்கத்தா சென்றுகொண்டிருந்தேன். என்னுடன் ரெயிலில் வந்துகொண்டிருந்த ஒருவர், "எங்கே செல்லுகிறீர்கள்?" என்று கேட்டார். "பேலுர் ஸ்ரீராம கிருஷ்ண மடத்திற்கு" என்றேன். "அங்கே எப்படிச் செல்லு வீர்கள்? முஸ்லீம்கள் வசிக்கும் இடங்களைக் கடந்து செல்ல வேண்டுமே! அப்படிச் சென்ருல் உங்களுக்கு ஆபத்து நேரிடுமே!" என்ருர். அவர் மீண்டும், "தயை செய்து முஸ்லீம்கள் ஓட்டும் வண்டியிலோ மோட்டாரிலோ ஏருதீர்கள். சீக்கியர்கள் அல்லது இந்துக்கள் ஓட்டும் வண்டியில் மட்டுமே ஏறவேண்டும்" என்று எச்சரிக்கை செய்தார். கல்கத்தாவில் அப்பொழுது இருந்த நிலை மிகவும் பயங்கரமானது. எந்தக் கணத்தில் மறுபடியும் இரு சமூகத்தாருக்குள்ளும் போர் நேரும் என்று சொல்ல முடியாமல் இருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் போன்ற ஆசிரமங்களும் ஆலயங்களுங்கூட அடுத்த கணம் என்ன நிலை அடையுமோவென்று பயந்திருந்தார்கள். அப் பொழுதிருந்த வங்க சர்க்காரும் முஸ்லீம் குண்டர்களுக்கும் அநுகூலமாக இருந்தாகப் பொதுவில் ஓர் எண்ணம் இருந்தது. இரு சமூகத்தாருக்குள்ளும் இருந்த அன்பும் சிநேகமும் முற்றும் மறைந்து போயின. முஸ்லீம்கள் பெரும்பான்மையாக வசிக் கும் இடங்களில் வாழ்ந்த இத்துக்கள் தங்கள் வீடு வாசல்களை விட்டு இந்துக்கள் வசிக்கும் இடங்களுக்கு ஓடிவிட்டனர். அங்ஙனமே இந்துக்கள் பெரும்பான்மையாக இருந்த இடங் களில் குடியிருந்த முஸ்லீம்கள், முஸ்லீம்கள் பெரும்பான்மை யாக வசித்து வந்த இடங்களுக்குச் சென்ருர்கள். இங்ஙனம் நாடு முழுவதும் மதவெறி பிடித்து, கொள்ளையும் கொலையும் மிருகத்தனமும் தாண்டவமாடின.

அச்சமயத்தில் டில்லியில் மகாத்மாஜியைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. டில்லியில் மாகாணக் கல்வி மந்திரிகள் மகாநாடு ஒன்று கூடியது. அதற்குச் சென் றிருந்த நான் காந்தியடிகளைத் தரிசிக்கச் சென்றிருந்தேன். அக்காலத்தில் அவர் ஹரிஜனங்கள் வாழ்ந்த சேரியின் ஒரு

பக்கத்தில் தங்கியிருந்தார். அன்று காலை சுமார் பத்து மணி இருக்கும். அங்கே சென்று அவரைப் பார்க்க வந்திருக்கும் செய்தியைச் சொல்லி அனுப்பினேன். கொஞ்ச நேரத்தில் வரும்படி உத்தரவு வந்தது. அவர் இருக்கும் இடம் சென்று தாழ்ந்து வணங்கி உட்கார்ந்தேன். இப்பொழுது இந்திய சர்க்காரில் சுகாதார மந்திரியாக இருக்கும் ஸ்ரீமதி அம்ருத் கவுர் அம்மையார் அப்பொழுது காந்தியடிகளின் அருகில் இருந்து பணிவிடை செல்துகொண்டிருந்தார்கள். வணக்கம் செய்து மகாத்மாஜியை நிமிர்ந்து பாத்ததும், நான் என்றும் கண்டிராத காட்சியை அன்று கண்டேன். என் மனத்தில் ஒருவகை ஆச்சரியமும் திகிலும் உண்டாயின. காந்தியடிகளை நான் பல இடங்களில் பல நிலைகளில் பல சந்தர்ப்பங்களில் சந்தித் திருக்கிறேன். ஆனால், அன்றுபோல் நான் எப்பொழுதும் அவரைக் கண்டதே இல்லை. எப்பொழுதும் காணப்படும் புன்சிரிப்பும், மலர்ந்த முகமும் அன்று காணவில்லை. அன்பும் இன்பமும் கலந்த, "வா, அவிநாசி. எப்படி இருக்கிறாய்?'' என்ற வார்த்தைகளையும் அன்று கேட்கவில்லை அவர் தோற்றம் சோர்வும் துயரமும் உருவெடுத்ததுபோல் தோன்றிற்று. கல்லும் கரையத் தக்க துக்கத்தை உடையவராகத் தென்பட்டார்.

அதன் காரணத்தை நான் முதலில் தெரிந்துகொள்ள வில்லை. அவர் பேச ஆரம்பித்த பிறகு அது ஒருவாறு புல னாயிற்று. அன்று பல விஷயங்களைப்பற்றி என்னிடம் விசாரித் தார். சென்னை மாகாணத்தின் அரசியல் சிக்கல்கள் பல வற்றைப்பற்றிக் கேட்டார். நாட்டின் அன்றைய நிலைமையைப் பற்றிப் பேசினார். அன்று இந்தியாவின் பல பாகங்களிலும் காணப்பட்ட மத வெறியும் பலாத்காரமும் அவரை மிகவும் துன்புறுத்தின. தம் ஆயுள் முழுதும் உபதேசித்து வந்த அஹிம்சையையும் அன்பு நெறியையும் மறந்து, நாட்டில் வெறுப்பும் துவேஷமும் மிகுந்து ஒருவருகொருவர் மிகுந்த துன்பத்தை இழைத்துக்கொண்டது அவர் மனத்தில் சொல் லொணா வருத்தத்தை உண்டாக்கியது. அவர் உள்ளத்தில்

இருந்த ஒளி மறைந்து, இருள் நிறைந்தது போல் ஆயிற்று. இவ்வெறியையும் பலாத்காரத்தையும் விட்டுவிட்டு மீண்டும் அன்பு நெறியைப் பின்பற்றி இரு சமூகத்தாரும் சகோதரர்கள் போல் வாழச் செய்ய ஏதேனும் மார்க்கம் கிடையாதா என்று ஏக்கம் கொண்டிருந்தார். இதுவே அவர் சோர்விற்கு முக்கிய காரணமாக இருந்தது. அதற்கு வேறு காரணமும் இருந்தது. அக்காலத்தில் மாகாணங்கள் பலவற்றிலும் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஆட்சி செய்துகொண்டிருந்தன. அவர்கள் ஆட்சி செய்து வரும் முறையில் ஒருவருக்கொருவர் கட்சி கட்டிச் சண்டையிட்டுக் கொள்ளுதல், பொருமை, வீண் சச்சரவுகள், தகாத காரியங்கள் முதலியனவற்வைப்பற்றி அவருக்கு வந்த செய்திகளும் அவர் மனத்தை மிகவும் புண்படுத்தின. காங்கிரஸ் மகாசபை மகாத்மாஜி உபதேசித்த அஹிம்சா நெறியைப் பின்பற்றி, சென்ற கால் நூற்ருண்டாக வேலே செய்து வந்திருக்கிறது. இங்ஙனம் வேலே செய்தவர்களில் முக்கியமானவர்கள் மாகாணங்களில் மந்திரிகளாக இருந்து பணியாற்றி வந்தார்கள். இத்தகைய நம்பிக்கை வாய்ந்த ஊழியர்களேப் பற்றி மேற்கண்ட செய்திகள் வந்தது, அவர் மனத்தை மிகவும் துன்புறுத்தியது. நாட்டின் பல பாகங்களிலும் சேவா உணர்ச்சியும் கட்டுப்பாடும் மறைந்து, பொருளுக்காகவும் அதிகாரத்திற்காகவும் தவருன காரியங்கள் செய்யப் பட்டு வருவதை அவர் கண்டார். தாம் போதித்து, காங்கிரஸ் அதுவரையில் பின்பற்றி வந்த உன்னதமான லட்சியங்கள் அவ்வளவு சீக்கிரத்திலேயே மறைந்து வருவது அவர் உள்ளத்தில் அளவற்ற துயரத்தை உண்டாக்கியது.

சில மாதங்களில் பாகிஸ்தான் பிரச்னே பலமாயிற்று. ஒரு நாடாக இருந்து இரு சமூகத்தாரும் ஒருவருக்கு ஒருவர் கொலே செய்துகொள்ளுவதைவிட, இந்துக்கள் அதிகமாக இருக்கும் இடங்களே ஹிந்துஸ்தான் என்றும், முஸ்லிம்கள் அதிகமாக இருக்கும் இடங்களேப் பாகிஸ்தான் என்றும் பிரித்துக்கொண்டால் என்ன என்று பலர் கேட்கத் தொடங்கினர்கள். அப்படிச் செய்தால் இரு சமூகத்தாரும் சமாதானமாக

வாழச் சந்தர்ப்பம் உண்டாகும் என்று அவர்கள் நினைத்தார்கள். அன்றைய நிலைமையும் சந்தர்ப்பங்களும் காங்கிரஸ் காரியக் கமிட்டியையும் அம்முடிவுக்கு வரும்படி செய்தன. நாட்டைத் துண்டு போடுவதை ஆரம்பத்திலிருந்து எதிர்த்த மகாத்மாஜியும், அதை ஒருவாறு ஒப்புக்கொள்ள நேர்ந்தது. அப்பொழுது கவர்னர்-ஜெனரலாக இருந்த லார்ட் மவுண்ட் பாட்டனும் இதற்கு அநுகூலமாக இருந்தார். இங்கிலாந்தை ஆட்சி செய்துகொண்டிருந்த தொழிற்கட்சி மந்திரிசபையும் இதை ஒப்புக்கொள்ளவே, இந்தியா பாகிஸ்தான் என இரு நாடுகளாகப் பிரித்து டொமினியன் அந்தஸ்துடன் சுதந்திரம் பெற வேண்டியதென முடிவாயிற்று. இரு நாடுகளும் தனித் தனியாக அரசியல் நிர்ணய சபைகள் கூட்டித் தங்கள் எதிர்கால அரசியல் அமைப்பைத் தீர்மானம் செய்துகொள்ள வேண்டியதெனவும் முடிவு ஏற்பட்டது.

நாட்டை இரண்டாகப் பிரிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தும் நடைபெற்றன. சென்னை, ஒரிஸ்ஸா, மத்திய மாகாணம். பம்பாய், டில்லி, கிழக்குப் பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள், பீஹார், மேற்கு வங்காளம் இவை இந்தியா வாகவும், மேற்குப் பஞ்சாப், சிந்து, எல்லைப்புற மாகாணம், கிழக்கு வங்காளம் இவை பாகிஸ்தானுகவும் இருக்க வேண்டு மென முடிவாயிற்று. அத்துடன் துருப்புகள், உத்தியோகஸ் தர்கள் பலவகைத் தளவாடங்கள், தஸ்தாவேஜுகள் முதலிய பலவற்றையும் பிரிக்க வேண்டியிருந்தது. இந்தப் பெரிய பிரி வினையைக் கூடிய சீக்கிரம் செய்வதே இவ்விரண்டு ராஜ்யங் களுக்கும் நன்மை பயக்குமென நினைத்து எல்லாம் வெகு விரை வில் நடந்தன. 1947-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி இரண்டு நாடுகளும் தனித் தனிச் சுதந்திர நாடுகளாகத் தனி ராஜ்யம் நடத்த ஆரம்பித்தன. இந்தியாவைத் சேர்ந்த மாகாணங்களிலும் டில்லியிலும் இந்தியாவின் சுதந்திரக் கொடியை ஏற்றிச் சைனிகர்களும் போர்ப் படையினரும் ஆங் காங்கே கூடியிருந்த லட்சக்கணக்கான பொதுஜனங்களும் வணக்கம் செய்தார்கள். அது சமயம் கவர்னராக இருந்த

சர் ஆர்ச்சிபால்டு நை சென்னையில் இந்தியத்தேசியக்கொடியை ஏற்றி வைத்தார். அன்று மக்களுக்கு இருந்த உற்சாகம் வரம்பு கடந்ததாக இருந்தது நாடு முழுதும் எல்லா நகரங்களிலும் கிராமங்களிலும் வீடுதோறும் மக்கள் கொடிகளாலும் தோரணங்களாலும் மின்சார விளக்குகளாலும் அலங்காரம் செய்து மிகக் குதூகலத்துடன் சுதந்திர தினத்தைக் கொண்டாடினர்.

ஆனால் இந்த ஆரவாரத்திற்குப் பின்னல் மக்கள் மனத்தில் ஓர் ஆழ்ந்த வருத்தமும் இல்லாமல் இல்லை. நாடு துண்டிக்கப் பட்டது மக்கள் மனத்தில் பெரிய துக்கத்தையும் ஏமாற்றத் தையும் உண்டாக்கியிருந்தது. எதிர்பார்த்ததைப்போல் பூர்ண சந்தோஷத்துடன் சுதந்தரம் வரவில்லை. கொஞ்சம் நஞ்சு கலந்தே வந்ததுபோல் தோன்றிற்று. பாகிஸ்தானில் விடப் பட்ட இந்துக்களின் கதி எதிர்காலத்தில் என்ன ஆகுமோ என்ற பயம் இந்துக்கள் மனத்திலும், இந்தியாவில் தங்கள் நிலைமை எவ்வாறு இருக்குமோ என்ற பயம் முஸ்லிம்கள் மனத் திலும் உள்ளூர இருந்து வருத்தத்தை உண்டாக்கியது. அடுத்த சில மாதங்களில் இவ்வருத்தம் பின்னும் அதிகமாயிற்று. பஞ்சாப் மாகாணமும், வங்காளமும் துண்டாக்கப்பட்டன அல்லவா? அது காரணமாகக் கிழக்குப் பஞ்சாபிலிருந்த இந்துக்கள் சீக்கியர்களில் பெரும்பகுதியினரும் முறையே மேற்குப் பஞ்சாப்பிற்கும் கிழக்குப் பஞ்சாப்பிற்கும் சென்றனர். அங்ஙனம் நாடு கடந்தவர்கள், சுமார் ஐம்பது லட்சம் பேர்கள் இருப்பார்கள். சிறிய அளவில் அது வங்காளத்திலும் நேர்ந்தது. தவிர, ஐக்கிய மாகாணத்திலிருந்த முஸ்லீம்களில் பலர் பாகிஸ்தானுக்கும், சிந்து மாகாணத்திலிருந்த இந்துக் களில் பெரும் பகுதியினர் இந்துஸ்தானுக்கும் வரத் தலைப் பட்னர். லட்சக் கணக்கான மக்கள் தாங்கள் பல தலைமுறை களாக வாழ்ந்து வந்த வீடுகளையும், ஊரையும் நாட்டையும் விட்டு, பெண்டு பிள்ளைகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் பல நூற்றுக் கணக்கான மைல்கள் நடந்து சென்று, தாங்கள் முன் அறிந்திராத புதிய இடங்களில் குடியேறுவதால்

உண்டாகக்கூடிய இடைஞ்சல்களும் கஷ்டங்களும் கொஞ்ச மாகவா இருக்கும் ? அவர்கள் சொத்தில் பெரும்பகுதி கொள்ளை யடிக்கப் பெற்றது; பெண்கள் மானபங்கம் செய்யப்பட்டனர். குழந்தைகளும் மதவெறி பிடித்த துஷ்டர்களால் கொலை செய்யப்பட்டனர். பலர் இக்கஷ்டங்களாலும் துவேஷத்தாலும் தங்கள் மனித சுபாவத்தை இழந்து, அரக்கர்கள்போல், மிருகங்கள்போல், பேய் பிசாசுகள் போல் ஆனதாகத் தோன்றியது. தெய்வாதீனமாகத் தென்னிந்தியா இத்தகைய கோர அநுபவங்களுக்கு உள்ளாகவில்லை. வட இந்தியாவில் அக்காலத்திலிருந்து இவைகளைக் கண்ணுற்றவர்கள் தங்கள் ஆயுள் முழுதும் இக்கொடிய நினைவுகளை அகற்ற முடியாது. பல ஆயிரக்கணக்கான பேர்கள் இது காரணமாகச் சித்தபேத மடைந்தனர். இன்னும் பலர் தங்கள் நரம்பின் பலமிழந்து பலமற்று, வெறும் நடைப்பிணங்களாயினர்.

இந்தியாவின் தலைநகரமான டில்லிநகர் இக்கொடுமை களுக்கும் தலைமைதாங்கி நின்றதுபோல் இருந்தது. பல மாதங்கள் அந்த நகரத்தில் சமாதானம் நிலைபெறவில்லை. இந்துக்களும் முஸ்லிம்களும் ஆயுதம் தாங்கி இரண்டு விரோத சைனியங்கள்போல் நின்று யுத்தம் செய்தனர். இந்தச் சண்டையில் ஆயிரக் கணக்கான பேர்கள் மாண்டிருக்க வேண்டும். தெருக்களில் ரத்தவெள்ளம் ஓடிற்று. இச்சம்ப வங்கள் நடைபெற்ற காலத்தில் மகாத்மாஜியும் டில்லியில்தான் இருந்துகொண்டிருந்தார். இவையனைத்தும் மகாத்மாஜியின் மனத்தில் எத்தகைய அளக்கவொண்ணுத் துயரத்தை உண்டாக்கியிருக்கும் என்பதை எடுத்துக்கூற வேண்டிய அவசியம் இல்லை.

காங்கிரஸ் மகாசபையும் இந்திய மக்களும் சுமார் அறுபது ஆண்டுகள் செய்துவந்த மாபெரு முயற்சியின் காரணமாக இந்தியா சுதந்திரப் போரில் வெற்றி பெற்றது. ஆனுல் அவ் வெற்றியின்போது மக்கள் மனத்தில் இன்பமும் சந்தோஷமும் குடிகொள்ளவில்லை; மிகுந்த வருத்தமும் துன்பமும் துயரமுமே காணப்பட்டன.

இந்நிலைமையில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சுமுக மான உறவு இருக்கும் என்று சாதாரணமாக எதிர்பார்க்க முடியாது. இந்துக்களை வெறுப்பதையே பாகிஸ்தான் தலைவ ராக இருந்த ஸ்ரீ எம். ஏ. ஜின்னு தம் மூலாதாரக் கொள்கை யாகக் கொண்டிருந்தார். எனவே, இரு நாடுகளுக்கும் இடையே பலவிதமான மனஸ்தாபங்கள் வளர்ந்துகொண்டு வந்தன. மனஸ்தாபங்களும் அபிப்பிராய பேதங்களும் அதிகமாகவே, பாகிஸ்தானுக்குச் சேரவேண்டிய யுத்தத் தளவாடங்களை இந்திய சர்க்கார் அனுப்ப முடியாதென மறுத் தது. இதன் விளைவாக இன்னும் என்ன கெடுதல்கள் நேருமோ வெனப் பலர் பயந்தனர். இது கடைசியில் இரு நாடுகளுக்கும் போராக முடியுமென்று சிலர் எதிர்பார்த்தனர். இதுவரையில் ஒரே தேசமாக இருந்து சகோதரர்கள்போல் இருந்த இரு பகுதி களுக்கும் எக்காரணத்தைக் கொண்டும் போர் வரக்கூடாதென மகாத்மாஜி தீர்மானம் செய்துகொண்டார். ஆதலின், தள வாடங்களைக் கொடுத்துவிடும்படி இந்திய சர்க்காரை வற்புறுத் தினர். அப்படிக் கொடுக்காவிடின் தாம் சாகும்வரை உண்ணு விரதம் இருப்பதாகச் சொல்லி விரதத்தையும் ஆரம்பித்தார்.

அச்சமயத்தில் மீண்டும் ஒருமுறை மகாநாட்டுக்காக நான் டில்லி சென்றிருந்தேன். மகாத்மாஜி உண்ணு விரதம் ஆரம் பித்த செய்தி அனைவரையும் திடுக்கிடச்செய்தது. அப்பொழுது அவர் பிர்லா மாளிகையில் இருந்துகொண்டிருந்தார். அவரைக் காணவேண்டுமென்ற ஆவலுடன் அங்கே சென்றேன். உண்ணுவிரதம் இருப்பதால் அவர் சக்தி விரயமாகாமல் இருக் கும்பொருட்டு யாரிடமும் பேச அநுமதிக்கப் படுவதில்லை என்றும், அவரிடம் பேசாமல் கொஞ்சம் எட்டியிருந்து அவரைத் தரிசித்து மாத்திரம் வரலாமென்றும் அங்கிருப்பவர்கள் சொன் னர்கள். அவர் ஒரு மெத்தையின்மேல் படுத்துக்கொண்டிருந் தார். அவர் முகத்தில் ஆழ்ந்த சாந்தமும் சமாதானமும் நிலவிக்கொண்டிருந்தன. உலக முழுதும் வெறிபிடித்து வெறுப்பால் தூண்டப்பட்டுச் சமாதானம் இன்றி வெந்துகொண் டிருந்த காலத்தில் அவர் ஒருவர் மாத்திரம் அதற்கு முற்றும்

மாருக, வேருக, அன்பும் அருளும் நிறைந்தவராகத் தென்பட்டார். "நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம், மலையினும் மாணப் பெரிது" என்று திருக்குறள் சொல்லுகிறது. அதன் பொருள், "ஆசைகளாலும், விருப்பு வெறுப்புக்களாலும் பாதிக்கப்படாமல் எவனொருவன் எந்நிலையிலும் தன் புலன்களை அடக்கிச் சாந்தத்துடனும் சமாதானத்துடனும் வாழ்வானே அவனுடைய தோற்றம் மலையைவிட மகத்தானதாக இருக்கும்" என்பது. அக்குறளின் உண்மைப் பொருளை அன்று நான் உணர்ந்தேன். அவர் மூகத்தில் தோன்றிய சாந்தத்தில் ஒரு சிறந்த சக்தி இருந்தது. அது அனைவரையும் வணங்கச் செய்தது. உண்ணுவிரதத்தின்போது அவர் உடல் மெலிவுற்று, சக்தி குறைந்திருந்தது. ஆனுல் அவருடைய அன்பும் ஆழ்ந்த தூய்மையும் அவருக்கு எல்லையில்லாத சக்தியை அளித்தன. அவர் தம்மைக் காணவந்த அனைவரையும் புனிதமாக்கி அவர்களுக்கு லட்சியத்தில் தைரியமும் உறுதியும் கொடுத்து வந்தார்.

அன்று அவரிடம் பேச இயலவில்லை. ஆனுல் அன்று. அவர் என் உள்ளத்தில் தோன்றச் செய்த உணர்ச்சி மகத்தானதாக இருந்தது. அதுவே நான் மகாத்மாஜியைச் சந்தித்த கடைசித் தடவையாகும்.

# 26. ஜனவரி 30

1948 - ஆம் வருஷம் ஜனவரி மாதம் 30 - ஆம் தேதி வெள்ளிக்கிழமை மாலே, சுமார் 5-45 மணி இருக்கும். மாலேயில் மந்திரிசபைக் கூட்டம் ஒன்றிருந்தது. அதை முடித்துவிட்டுச் சென்னே செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் மந்திரி சபை கூடும் அறைக்கு வெளியில் உள்ள தாழ்வாரத்தில் டாக்டர் ராஜனும் நானும் வேறு சிலரும் நின்று பேசிக்கொண்டிருந்தோம். அப்பொழுது பத்திரிகை நிருபர்கள் இருவர் இரைக்க இரைக்க ஓடிவந்தார்கள். அவர்கள் முகத்தில் கவலேக்குறி நிறைந் திருந்தது. ஓடோடியும் வந்து எங்களேப் பார்த்து, "உங்களுக்கு விஷயம் தெரியாதா? மகாத்மா காந்தி சுடப்பட்டாராம். இப் பொழுதுதான் செய்தி வந்தது. பிரார்த்தனேக் கூட்டத்தில் சுடப்பட்டாராம்" என்ருர்கள். அதைக் கேட்டவுடனே எங் களுக்குத் திக்பிரமை உண்டாயிற்று. என்ன செய்வதென்றே தோன்றவில்லே. அப்படியே அதிர்ச்சியினுல் சில நிமிஷங்கள் அங்கே நின்றுகொண்டிருந்தோம். மகாத்மாஜி அன்புக்கடல்; அஹிம்சா சொரூபியாகிய அவருக்கு இவ்விதம் நேருமென்று நாங்கள் என்றும் எதிர்பார்க்கவில்லே. அச்செய்தியைக் கேட்ட பிறகும் அதை நம்ப முடியவில்லே. அதற்குமேல், அதன் மூலம் அவருக்கு மரணம் ஏற்படலாம் என்பதை நினேக்கவும் முடிய வில்லே. எவ்வளவோ பெரிய விபத்துகளிலிருந்து இதுவரை பிழைத்து வந்தவர் இதிலிருந்து தப்பித்துக்கொள்வார் என்று எங்கள் மனத்திலிருந்த ஆசை நினேக்கச் செய்தது.

அப்பொழுது இன்னும் ஒரு நிருபர் ஓடிவந்தார். இன்னும் எத்தகைய செய்தி வருமோவென்று பயந்து அவர் சொல் வதைக் கேட்டோம். "மகாத்மாஜி உடலில் மூன்று குண்டுகள் பாய்ந்து அவர் அக்கணத்திலேயே காலமாகிவிட்டார்" என்று உணர்ச்சி மிகுதியால் நாக் குழறச் சொன்னுர். அதைக்

கேட்டதும் தலையில் இடி விழுந்ததுபோல் இருந்தது. இந்தியா முழுவதற்கும் வெளிச்சம் கொடுத்துக்கொண்டிருந்த பேரொளி திடீரென்று அணைந்து எங்கும் இருள் மயமானதுபோல் தோன்றிற்று. மகாத்மாஜியை இழந்த பிறகு இன்னும் என்ன என்ன நேருமோவென்ற பயமும் திகிலும் மனத்தில் உண்டாயின. 'சுதந்திரம் பெற்ற பிறகு ஓர் ஆண்டுகூட மகாத்மாஜியை வைத்துக் காப்பாற்ற முடியவில்லையே!' என்ற அளவில்லாத துயரமும் ஏக்கமும் மனத்தை வாட்டின.

ஒன்றும் பேச முடியவில்லை. மெள்ள வீடு போய்ச் சேர்ந்தோம். வீட்டில் ஒன்றுமே செய்யத் தோன்றவில்லை. அதிர்ச்சியால் அயர்ந்திருந்தோம். நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி ஏதும் தெளிவாக நினைக்கத் தோன்றவில்லை. 'ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டு இரண்டயிரம் ஆண்டுகளுக்குப்பின் மறுபடியும் அத்தகைய கொடிய சம்பவம் இன்றுதான் நடந்திருக்கிறது. இதன் பயனை யாரே அளவிட வல்லார்—' என்பனபோன்ற எண்ணங்கள் மனத்தில் தோன்றிக்கொண்டிருந்தன. செய்தி வெகு சீக்கிரம் நகரம் முழுவதும் பரவியிருக்க வேண்டும். கேளிக்கைகள், விளையாட்டுக்கள், சினிமாக்கள் முதலியன அனைத்தும் நின்றன. சிரிப்பும் உல்லாசமும் மறைந்தன. ஒவ்வொரு வீடும் இழவு வீடுமாதிரி நிசப்தமாக இருந்தது. இரவு ஏழரை மணிக்கு டெலிபோன் மணி அடித்தது. என்னவென்று விசாரித்தேன். அப்பொழுது சென்னை மாகாணத்திற்கு ஸ்ரீ ஓ. பி. ராமசாமி ரெட்டியார் பிரதம மந்திரியாக இருந்தார். இரவு 8 மணிக்கு மந்திரிகள் அனைவரையும் கூடும்படி அழைத்திருந்தார். கூட்டத்திற்குப் போலீஸ் தலைமை அதிகாரியும் வந்திருந்தார். தேசத்திற்கு நேர்ந்த இவ் விபத்தினால் என்ன என்ன விளைவுகள் உண்டாகுமோ என்ற அச்சம் அனைவர் மனத்திலும் இருந்தது. 'மக்கள் முஸ்லீம்களின்மேல் கோபங்கொண்டு அவர்களை அழிக்கத் தலைப்பட்டால் என்ன செய்வது? எந்த விதமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும்?' என்பதைப்பற்றி ஆலோசித்தோம். ஆனால் முன்யோசனையுடன் ரேடியோவில்

இச்செய்தியைச் சொன்னபோதெல்லாம், "சுட்டவன் ஓர் இந்து" என்பதை விளக்கமாகச் சொல்லி வந்தார்கள். எனினும், உள்நாட்டுப் பாதுகாப்புக்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தும் மாகாணம் முழுதும் செய்யப்பட்டன.

அன்றிரவும் அடுத்த சில தினங்களும் எங்கும் ஒரே துக்க மயமாக இருந்தது. பலர் ஓவென்று கதறி அழுதனர். குழந்தைகளிலிருந்து வயோதிகர்கள் வரையில் பல ஆயிரக்கணக்கான குடும்பங்கள் உணவருந்தவில்லை. ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தங்கள் தாய் தந்தை இறந்ததுபோல் உணர்ச்சி மேலிட்டுத் துயரத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அத்துடன் மக்கள் மனத்தில் விவரிக்க முடியாத பீதியும் இருந்தது. 'இதுவரையில் மகாத்மாஜி நமக்கு வழிகாட்டியாக இருந்தார். இனிமேலும் சுதந்திர இந்தியாவை நடத்த அவர் வழிகாட்டியாக இருப்பார் என்று நம்பியிருந்தோம். அவர் இருக்கும் வரையில் நமக்கு வேறு கவலை இல்லை; அவர் சொன்னபடி செய்து வந்தோம். இனிமேல் நமக்கு அத்தகைய தலைவர் ஏது?' என்ற பயமும் ஏக்கமும் எல்லோர் மனத்திலும் குடிகொண்டிருந்தன. ஹரிஜனங்கள் அவரைத் தங்கள் ஆருயிர்த் தந்தையாகக் கொண்டிருந்தார்கள். அவரே அவர்களுக்குப் புகலிடமாக விளங்கி வந்தார். இனிமேல் தங்களை அவ்வளவு அன்புடன் காப்பாற்ற வேறு யார் இருக்கிறார்கள் என்று அவர்கள் கதறினார்கள். முஸ்லீம்கள் ஒரு காலத்தில் முஸ்லீம் லீகை நம்பி மகாத்மாஜியை வைதிருக்கலாம். ஆனால் நாள் செல்லச் செல்ல, அவர்களைக் காப்பாற்றி வந்தவர் மகாத்மாஜி தாம் என்ற உண்மையை அறிந்து வந்தார்கள். இப்பொழுது அப்பாதுகாப்பு மறைந்துவிட்டது இனிமேல் தங்களைக் காப்பவர் யார் என்று அவர்களும் துயரத்தில் ஆழ்ந்தார்கள். இந்தியா முழுவதும் அவரைத் தலைவராகக்கொண்டு அவருடைய அன்பைப் பெற்று, ஆங்காங்கே கிராமங்களிலும் நகரங்களிலும் பணியாற்றி வந்த தொண்டர்கள் பட்ட துயரத்தை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. அவர்கள் நிலைமை பிறவிக் குருடன் ஒருவன், கண் பார்வை பெற்று

இன்புற்றிருக்கும் சமயம், திடீரென்று மீண்டும் அப்பார்வையை இழந்ததுபோல இருந்தது. இங்ஙனம் நாடு முழுவதும் இமயத்திலிருந்து கன்யாகுமரிவரை துயரத்தில் ஆழ்ந்திருந்தது.

இவ்விபத்தின் விவரங்களை அறிய மக்கள் துடித்துக் கொண்டிருந்தனர். 'அவரைக் கொன்ற கயவன் யார்? எதற்காக அனைவரும் வெறுக்கும் இக்காரியத்தை அவன் செய்தான்? இந்திய நாட்டின் விலை மதிக்கவொண்ணாத பொக்கிஷமாகிய மகாத்மாஜியின் உயிரைக் காப்பாற்ற முடியாத இந்திய சர்க்கார் எவ்வளவு மோசமானது!' என்று பலவிதமான கேள்விகளைக் கேட்டுக்கொண்டும் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டும் இருந்தனர். விபத்தின் விபரங்கள் அடுத்த நாள் பத்திரிகைகளில் வந்தன. கொலை செய்தவன் பெயர் நாதுராம் கோட்ஸே. அவன் இந்துமகா சபையைச் சேர்ந்தவனும். மராட்டியப் பிராம்மணன். அன்றும் வழக்கம்போல் மகாத்மாஜி பிரார்த்தனைக்கு வந்திருக்கிறார். இரு பக்கங்களிலும் அவர் பேத்திகள் இருந்து அவரைப் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு அழைத்துக்கொண்டு போனார்கள். கோட்ஸே தயாராகக் காத்துக்கொண்டிருந்தான். அவனைக் கடந்து செல்லும்போது "மகாத்மாஜி, இன்று காலதாமதமாகி வந்திருக்கிறீர்களே?'' என்று கேட்டான். அவரும், "ஆம், கொஞ்சம் தாமதமாகி விட்டது" என்று பதில் சொன்னார். அவரை வணங்குவது போல் குனிந்து தன் நீளச் சட்டைப் பையில் இருந்த கைத் துப்பாக்கியை எடுத்து மற்றவர்கள் அதைக் கவனிக்குமுன் படார், படார், படார் என்று மூன்று தடவை சுட்டான். மகாத்மாஜி தாக்கப்பட்ட உடனே கையைக் கூப்பி, ''ஹரே ராம், ஹரே ராம்" என்று குப்பிட்டுக் கீழே விழுந்துவிட்டார். மூன்று குண்டுகளும் அவர் உடம்பில் பாயவே, ரத்தம் பீறிட்டு வந்தது. அவரை வீட்டிற்கு எடுத்துச் சென்றார்கள். சில நிமிஷங்களில் உயிர் நீங்கியது. கோட்ஸே கைத்துப்பாக்கியுடன் கைது செய்யப்பட்டான். இவைகளே பத்திரிகைகளில் வந்த செய்திகள்.

இந்தச் சம்பவங்கள் நடைபெற்ற தினத்திற்குச் சிலவாரங்களுக்கு முன்னிருந்தே பலவிதமான வதந்திகள் உலாவி வந்தன. நாடு துண்டு போடப்பட்டது காரணமாக மேற்குப் பஞ்சாபிலிருந்து லட்சக்கணக்கான அகதிகள், இந்துக்களும் சீக்கியர்களும், டில்லியிலும் அதைச் சுற்றிலுமுள்ள பிரதேசங்களிலும் குடியேறியிருந்தார்கள். இந்த அகதிகள் தங்கள் வீடு, பூமி, சொத்துக்கள் முதலிய அனைத்தையும் இழந்து முஸ்லீம் மூர்க்கர்களால் எல்லையில்லாத் துன்பங்களுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாகியிருந்தனர். பல சந்தர்ப்பங்களில் பெண்களும் மானபங்கப் படுத்தப்பட்டு, குழந்தைகளும் அம் முகம்மதியக் குண்டர்களால் கொலையுண்டனர். மகாத்மா முஸ்லீம்களின்பால் காட்டிய அன்பும், அவர்களைக் காப்பாற்ற அவர் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளும் அவர்கள் மனத்தில் மிகுந்த கோபத்தை உண்டாக்கின. தங்கள் துக்கங்கள் அனைத்திற்கும் காரணம் முஸ்லீம்களே என்று நினைத்தார்கள். எனவே, அவர்களின்மேல் பழிக்குப் பழி வாங்கும்பொருட்டு இந்தியாவிலிருக்கும் முஸ்லீம்களைக் கொள்ளையடித்தும் மானமங்கப் படுத்தியும் துன்புறுத்த வேண்டுமென்பது அவர்கள் துணிபு. இதற்கு மகாத்மாஜி இடைஞ்சலாக இருந்தாரென்று அவர்கள் நினைத்தார்கள். அவரைக் கொன்று விட்டால் அதற்குப் பிறகு தங்கள் விருப்பம் நிறைவேறுமென்றும் அவர்கள் கருதினர்கள். எனவே, 'மகாத்மா காந்தி முர்தாபாத்' (மகாத்மா காந்தி சாகட்டும் என்பது இதன் பொருள்) என்ற கோஷங்களையும் சில சமயங்களில் கிளப்பினர்கள். மகாத்மாஜியைக் கொல்லச் சிலர் சதி செய்துகொண்டிருக்கிறர்கள் என்ற வதந்தியும் பலமாக உலவி வந்தது. இதை அறிந்த மத்திய சர்க்கார் அவரை இத்தகைய சதியிலிருந்து காப்பாற்றும் பொருட்டு ஓர் இரகசிய போலீஸ் படையும் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆனல் அவர்களால் ஏதும் கண்டுபிடிக்க முடியவில்லை. மகாத்மா கொலையுண்டதற்குச் சில தினங்களுக்குமுன் அவர் பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் ஒரு வெடிகுண்டு வீசப்பட்டது. அப்பொழுது தான் ஆபத்து எவ்வளவு நெருங்கியிருக்கிறதென்று புலனயிற்று.

எனவே, அவரைக் காப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் இன்னும் அதிகமாகச் செய்யப்பட்டன. ஆனல் அவர் பிரார்த்தனைக் கூட்டங்கள் வெட்ட வெளியில் நடந்துகொண்டிருந்தன. அதற்கு ஆயிரக்கணக்கான பேர்கள் வந்துபோய்க்கொண்டிருந்தனர். அவர்களில் யார் அவருக்கு ஆபத்து விளைவிப்பார்கள் என்று எப்படிச் சொல்வது? இந்நிலையில் அவரை எப்படிக் காப்பாற்றுவதென்ற பிரச்னை கிளம்பியது. அன்னியர்கள் எவரையும் விடாமல் வீட்டிற்குள்ளேயே பிரார்த்தனை நடத்தும்படி மகாத்மாஜியை வற்புறுத்தவேண்டும்; அல்லது பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வரும் ஒவ்வொருவரையும் சோதனை செய்து உள்ளே விடவேண்டும். இவ்விரண்டில் ஏதாவது ஒரு முறையை மேற்கொள்ள வேண்டுமென்று போலீசார் வற்புறுத்தினர். ஆனல் மகாத்மாஜி இவ்விரண்டையும் ஏற்றுக்கொள்ளவில்லை. "என் உயிருக்குப் பயந்து, பிரார்த்தனையில் கலந்துகொள்ள விரும்புகிறவர்களை வரவோட்டாமல் தடுத்து வீட்டிற்குள்ளே பிரார்த்தனையை நடத்த இசைய மாட்டேன். பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வருபவர்களைச் சோதனை போடவும் நான் ஒப்பமாட்டேன். நான் கொலை செய்யப்படவேண்டுமென்பது ஆண்டவன் சித்தமானல் அது அங்ஙனமே ஆகட்டும். ஆனல் அதற்காக மற்றவர்களைச் சோதனைக்கு உட்படுத்துவதை நான் விரும்பவில்லை" என்றார். எனவே, இவ்விபத்தைத் தடுக்க இயலாமல் போயிற்று.

அவர் கொலையுண்ட செய்தி உலகமெங்கும் துயரத்தை உண்டாக்கிற்று. உலகில் அநேகமாக எல்லா நாடுகளிலும் புத்தகங்கள் மூலமும் பத்திரிகை மூலமும அவரைப்பற்றி அறிந்து அவர் புனித நெறியைப் பின்பற்றி வந்த இளைஞர்கள் பலர் இருந்தனர். இச்செய்தி அவர்களுக்கு இடியென வந்தது. மறுதினம் சுமார் இருபது லட்சம் மக்கள் டில்லி யமுனை நதிக்கரையில் நடைபெற்ற ஈமச் சடங்குகளில் கலந்து கொண்டார்கள். மக்கள் அவர் திருமேனியைக் கடைசித் தடவையாக வணங்கச் சந்தர்ப்பம் அளிக்கும்பொருட்டு, அதைப் பிர்லா மாளிகையிலிருந்து யமுனை நதிக்கரை வரை ஊர்வலமாக

எடுத்துச் சென்றார்கள். எல்லா விதமான படைகளும் வணங்க இந்திய ராஜ்யத்தின் மந்திரி, பிரதானிகள் முதலிய அனைவரும் புடைசூழ, ஒரு ராஜ்யத்தின் தலைவருக்குக் கொடுக்கக் கூடிய எல்லா மரியாதைகளுடனும் ஊர்வலம் சென்றது. ஆனால் யாரே மக்கள் மனத்தில் குமுறிய துக்கத்தைத் துடைக்க வல்லார்? யமுனை நதி தீரத்தில் ராஜ்காட் என்ற இடத்தில் அவர் திருவுடல் தகனம் செய்யப் பெற்றது. மறுநாள் அஸ்தியைச் சேகரித்து நாட்டில் ஆங்காங்கு இருக்கும் தீர்த்தங்கள் அனைத்திலும் போடுவதற்காகச் செப்புச் செம்புகளில் அனுப்பினர். திரிவேணி சங்கமத்தில் நடைபெற்ற சடங்கில் சுமார் நாற்பது லட்சம் பேர்கள் கலந்துகொண்டார்கள். கோதாவரி, கிருஷ்ணா, காவேரி, ராமேஸ்வரம், தென்குமரி முதலிய புனித க்ஷேத்திரங்கள் அனைத்திற்கும் அஸ்தி எடுத்துச் செல்லப் பட்டது. அவர் அஸ்தியை ஸ்ரீரங்கத்திற்கு அருகில் காவேரியில் கரைக்கும் புண்ணியப் பணியைச் செய்ய டாக்டர் ராஜனுடன் நானும் புறப்பட்டேன்.

சென்னைக்குக் கொண்டுவரப்பெற்ற அஸ்தி மவுண்ட் ரோடில் உள்ள சர்க்கார் மாளிகையில் ராஜாஜி மண்டபத்தில் அலங்காரம் செய்து வைக்கப்பட்டிருந்தது. அனுதினமும் அர்ச்சனையும், மகாத்மாஜிக்குப் பிரியமான நூற்பு யக்ஞமும் பஜனையும் அங்கு நடைபெற்று வந்தன. லட்சக்கணக்கான மக்கள்-ஆண்களும் பெண்களும்-அங்கே பக்தி சிரத்தையுடன் வந்து வணங்கிச் சென்றனர். கடைசியில் அஸ்திப் பாத்திரங்களை ஆங்காங்கே காவேரி முதலிய இடங்களுக்கு எடுத்துச் செல்லும் நாள் வந்தது. காந்தி மகாத்மாவின் அஸ்தியைத் தரிசிக்க வழி முழுதும் லட்சக்கணக்கான மக்கள் ஆர்வத்துடன் காத்துக்கொண்டிருந்தார்கள். மக்கள் தரிசிப்பதற்கு ஏற்றவாறு அதெற்கென தனி வண்டியில் அஸ்திப் பாத்திரம் சிங்காரிக்கப் பெற்று ரெயில் தொடரின் கடைசியில் சேர்க்கப்பட்டிருந்தது.

காலை எட்டு மணி சுமாருக்கு நாங்கள் எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டோம். வழி முழுவதும் நாங்கள் கண்ட காட்சிகள் எங்கள் வாழ்நாள் முழுதும் மறக்க முடியாதவை.

மகாத்மாஜியின்பால் மக்களுக்கிருந்த பக்தியும் ஆர்வமும் எல்லே கடந்தனவாக இருந்தன. எங்கள் யாத்திரையின்போது மட்டும் அஸ்தியைக் கண்டு தரிசித்தவர்கள் சுமார் இருபது லட்சம் பேர் இருக்கலாம். இங்ஙனம் நாடு முழுவதிலும் கோடிக்கணக்கான மக்கள் தரிசித்திருக்கவேண்டும். சென்ற இடங்களில் எல்லாம் பதிஞயிரக்கணக்கான மக்கள் திரள் திரளாகத் தெய்வத்தைத் தரிசிப்பதுபோல் பயபக்தியுடன் கூடி யிருந்தார்கள். "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற கோஷங் கள் வானைப் பிளந்தன. பல்லாயிரக்கணக்கான பேர் உணர்ச்சி மேலீட்டால் தேம்பித் தேம்பி அழுதனர். ஆயிரக்கணக்கான மக்கள், ரெயில் பாதைக்கருகிலுள்ள கிராமங்களில் இருந்த வர்கள். ஓடுகிற ரெயிலில் இருந்த அஸ்திப் பாத்திரத்தைக் கண்ணுற்றுக் கீழே விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார் கள். ரெயில் நிலையங்களில் பதிஞயிரக்கணக்கான மக்கள் காத்துக்கொண்டிருந்தனர். அங்கு இடங் கிடைக்காமல் இரு புறத்திலுமுள்ள வீடுகள், மாடிகள், சுவர்கள், மரங்கள், கைகாட்டி மரங்கள் முதலியன அனைத்தும் மக்கள் மயமாக இருந்தன. கடைசியில், திருச்சிராப்பள்ளி போய்ச் சேர்ந்த போது இன்னும் மகத்தான காட்சி காத்துக்கொண்டிருந்தது.

திருச்சி போய்ச் சேரும்போது இரவு சுமார் 11-மணி இருக்கும். அங்கு ஒரு மைதானத்தில் பெரியதொரு பந்தல் போட்டு, மத்தியில் மேடை அலங்கரித்திருந்தனர். அஸ்திப் பாத்திரத்தை அம்மேடையின் மத்தியில் வைத்து பூமாலைகள் சூட்டப்பட்டன. பதிஞயிரக்கணக்கான மக்கள் இரவு முழுவதும் அஸ்தியைத் தரிசிக்க வந்து காத்துக்கொண்டிருந்தார்கள். கீதை உபநிடதப் பாரயாணங்களும் பஜனைகளும் மாறி மாறி நடந்து கொண்டிருந்தன. அடுத்த நாள் அதிகாலையில் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பெற்ற சப்பரத்தில் அஸ்தியை வைத்து ஊர்வலம் வந்தார்கள். ஊர்வலம் சென்ற சுமார் நான்கு மைல்களும் லட்சக்கணக்கான மக்கள் காத்திருந்து வணங்கினர். கடைசியில் காவேரிக் கரையைச் சேர்ந்தபோது அங்கு ஒரே ஜன சமுத்திர மாக இருந்தது. சுமார் நான்கு அல்லது ஐந்து லட்சம்

பேருக்குமேல் இருப்பார்கள். பெண்கள் மாத்திரம் ஒரு லட்சம் இருப்பார்கள். இத்தகைய பெரிய கூட்டம் திருச்சிராப்பள்ளி யின் சரித்திரத்திலே காணுதது. அஸ்திக் கலசத்தைத் தலையில் தாங்கிச் செல்லும் பாக்கியத்தை நான் பெற்றேன். ஆற்றுக்கு மத்தியில் அனைவரும் ஆவலோடு காத்துக்கொண்டிருந்தனர். டாக்டர் ராஜன் அவர்கள் பாத்திரத்தைத் திறந்து, அதில் சந்தனக் குழம்பை ஊற்றிக் கரைத்து, லட்சக்கணக்கான மக்கள் 'மகாத்மா காந்திக்கு ஜே' சொல்ல, காவேரியில் கரைத்தார். அன்று மக்களுக்கு இருந்த வருத்தமும் ,ஆவேசமும் பக்தியும் அளவு கடந்தனவாக இருந்தன.

# 27. நித்திய வாழ்வு

மகாத்மா காந்தி காலமானதற்காகக் கோடிக்கணக்கான மக்கள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் ஆழ்ந்த துக்கத்தை அடைந்தார்கள். ஒரு தனி மனிதனுடைய மரணத்தால் இவ்வளவு பேர் பாதிக்கப்பட்டது உலக சரித்திரத்திலேயே இருந்திராதெனச் சொல்லலாம். ஆனால் அவருக்காக எவரும் துக்கப்படவேண்டிய அவசியமில்லை. சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னமேயே தமக்கு எத்தகைய மரணம் நேரும் என்பதை அவர் குறிப்பிட்டிருந்தார். எனவே, இத்தகைய மரணம் நேர்ந்தது அவருக்கு ஆச்சரியமல்ல.

"சாதாரண மக்களைப்போல் நான் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் பல நாட்கள் கிடந்து சாகும் சாவு எனக்கு நேராது. நான் தூக்குமேடையில் சாவேன்; அல்லது கொலைஞன் கையால் இறப்பேன்'' என்று பல வருஷங்களுக்கு முன்பே அவர் சொல்லியிருந்தார். 'ஆண்மையுள்ள மனிதன் எப்பொழுதும் மரணத்தை வரவேற்க வேண்டும். ஒரு லட்சியத்திற்காக அது நேரும்போது அதைவிடச் சந்தோஷப்படக் கூடியது வேறு ஒன்றில்லை' என்பது அவர் கொள்கையாகும். தவிர, அவருக்கு நேர்ந்த மரணம் வீரம் நிறைந்தது. ஆயுள் முழுதும் மகத்தானதொரு லட்சியத்திற்காக வாழ்ந்து கடைசியில் அந்த லட்சியத்திற்காகவே உயிர் நீக்கும் பேற்றை அவர் பெற்றார். உயிர் நீக்கும் தருணத்திலும் பகவானுடைய புனித நாமத்தைச் சொல்லிக்கொண்டே இறந்தார். அறிஞர்கள் அவரை உலகில் அவ்வப்போது தோன்றும் மகான்களில் ஒருவராகப் பேணுவார்கள். சரித்திரம் அவரைப் புத்தருடனும், இயேசுவுடனும் வைத்துப் போற்றும் என்றும் அழியாப் புகழை அவர் தேடிக்கொண்டார். அவருக்காக நாம் வருந்துவானேன்?

ஆம், அவருக்காக நாம் வருந்த வேண்டியதில்லை. நமக்காகத்தான் நாம் வருந்தவேண்டும். ஓர் அன்னிய அரசாங்கம் தனக்குப் பரம விரோதியாக இருந்த அவரைப் பல கஷ்டங்களுக்கிடையே சுமார் நாற்பது வருடங்கள் ஏதும் நேராமல் காப்பாற்றியது. ஆனல், நமது சுதந்திர அரசாங்கத்தாரும் மக்களும் ஓராண்டுகூட, நமக்குச் சுதந்திரம் வாங்கிக்கொடுத்த வீரத் தந்தையைக் காப்பாற்ற முடியவில்லையே என்று நினைக்கும்போதுதான் நமக்கு வருத்தமும் துயரமும் பீறிட்டுக் கொண்டு வருகின்றன. இந்து மதத்தைச் சார்ந்த சுமார் முப்பது கோடி மக்கள் அனைவரிலும் சிறந்த இந்து அவர். இந்து மதத்தைப் புனிதமாக்கவும் இந்து சமுதாயத்தை உயர்த்தவும் அவர் செய்த சேவை சொல்லற்கரியது. அங்ஙனம் இருக்க, அவர் ஓர் இந்துவின் கையால் மாண்டார் என்பது நமக்கு உலகுள்ளளவும் இருக்கக்கூடிய பழிச்சொல் அல்லவா? மகாத்மாஜி கொலையுண்ட செய்தி நொடிப்பொழுதில் ரேடியோ மூலம் உலக முழுதும் பரவிற்று. அமெரிக்கக் குடியானவன் ஒருவன் இதைக் கேட்டதும் சொன்ன வார்த்தைகள் மிகவும் பொருள் நிறைந்தனவாக இருந்தன. "அன்று யூதர்கள் ஏசுவைக் கொன்ற மாதிரி, இன்று இந்துக்கள் காந்தியைக் கொன்ருர்கள் போலும்" என்ருன் அவன். இந்த அவச்சொல்லுக்கு நாமும் நம் நாடும் மக்களும் என்றென்றும் ஆளானேம் என்பதற்காகத்தான் நாம் வருத்தப்பட வேண்டுமேயொழிய, மகாத்மாஜிக்காக நாம் வருத்தப்பட வேண்டிய அவசியமில்லை.

இச்சம்பவம் நேருவதற்குச் சில தினங்களுக்கு முன்பே மகாத்மாஜியின் பிரார்த்தனைக் கூட்டத்தில் வெடிகுண்டு வீசப்பட்டதென்ற செய்தி தினப் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அந்நிகழ்ச்சியும் அச்சமயத்தில் பஞ்சாப் முதலிய இடங்களிலிருந்து வந்த அகதிகளின் மத்தியில் உலாவி வந்த வெறுப்புப் பேச்சுக்களும் மகாத்மாஜியைச் சுற்றிலுமிருந்த நண்பர்கள் மனத்தில் மிகுந்த பீதியை உண்டாக்கின. ஆனல், மகாத்மாஜியோ இவற்ருல்

எள்ளளவும் பாதிக்கப்படாமலிருந்தார். இறைவனையே நம்பி எல்லாப் பாதுகாப்புக்களையும் மறுத்தார். ஸ்ரீமதி அமிருத் கவுர் அம்மையார் மகாத்மாஜியுடன் நெருங்கி வாழ்ந்து, அவர் அன்பைப் பெற்றவர்களுள் ஒருவர். அவர் மகாத்மாஜியிடம் வந்து கண்ணீர் வழிய, நாத் தழுதழுக்க, "பாபுஜி! தாங்கள் எல்லாப் பாதுகாப்புக்களையும் மறுக்கிறீர்களே! தங்களுக்கு ஏதாவது நேர்ந்தால் எங்கள் கதி என்ன?" என்று கதறி அழுதார். அதற்கு மகாத்மாஜி கூறிய விடை வியக்கத் தக்கதாக இருந்தது: "நீங்கள் உண்மையில் என்னைப் பின்பற்றுகிறவர்களாக இருந்தால், என் மரணத்திற்காக வருத்தப்படலாகாது. பிறக்கும் பொருள்கள் எல்லாம் இறந்தே தீரும். சாவு என்றும் வரலாம். அதைத் தவிர்க்க முடியாது. தவிர்க்க முடியாத காரியத்திற்காகப் புத்திசாலிகள் வருத்தப்பட மாட்டார்கள். மரணம் ஒரு விடுதலையாகும். எனவே, அது நேரும் போது சந்தோஷப்படவேண்டும்."

அவர் மேலும் சொன்னார்: "என்னை உண்மையாக நேசிப்பவர்கள் எனக்காக வருந்துவதையொழித்து, நான் கடைப்பிடித்த கொள்கைகளைப் பின்பற்றவேண்டும். இந்த ஸ்தூல உடம்பு நிலையற்றது; அழியக்கூடியது. ஆனால் நான் பின்பற்றி வந்த கொள்கைகள் அஹிம்சையும் சத்தியமும், அன்பும் சேவையும் என்றும் அழியாமல் நிலைபெற்றிருப்பவை, அவற்றில் நான் நித்தியமாக வாழ்கின்றேன். எனக்காகக் கோவில்கள் கட்ட வேண்டாம்; குளங்கள் வெட்ட வேண்டாம்; எனக்காகச் சத்திரங்களும் சாலைகளும் அமைக்கவேண்டாம். ஆனால் நான் பின்பற்றி வந்த உயர்ந்த கொள்கைகளை உங்கள் தினசரி வாழ்க்கைகளில் மேற்கொண்டு மனமார முயற்சி செய்வீர்களானால், அதுவே நீங்கள் எனக்குச் செய்யக்கூடிய கடமையாகும்."

அவர் சொன்ன இவ்வார்த்தைகள் பொன் எழுத்துக்களில் பொறித்துச் சாசுவதமாக ஞாபகத்தில் வைக்கவேண்டியவை; நம் ஒவ்வொருவர் மனத்திலும் ஆழ்ந்து பதிந்து ஆயுள் முழு

வதிலும் போற்றப்பட வேண்டியவை. இங்ஙனம் சொன்ன சில தினங்களுக்குள் அவர் சொன்னபடி நாம் நடக்கிறோமா என்று பரீட்சிப்பவரைப்போல் அவர் காலமாகிவிட்டார்.

இவ்வார்த்தைகளை எழுத எழுத என் எண்ணங்கள் பல ஆண்டுகளுக்கு முன் செல்லுகின்றன. நான் அவரை முதல் முதல் சந்தித்து இப்பொழுது சுமார் முப்பது ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. இந்த முப்பது ஆண்டுகளில்தான் நமது நாட்டிலும் சமூகத்திலும் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன! அக்காலத்தில் அன்னியர் ஆட்சி என்றும் சாசுவதம் போல் நிலை நிறுத்தப்பட்டிருந்தது. மக்கள் பயம் நிறைந்து, நம்பிக்கையின்றிச் சக்தியற்று இருந்தனர். நமது சமூகத்தில் தீண்டாமை போன்ற கொடிய பழக்கங்கள் பல மலிந்திருந்தன. கோடிக்கணக்கான மக்கள் தங்கள் சுயமரியாதையை மறந்து மிருகங்கள்போல் வாழ்ந்துவந்தனர். இந்தியா அடிமை நாடாகக் கருதப்பட்டு வெளிநாடுகளில் இந்தியர் அடிமைகளாக நடத்தப்பெற்றனர்.

அக்காலத்திற்கும் தற்கால நிலைமைக்கும் எவ்வளவு வித்தியாசம்! அசைக்க முடியாதென்று கருதப்பட்ட அன்னிய அரசாட்சி அசைந்து கொடுத்து அகன்றது. மக்கள் மனத்தில் குடிகொண்டிருந்த பயமும் பீதியும் போய், அவற்றுக்குப் பதிலாகத் தெளிவும் தைரியமும் ஏற்பட்டிருக்கின்றன. ஆயிரக்கணக்கான வருடங்களாக, இந்தியாவின் சாபம்போல் இருந்த தீண்டாமை மறைந்து வருகிறது. மக்கள் மனத்தில் புதிய உற்சாகமும் தன்னம்பிக்கையும் பிறந்திருக்கின்றன. நாடு சுதந்திரம் பெற்று நம் ஸ்தானிகர்கள் உலகில் எல்லா நாடுகளிலும் இருந்து இந்தியாவின் அலுவல்களைக் கவனித்து வருகின்றனர். அவர்கள் இருக்கும் இடங்களில் எல்லாம் நம் தேசியக் கொடி கம்பீரமாகப் பறந்துகொண்டிருக்கின்றது. இந்திய மக்கள் எங்கும் சுதந்திர மக்களென்ற மதிப்பைப் பெற்று, கௌரவத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். இவை அனைத்துக்கும் மேலாக, இரண்டு யுத்தங்களால் எல்லையில்லாத்

துன்பங்களுக்கும் கொடுமைகளுக்கும் ஆளான உலக மக்கள் உலகத்தில் நிரந்தரமான சமாதானத்தை நிலைநாட்ட இந்தியா உலகிற்குக் காட்டிய அஹிம்சா மார்க்கத்தை எதிர்நோக்கி யிருக்கின்றனர். இவை அனைத்திற்கும் அடிப்படைக் காரண மான காந்திஜியை இந்திய நாட்டின் பிதா என்று அறிஞர்கள் அழைப்பது ஆச்சரியம் அல்ல. இவ்வளவு மகத்தான காரியங் களை ஒரு மனிதன் சாதித்ததுதான் உலகில் என்றும் வியக்கத் தக்க ஆச்சரியங்களில் ஒன்றாக இருக்கும்.

புரட்சி, புரட்சி என்று மக்கள் பேசினார்கள். ஆனால், மிக வேகமாக அதைப்பற்றிப் பேசியவர்கள் மூலம் அப்புரட்சி உண் டாகவில்லை. அன்பே உருவெடுத்த ஒரு மகான் மூலம் அப் புரட்சி நேர்ந்தது. அவர் கத்தி எடுக்கவில்லை; ரத்தம் சிந்த வில்லை; அவர் போர் தொடுக்கவில்லை; அணுக்குண்டு போட வில்லை. ஆனால் இவை அனைத்தையும் விடப் பெரிய, நிரந்தர மான புரட்சியை அவர் மக்கள் மனத்தில் உண்டாக்கினார். யுத்த மின்றி, ரத்தமின்றி இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற்றார் என்பதல்ல அவருடைய பெருமை. உலகு உய்ய அன்பு நெறி யொன்றைக் காண்பித்தார் என்பதே அவருக்கு அனைத்திலும் மேற்பட்ட பெருமையாகும். இத்தகைய செயற்கரிய காரியங் களைச் செய்ய அன்பும் தூய்மையும் பக்தியுமே அவருக்கு ஆயுதங்களாக இருந்தன. அவருக்குமுன் தோன்றிய மகான் கள் தனி மனிதர்கள் அன்பு நெறியைப் பின்பற்ற வழிகாட்டி னார்கள். மகாத்மாஜி சமூகங்களும் தேசங்களும் இந்நெறியைப் பின்பற்றி மேம்பாடு அடைய முடியுமென நிரூபித்தார்.

தற்காலத்தில் இந்தியாவில் வசிப்பவர்கள் பெரிய பேறு பெற்றவர்களாவார்கள். நாம் மாபெரும் புரட்சிக் காலத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்பது மாத்திரமல்ல. இம் மகத்தான புரட்சிக்குக் காரணமாக இருந்த அம்மகான் வாழ்ந்த காலத்தில் நாம் பிறந்து வளர்ந்தோம். அவர் சுவாசித்த காற்றை நாமும் சுவாசித்தோம். அவர் திருவாய் மலர்ந்த சொற்களைக் கேட்டோம். அவருடன் வாழ்ந்தோம். அவர்

ஆரம்பித்து நடத்திய புனிதமான சுதந்திரப் போரில் கலந்து கொள்ளும் பேற்றையும் அடைந்தோம் அதனுல் நாமும் தூய்மை அடைந்து சக்தி பெற்ருேம்.

மந்திர சக்தி பெற்ற ஒருவன் தொட்ட மண் பசும் பொன்னுகும், கல் மேலான வைரமாகும் என்ற பழங்கதை உண்டு. இதை உண்மையென்று நம்பமுடியுமா? ஆம்; ஸ்தூல உலகில் இவ்வாறு நேரமுடியாதுதான். ஆனுல் மகாத்மாஜி யுடன் வாழ்ந்து அவர் செய்த அற்புதங்களைப் பார்த்தவர்கள் இதன் உண்மைப் பொருள்களை உணருவார்கள். மகாத்மாஜி யுடன் சேர்ந்து, சுதந்திரப் போரில் ஈடுபட்டுப் பெரிய பெரிய காரியங்களைச் சாதித்தவர்கள் பலர். அவர்களை விசாரித்தால் அப்பழங்கதையின் பொருள் புலப்படும். அவர்களில் பெரும் பான்மையோர் வெகு சாதாரண மனிதர்கள்; உயர்ந்த கல்வி பெருதவர்கள்; எளிய குடும்பங்களில் பிறந்தவர்கள்; தரித்திரத் தின் கொடுமையை அனுபவித்தவர்கள். அவர்களிற் பலர் இப்பொழுது புகழும் பெருமையும் பெற்று வாழ்கிருர்கள். இதற் குக் காரணம் மகாத்மாஜியின் உபதேசங்களைப் பின்பற்றிச் சுதந்திரப் போரில் ஈடுபட்டதுதான். காந்தத்திற்கு அருகி லிருக்கும் வெறும் இரும்புகூட அக்காந்தத்தின் சக்தியை அடைவதுபோல் அவர்களும் அவருக்கிருந்த சக்தியைப் பெற் றுப் பலமடைந்தார்கள். அவரைப் பின்பற்றிய குழந்தைகளும் பெண்களுங்கூடத் தைரியமும் சக்தியும் நிறைந்து பெரிய காரியங்களைச் சாதித்தார்கள். இன்று நாடு முழுவதிலும் பெரிய பொறுப்புக்களை ஏற்றுப் பல துறைகளிலும் காரியங்கள் நடத்தி வருபவர்கள் அனைவரும், அவருடன் பணியாற்றி அதன் மூலம் பலம் பெற்றவர்கள் ஆவார்கள்.

மகாத்மாஜி உடல் தாங்கி இவ்வுலகில் இருந்தபோது நாடு முழுவதும் சுற்றித் தம் உயர்ந்த லட்சியங்களைப் பரப்பி வந்தார். இப்பரந்த நாட்டில் அவர் பேசாத இடம் இல்லை எனலாம். மூலை முடுக்குகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான கிராமங்களுக்குச் சென்றிருக்கிருர். கோடிக்கணக்கான

மக்களைக் கண்டு பேசியிருக்கின்றார். நம் நாட்டின் பாலும் நம் நாட்டு மக்கள் பாலும் இருந்த அன்பே அவரை இங்ஙனம் செய்யத் தூண்டிற்று. அவர் மறைந்த பிறகும் அவர் அஸ்தியும் சாம்பரும் நாட்டின் எல்லாப் பாகங்களுக்கும் அனுப்பப் பெற்று, எல்லாப் புனித தீர்த்தங்களிலும் கரைக்கப்பட்டன. அவர் மறைந்து சுமார் இரண்டு ஆண்டுகள் கடந்துவிட்டன. நாம் அவருக்குச் செய்யவேண்டிய கடமை என்ன?

இதை ஒவ்வோர் இந்திய மகனும் மகளும் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். சுதந்திர இந்தியா உதயமாகச் செய்து, அதை நமக்களித்து, அத்துடன் நமக்கு உயர்ந்த லட்சியங்களையும் ஊட்டிய நமது நாட்டின் பிதா மகாத்மா காந்திக்கு நாம் செய்யவேண்டிய கைம்மாறு என்ன? இது சம்பந்தமாக அவர் தம் இறுதிக் காலத்தில் சொன்ன வார்த்தைகளை நாம் ஞாபகப்படுத்திக்கொள்வோமாக.

“என் உடம்பு அநித்தியமானது; அழியக்கூடியது. ஆனால் நான் பின்பற்றிவந்த லட்சியங்கள் நித்தியமானவை; என்றும் அழியாதவை. அம்மகத்தான லட்சியங்களில் நான் நித்தியமான வாழ்வு பெற்றிருக்கிறேன். நான் பின்பற்றி வந்த உயர்ந்த கொள்கைகளை உங்கள் தினசரி வாழ்க்கையில் பின்பற்றுவீர்களானால், அதுவே நீங்கள் எனக்குச் செய்யக்கூடிய கடமையாகும்” என்று அவர் சொன்ன அமுதமொழிகள் நமது மனத்தில் நிலைநிற்கட்டும்.

பிரார்த்தனையின்போது மகாத்மாஜி மிகப் பிரியமாகக் கேட்டுவந்த ஆங்கிலப் பாட்டு ஒன்று உண்டு. அதன் மொழி பெயர்ப்புப் பின்வருமாறு :—

அருள் சோதியே, வழிகாட்டு; என்னை
அழைத்துமே, ஐய, சென்றிடு.

இருள் சூழுதே, அப்பா, எங்கு நான் செல்வேன்?
இல்லம் தூரத்திலாச்சுதே.

மருளும் உள்ளன என்றன் பாதங்கள்.
மன்னவா, அருள் செய்குவாய்!

மகாத்மாஜி உயிருடன் இருக்கும்போது அவர் இறைவனின் ஸ்தூலச் சின்னமாக விளங்கி ஒளி கொடுத்து வந்தார். அவர் உடல் மறைந்த பிறகு, அவர் கொடுத்துவந்த ஒளி இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கிறது. இன்று அவர் இறைவனுடன் இரண்டறக் கலந்து நித்திய வாழ்வு பெற்று, அருட் சோதிப் பிழம்பாக விளங்குகிருர். நாமும் அவரை நோக்கி, "அருட்சோதியே, வழிகாட்டு" என்று பிரார்த்தித்து, அவர் காட்டிய உயர்நெறியைப் பின்பற்றி உய்வோமாக!




